# என் முருகனுக்காக

(கந்த புராணச் சுருக்கம்)

இரண்டாம் பாகம்

We acknowledge with thanks
**Thirumala-Thirupathi Devasthanams**
for the grant of financial Assistance to bring out this book

துரை. சுந்தரேசன்

கிடைக்குமிடம்

மணவை ப. கீரன்

தணிகை' 135, சாந்தி நகர் முதல் தெரு,
குரோம்பேட்டை, சென்னை - 600 044.

*Title*

En Muruganukkaga - Volume II
"For my Lord Muruga" based on Kandapuranam

First Edition : June, 2000

Pages : Demy 198+10+படங்கள் 14 பக்கம்

Author : D. Sundaresan, I.A.S.

Paper used : Maplitho

No.of copies : 1000

Typeset : PADMA GRAPHICS
CHENNAI - 600 034
Phone 8270648

Price : Rs.90/-

Printed at : Kavikuil Printers
47, Nallathambi Street
Triplicane
Chennai-600 005

*Copies available with*
Manasai Pa. Keeran

'Thänighai' 135, Shanthi Nagar Street
Chromepet, Chennai - 600 044

# முன்னுரை

ஏன் முருகனுக்காக (கந்த புராணத் தொகுப்பு) என்ற நூலில் இரண்டாம் பகுதி வெளிவருகிறது. முருகப் பெருமான் திருச்செந்தூரிலே படைவீடு அமைத்து சூரபத்மனுடன் போர் செய்து வெற்றி காணும் நிகழ்ச்சிகளையெல்லாம் ஒன்றாகத் திரட்டிய தொகுப்பு இதுவாகும். சூரபத்மனை வெற்றி கண்ட பிறகு தன்னுடைய படையினரும், தேவர்களும், மற்றவர்களும் சூழ்ந்து வர முருகப்பெருமான் திருப்பரங்குன்றத்தை அடைந்து தெய்வானையம்மையைத் தன் பெற்றோர் முன்னிலையில் திருமணம் செய்து கொண்ட பகுதியையும், திருத்தணிகை மலையிலே தங்கி இருந்தவர் வேட்டுவக் குறத்தி வள்ளியம்மையை மணந்த கதையையும் இத்தொகுப்பில் கண்டு இன்புறலாம். மேலும், முருகப் பெருமானுடன் தொடர்புடைய பல செய்திகளையும் தொகுத்து இத்தொகுப்பில் வழங்கியிருக்கிறேன். அச்செய்திகளைப் படிப்பவர்கள் மிக்க மகிழ்ச்சியை அடைவார்கள் என நான் நம்புகிறேன்.

இத்தொகுப்பை வெளிக்கொணரப் பலரும் எனக்கு உதவி செய்திருக்கிறார்கள். ஒவ்வொருவரையும் தனிப்பட்ட முறையிலே குறிப்பிடாமல் அவ்வளவு பேர்களுடைய உதவிகளையும் இச்சமயத்திலே நான் நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

135, கற்பகம் அவின்யூ,
சென்னை - 600 028.
தொலைபேசி எண் : 4951089

துரை. சுந்தரேசன்

*****

# பதிப்புரை

**ஆறுமுக நாவலர்**, ஆன்மீக ஆழியாகவும் கல்விக் களமாகவும் விளங்கும் சிதம்பரம் திருத்தலத்தில் இருந்துகொண்டு அரும்பெரும் நூல்களைப் பதிப்பித்து வந்ததைத் தமிழுலகம் நன்கு அறியும்.

என்னைக் கல்வியிலும் இலக்கியத்திலும் மனிதத்திலும் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் கற்ற நாளில் இருந்து தன் பிள்ளைபோல் பன்முக ஆற்றல் - பண்புகளில் சிறக்க வளர்த்த பேராசிரியர் **ந.ரா. முருகவேள்**, ஆறுமுக நாவலர் மிகப்பெரும் நூலை ஒரே ஒரு பிழையுடன் பதிப்பித்ததாகக் கூறி வியந்துள்ளார். நாம் கண்களில் எவ்வளவுதான் விளக்கெண்ணெய் விட்டுக் கொண்டு பிழை திருத்தினாலும் பல பிழைகள் நேர்ந்து விடுகின்றன. இந்நூலில் அப்படி நிகழாமல் தவிர்க்க நண்பர் பலரும் மிகப் பெரிதும் முயன்றுள்ளனர்.

அரசுப் பணியுடன் தமிழ் பற்றியும், குடும்ப-சமூக வாழ்வு பற்றியும், ஆன்மீகம் பற்றியும் நூல்கள் படைப்பதையும் இருகண்களைப் போல் பேணி வரும் **திரு. துரை. சுந்தரேசன்**, இ.ஆ.ப. அவர்கள் உங்கள் கைகளில் தவழும் **என் முருகனுக்காக** நூலைப் பல்லாண்டுகளாக மிகுந்த ஈடுபாட்டுடன் உருவாக்கிச் செப்பனிட்டு வழங்கியிருக்கின்றார்.

இச்சிறந்த திருப்பணியில் **கவிஞர்கோ ஞா. மாணிக்கவாசகன்**, **கவிஞர் குடந்தை கீதப்பிரியன்**, ஓவியர்கள் **திரு. அரங்கநாதன்**, **ஓ. கிருஷ்ணராஜ்** ஆகியோருடன் நானும் ஈடுபட்டுப் பங்கு பணி ஆற்ற வாய்த்தமையைப் பெரும்பேறாகக் கருதுகின்றேன்.

தமிழுலகம் எங்களின் நூல்களை என்றென்றும் வரவேற்றுப் போற்றியதைப் போல இச்சிறந்த ஆக்கத்தையும் போற்றும், என விழைகின்றோம்.

**- பதிப்பாளர்.**

*****

# வாழ்த்துரை

**இ**ந்திய ஆட்சியர் பணி நிலையில் இருந்து எழுத்துலகிலும் தன்னிகர் இல்லாத உயர் படைப்புகளைச் செய்தவர்களில் அமரர் **பாஸ்கர தொண்டைமானுக்கு** அடுத்துத் திரு. **துரை. சுந்தரேசன்**, இ.ஆ.ப. அவர்களாகத்தான் இருப்பார், எனக் கருதுகின்றேன். முன்னவர் **வேங்கடம் முதல் குமரி வரை** திருத்தலங்களைப் பற்றி எழுதிய ஆன்மீகத் தலங்கள், திருக்கோவில்கள் தொடர்புடைய கட்டுரைகளைத் தொடர்ந்து பத்திரிகைகளில் எழுதி நூல்களாக வெளியிட்டவர். பின்னவரோ, பாரத நாடு குடியரசு ஆனதற்கு முன்னும் பின்னும் தமிழை ஆட்சி மொழியாக அரசு கட்டிலில் வீற்றிருக்கச் செய்து வரும் முயற்சிகளை, அவை பற்றிய வரைவுகளைப் பல தொகுதிகளாகத் தொடர்ந்து தொகுத்துவருகிறார்.

**தமிழ் ஆட்சி மொழி: ஒரு வரலாற்று நோக்கு** (தமிழக அரசின் பரிசு பெற்றது) நூலைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டது. **தமிழ் ஆட்சி மொழி: மாநாடுகள், இதழ்கள், தமிழ் ஆட்சி மொழி : ஒரு வரலாற்று நோக்கு, 1960-65** (தமிழக அரசின் பரிசு பெற்றது) என்ற மூன்று தொகுதிகளை ஏற்கனவே வெளியிட்டிருக்கின்றார்.

இன்னொருவரின் செயலை ஒப்புமைப் படுத்திப் பேசுவது நாகரிகம் அன்று, என்று சொல்லப்பட்டாலும், தமிழ் ஆட்சி மொழி பற்றி அனைத்துப் பரிமாணங்களிலும் ஆய்ந்து தொகுத்து வருபவர் இவரே, என்பதில் மிகையில்லை.

இன்னொரு தொகுதி உருவாகிக் கொண்டு இருக்கிறது.

**என் குழந்தைகளுக்காக! - என் நண்பர்களுக்காக! - என் உறவினருக்காக! - என் தெய்வங்களுக்காக!** - என்று தன்னுடன் தொடர்புள்ளவர்களைப் பற்றிய நூல்களையும் உருவாக்கி இருக்கின்றார்.

**என் தலையில் தெறிக்கும் பூக்கள், விடிந்தது** - என்னும் இரண்டு தொகுதிகளாக இவரின் கவிதைகள் இதுவரை வெளிவந்துள்ளன.

கந்த புராண அடிப்படையில் இவர் உருவாக்கியுள்ள இந்நூல், என் முருகனுக்காக (கந்த புராணச் சுருக்கம்) பல்லாண்டுகளாக ஈடுபாட்டுடன் வாழ்க்கையின் இலக்காகத் தீட்டி இத்துறையில் ஒரு சிறந்த படைப்பாக ஆக்கி இருக்கின்றார். தம் வாழ்வில் ஒரு சிறந்த ஆக்கமாகக் குழந்தையைப் போற்றிப் பேணி வளர்ப்பதைப் போலத் தாய்மை உணர்வுடன் இன்று தமிழர் கரங்களில் இந்நூலைத் தவழச் செய்திருக்கின்றார்.

இந்திய ஆட்சியர் பணியினராகப் பெரும் பொறுப்புகளை ஆற்றிக் கொண்டே சேக்கிழார் போல இந்த அரிய ஆன்மீகப் பணியையும் தொடர்ந்து செய்து வருவதனை மனமாரப் பாராட்டுகின்றேன்.

இப்பணி தொடர்க! வெல்க!

அன்புடன்,

**மனகை ப. கீரன்**

* * * * *

# இரண்டாம் பாகம்

## பொருளடக்கம்



*****

# மூன்றாம் பாகம்

## பொருளடக்கம்

*****

## நூலாசிரியரின் நூல்கள்

1. **தமிழ் ஆட்சி மொழி**
   ஒரு வரலாற்று நோக்கு
   **தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது**

2. **தமிழ் ஆட்சி மொழி**
   ஒரு வரலாற்று நோக்கு : மாநாடுகள், இதழ்க

3. **என் தலையில் தெறிக்கும் பூக்கள்**
   கவிதைகள்

4. **என் குழந்தைகளுக்காக**

5. **உன் நண்பர்களுக்காக**

6. **என் உறவினருக்காக**

7. **என் தெய்வங்களுக்காக**

8. **விடிந்தது**
   கவிதைகள்

9. **தமிழ் ஆட்சி மொழி**
   ஒரு வரலாற்று நோக்கு, 1960 - '65
   **தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது**

# என் முருகனுக்காக

## 1. ஏம கூடம்

**க**திரவன் உதயமலையினை அடைந்த போது அரியணையில் வீற்றிருக்கின்ற ஆறுமுகங்களை உடைய முருகப்பெருமான், நான்முகன், திருமால், இந்திரன், தேவர்கள், முனிவர்கள் ஆகிய அனைவரும் கேட்க, வரத்தில் மிக்க வீரவாகு தேவரைப் பார்த்து ''பாவங்களையே செய்து கொண்டிருக்கின்ற சூரபன்மனும், அவுணரான அனைவரும் அழிந்திடவும், தேவர்களின் துன்பமானது நீங்கவும், திருமகள் வீற்றிருக்கின்ற வீரமகேந்திர புரத்துக்கு இப்போது போவோம். ஆதலால் விரைவாக நம் தேரைக் கொண்டு வருக!'' என்று பணித்தருளினார்.

வள்ளலான முருகப் பெருமான் அதைச் சொல்லியருளவும், திருமால், நான்முகன், இந்திரன் முதலாக உள்ள தேவர்கள் எல்லாம் அதனைக் கேட்டு, மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி, எம் துன்பம் நீங்கியது; நீங்கியது!'' என்று துள்ளினர். ஆடிப்பாடி முருகனின் திருவடிகளைத் தம் முடியில் சூடிக் கொண்டனர். தேவகணத்துக்கு தலைவரான வீரவாகு தேவர், 'மனவேகம்' என்ற பொன் தேரையும் பாகனையும் முருகப் பெருமான் முன்பு கொண்டு வந்து, நிறுத்தினார். ஆறு சூரியர்கள் தமக்குள் வேறுபாடின்றி ஒன்றுபட்டு விளங்கி வந்து ஏறினாற் போல், ஆறு முகங்களை உடைய இறைவன் அத்தகைய 'மனவேகம்' என்ற தேரின் மீது ஏறியருளினார். ஏறியருளியத் தம்மைச் சுற்றி இருப்பவரை எல்லாம் பார்த்து ''பெரிய அலைகளையுடைய கடலின் நடுவில் அளவில்லாததாய்ச் சிறப்புடன் விளங்கும் மகேந்திரம் என்ற பெயர் கொண்ட அழகிய நகரத்திற்கு நாம் சூரபன்மனை அழிப்பதற்காகப் போவோம். நீங்கள் எல்லாம் உங்களது ஊர்திகளில் விரைந்து ஏறி வருவீராக!'' என்று உரைத்தருளினார். இவ்வாறு ஆறு முகங்களைக் கொண்ட இறைவன் உரைத்தருளவும், அப்பணியை செய்ய இசைந்து, நான்முகன் அன்னப் பறவையிலும், பாற்கடலின் மீது பள்ளி கொள்ளும் திருமால் ஒப்பில்லாத கருடன் மீதும், தேவர்க்கு மன்னனான இந்திரன் விமானத்தின் மீதும், சொல்லப்படுகின்ற மற்றத் தேவர்கள் தம்தம் ஊர்திகளிலும் அழிவில்லாத இலட்சம் வீரர்களும், அவர்கள் அல்லாத எட்டுப் பேர்களும், மந்திர மலை போன்ற வீரவாகு தேவரான வன்மையாளரும், சக்கரங்களையும் வெற்றியுடைய குதிரைகளையுமுடைய தேர்களில் வெவ்வேறாக ஏறி எவர்க்கும் சிந்தையாலும் எட்டாத தேவர்க்குத் தலைவரான இறைவனைச் சூழந்தனர். சுப்பிரன், மேகமாலி, சுவேதசீர்ஷன், கபாலி, அப்பரசித்து,

சித்திராங்கன், சுவாலதாலு, ஒப்பில்லாத வச்சிரன், வீமன், உக்கிரன், உக்கிரேசன், பிப்பலன், நந்திசேனன், பிரமசன், பதுமன், கராளன், தண்டன், பத்திரன், பரிகநேமி, உதவகன், புட்பதந்தன், உருத்திராகாரன், வீரன், மதிசயன், கேதுமாலி, வக்கிரன், பிரமகேசன், அதிபதி, கலிங்கன், கோரன், அச்சுதன், அசலன், சாந்தன், சித்திரசேனன், பூரி, சுசீலன், மாசயன், சிங்கன், உத்தர சங்கன், உபதிஷ்டன், சயன், ஈசன், முத்தகன், மதங்கன், சண்டி, மகாபலன், சுவேதன், நீலபத்திரன், சுவாகு, அண்டாபரணன், காகபாதன், பிங்கலன், சமானன், மாயன், விளங்பா நின்ற நிகும்பன், கும்பன், சங்கபாலன், விசாகன், சததாவன், அயக்கிரீவன், சகத்திரபாணி, அயுதாட்சன், அனந்தன், வாமன், மங்கல கேசன், சோமன், வச்சிரமாலி, சண்டன், அசமுகன், சரபன், குந்தன், ஆடகன், கவந்தன், மேகன், விசயன், வித்துருமன், தண்டி, வியாக்கிரன், காலபாசன், தசமுகன், குமுதன், பானு, தனஞ்சயன், இடபரூபன், சசிமுகன், அனலகேசன், சுபத்திரன், கேது, மோகன், மத்தன், உன்மத்தன், நந்தி, மநோபவன், வாயுவேகன், சகத்திர பாதன், பானுகம்பன், பதங்கன், சுத்தன், அநிகன், சீதன், சுநாதன், சுமாலி, மாலி, அத்திரி, அசுரகாலன், அரிகேசன், காவலகேசன் என்று இரண்டாயிரம் வெள்ளம் பூதப் படைகளின் தலைவர்களான நூற்றெட்டு பெயர்களும் எத்தகைய இயல்பையுடையவர் என்றால், மேலே எழுந்து பொங்கும் சினத்தையுடையவர்கள்; எல்லா உலகங்களையும் அழிக்க வேண்டும் என்று நினைத்தால் ஒரு நொடிப் போதில் அழிக்க வல்லவர்கள்; சிறந்த வெற்றியுடையவர்கள். ஐயத்தினுக்கு இடம் இல்லாத வலியர்களாகிய இவர்கள் முருகப் பெருமானைச் சூழ்ந்து நின்றனர். இருள் பரந்த கடலால் சூழப்பட்ட உலகமும், மலைக் கூட்டங்களும் நடுங்க ஆரவாரம் செய்து இரண்டாயிரம் வெள்ளப் படையும் போருக்குப் புறப்பட்டது. 'கல்' என்று ஒலிக்கும் பேரிகை, கரடிகை, துடி, எக்காளம், கல்லரி, திமிலை, தக்கை, தண்ணுமை, படகம், கொம்பு, வன்மையான இயல்புடைய உடுக்கை, சங்கு, பெரிய குடமுழவு முதலான பலவகையான வாத்தியங்கள் பல கோடி பாரில் எங்கும் ஒலித்த வண்ணம் சென்றன. பூதப் படை வெள்ளமானது பெரிய கடலின் வழியில் செல்லக், கொடிய ஆற்றலையுடைய வீரவாகு தேவரும், துணைவர் முதலான எல்லாரும், நான்முகனும், திருமாலும், மற்றும் இந்திரனும் தேவர் பலரும் சூழ்ந்து வர ஆறுமுகப் பெருமான் அழகிய திண்ணிய தேர்மீது வான் வழியாகச் சென்றார். இவ்வாறு கூர்மையான வேலையுடைய முருகப் பெருமான், இரண்டாயிரம் வெள்ளம் பூதங்கள் ஆரவாரத்துடன் பக்கத்தே செல்ல, ஒலிக்கின்ற கடலின் மேற்பக்கத்து

எல்லையே வழியாகச் சென்று, வீரவாகு தேவரால் முன்பு துன்பம் அடைந்த பழைய இலங்கை மலையையும் கடந்து, கரிய மலை போல விளங்கும் சூரபன்மன் இருக்கின்ற மகேந்திர நகரின் எதிரில் சென்றார். முருகப் பெருமான் அங்குச் சேர்ந்த போது பக்கத்தில் வந்து கைகுவித்து வணங்கி, வாள், வில், கதை, நன்மை கொண்ட சங்கு சக்கரம் என்ற ஐம்படைகளை ஏந்திய திருமாலும், நான்முகனும், இந்திரனும் செய்யத் தக்கதை ஆராய்ந்து "பெருமானே! இதனைக் கேட்டருளுக! சூரபன்மனின் நகரமானது கொடிய தன்மையுடைய நீசர் வாழ்கின்றதால், அங்கு நாம் செல்வது முறையன்று. அந்த நகரத்துக்கு அடுத்துள்ள இங்குப் பாடி வீடுகளை அமைத்துக் கொண்டு இருந்த பின்பு, ஐயனே! செய்யக் கூடிய செயலை நன்கு ஆராய்ந்து வேண்டியவற்றைச் செய்வீராக!" என்று சொல்ல, கிரவுஞ்ச மலையை அழித்த முருகப் பெருமான் முதலானவர் உரைத்தலைக் கேட்டு உணர்ந்து ஏற்று, 'இது நன்று' என்று அருளி, தேவதச்சனை மிக்க அன்புடன் விளித்து "நீ இங்கு விரைவாகப் பாசறை ஒன்றை அமைப்பாயாக!" என்று சொல்லவும், அதைக் கேட்ட அவன் உள்ளம் மகிழ்ந்து சொல்லலானான். தேவதச்சன் மாடங்கள், கூடங்கள், மண்டபங்கள், வளமுடைய சோலைகள், பொய்கைகள், பெருமை உடைய கோபுரங்கள், விளங்கும் வீதிகள், ஒரு திக்குக்குக் கொடியாகச் செய்து (பல கோடியாகப் படைத்து) மகேந்திரபுரம் என்ற கோநகரத்துக்கு மாறான வேறோர் கோநகரத்தைப் படைத்து, விரும்ப த் தக்க 'ஏமகூடம்' (கதிர்காமம்) என்று பெயர் ஒன்றையும் சூட்டினான். அந்த ஏமகூட நகரில் எல்லையில்லாத பூதகணப் படையினரைத் தெருதோறும் இருக்கச்செய்து, வெற்றியுடைய இலட்சத்து ஒன்பது வீரரோடும், நான்முகன் முதலான தேவரோடும், கோயிலுக்குள் சென்று, 'இந்திரம்' என்ற நூலின் இலக்கணப்படி செய்துள்ள சிங்கங்கள் தாங்குகின்ற அரியணையில் அமர்ந்தருளினார் முருகப் பெருமான். இலட்சத்து ஒன்பது வீரரும் திருப்பரங்குன்றத்திலிருந்து உடன் வந்த பராசரான் மைந்தர்கள் அறுவரும் அன்பின் துதித்து நிற்க, தேவர்கள் முன்பு செய்தது போல முறைப்படி பணிகளைத் தமக்குச் செய்ய, ஆறுமுகப் பெருமான், இன்பத்துடனே ஏமகூடமான அழகுடைய பாடி வீட்டில் தங்கியருளினார்.

## 2. முருகன் வரவறிதல்

முழுமுதற் பொருளான முருகப் பெருமான் மகேந்திரத்துக்கு வந்ததும், பாடிவீடு அமைத்துத் தங்கியிருப்பதும் முதலானவற்றை அறிந்து நாரதர் வானை அளாவி எழுந்த மதில்கள் சூழ்ந்த மகேந்திர நகரத்தில் போய்,

இன்பம் பொருந்திய சுவர்க்க நகரத்தைவிட மேலான சூரபன்மனின் அரண்மனைக்குள் சென்றார். தவத்தில் மிக்க நாரத முனிவர் உள்ளே போய், கொடிய சூரபன்மன் மிகவும் உயர்ந்த செல்வங்களுடன் வீற்றிருத்தலைக் கண்டார்.'விரைவில் இவன் மூங்கில் போல இறந்து அழியப் போகிறான்' என்பதை உள்ளத்துள் எண்ணி, வாயால் தகுந்த ஒரு வாழ்த்தைக் கூறிக்கொண்டு அச்சூரபன்மனை நெருங்கினார். உள்ளங்கைகளை மலர்த்தி வாழ்த்துக் கூறிய நாரத முனிவரைச் சூரபன்மன் பார்த்து, "நீ எங்கே இருப்பவன்? இங்கு வந்த காரணம் யாது?" என்று வினவவும் "உமையம்மையை ஒரு பாகத்தில் கொண்டிருக்கும் சிவபெருமான் வீற்றிருக்கும் வடக்கில் உள்ள பெருமையையுடைய கயிலாய மலையில் நான் வாழ்பவன் ஆவேன். அங்கிருந்து கொண்டு உம்குலமானது மேலோங்கிட வேண்டும் என்று நாள்தோறும் தவத்தை மேற்கொள்பவன்!. நான் பொய் சொல்ல மாட்டேன். கொடிய காமம் முதலானவற்றை ஒழித்துச் செய்யக்கூடிய பல தவங்களைச் செய்துள்ளேன். தேவர்களுக்கெல்லாம் துன்பத்தைச் செய்வேன். உங்கள் குல ஆசாரியரான சுக்கிராச்சாரியாருடன் நட்பு உடையவன். உன்னை அடைந்து ஒரு செய்தியைச் சொல்லும் பொருட்டாக இங்கு வந்துள்ளேன்" என்று தொடங்கிய நாரதமாமுனி முருகப் பெருமான் பாடிவீட்டை அமைத்துப் படைகள் யாவும் பக்கத்தே பொருந்தியிருக்க ஏமகூடத்தில் தங்கியுள்ளார். இவற்றையெல்லாம் பார்த்தேன் என்று கூற, அவுணரின் தலைவரான சூரபன்மன் தீயைப்போலச் சினம் கொண்டு, சிரித்துப், பின்வரும் இவற்றைச் சொல்லத் தொடங்கினான். "வானில் பவனி வருகின்ற கதிரவனைச் சினந்து சிறையில் அடைவித்த என் மகனான பானுகோபனை நால்வகைப் படைகளுடன் அனுப்பி, வெற்றி பொருந்திய போரால் சிறந்த பூதப் படையினரையும் மற்ற வீரர்களையும் கொல்லச் செய்வேன். அம்முருகனையும் விரைவில் வெற்றி கொள்வேன். இதை நீ காண்பாய்" என்றான். அசுரமன்னன் சூரபன்மன் இப்படி சொல்லவும், நாரதமுனிவர் இவற்றையெல்லாம் கேட்டு "இது நல்லது! காலம் தாழ்த்தாதே! இப்போதே உன் நகரைச் சூழ்ந்து போராட வந்துள்ளவனுடன் போரிட நின் படையை அனுப்புவாயாக! நான் உனக்கு வெற்றி உண்டாகத் தவம் செய்யப் போகின்றேன்" என்று கூறிவிட்டு வான்வழியே சென்றார். நாரதமுனிவர் இத்தகையவற்றை சொல்லி நகைப்புடன் சென்றிடவும், வீரர்களுள் ஆற்றல் மிக்க அச் சூரபன்மன், தன்பக்கத்தில் நின்ற 'கோரன்' 'உற்கோரன்' என்ற ஒற்றரைப் பார்த்து, "நீங்கள் சென்று கடல் மன்னனான வருணனைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்!"

என்றான். சூரபன்மன் ஆணையிடவும், அந்த ஒற்றர் இருவரும் விரைவாக ஓடிச்சென்று அலைவீசும் கடல் மன்னனான வருணனை வலிய ஆற்றலுடன் பிடித்து விரைவாய்த் தம் மன்னவன் முன் கொண்டு வந்து சேர்த்தனர். சேர்க்கச் சூரபன்மன் சினம் கொண்ட மனத்தை உடையவராய் கையால தொழுது வருத்தம் மிக்கு நடுங்கி நின்ற வருணனைப் பார்த்துத் தீத்தோன்ற விழித்து "கடல் மன்ன! கேள். நான்முகனும், திருமாலும், நன்றாக அறிந்து கொள்ளாதபடி ஒளித்துக் கொண்டவனான சிவபெருமானின் மகனான முருகனையும், கொடிய வலிமையையுடைய பூதப் படையினரையும் நமக்கு எதிராக இங்கு நீ அனுப்பிய காரணம் யாது?" என்று வினவினான். அதனைக் கேட்ட வருணன், "மண்ணில் உள்ள உலகத்தவர் போற்றுகின்ற மன்னனே! கேட்பாயாக! ஆதிசேடன் என்ற பாம்பின் மீது பள்ளி கொள்கின்ற திருமால், நான்முகன், இந்திரன், தேவர் என்னும் இவர்கள் பக்கத்தில் சூழந்து வர வீரமுடைய வேலையுடைய பெரிய கையினனான முருகப் பெருமான் வான்வழியே சென்றார். (என்மீது வழி கொண்டு செல்லவில்லை). இதழ்கள் பொருந்திய கடம்ப மாலையை அணிந்த வள்ளலான முருகப் பெருமான் வான் வழியே செல்ல, ஆற்றல் பொருந்திய பூதர் என் வழியாக நடந்து சென்றனர். அவர்களின் கால்களின் கணுக்காலுக்கும் நான் எட்டவில்லை. அத்தயைவரை நானோ தடுத்து நிறுத்தும் வல்லமை கொண்டவன்?" என்று இவற்றையெல்லாம் கடல் மன்னன் வருணன் சொல்லி உடல் நடுக்கம் கொண்டு நின்றான். நிற்கவும், பெருமை பொருந்திய வேலையுடைய முருகப் பெருமான் பெரிய வீரமகேந்திர நகரை அடைந்த தன்மையை ஒற்றருள் சிலர் கண்டு அறிந்து கொண்டு விரைந்து ஓடிவந்து சூரபன்மனைப் பணிந்து நின்று, பின்வரும் இவற்றைச் சொல்லத் தொடங்கினர்.

"பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலும், நான்முகனும், இந்திரனும் முதலிய ஒன்பது தேவர்கள் சூழப் பொருந்திய இலட்சத்து ஒன்பது வெல்வதற்கரிய வீரர்கள் துதிக்க, இரண்டாயிரம் பூத வெள்ளத்தினர் நெருங்கிட, அலை வீசும் கங்கையை அணிந்த முடியையுடைய மேலான சிவபெருமானின் மகன் முருகன் நம் நகரத்தின் வடக்குத் திக்கிலே வந்துள்ளான். வடக்குத் திக்கில் வந்து தேவதச்சனைக் கொண்டு உலகம் புகழும் தன்மை கொண்ட பாடிவீட்டை அங்கு அமைவித்துப் பக்கத்திலே பூதப் படையினர் சூழந்திருக்க, நடுவில் உள்ள கோவில் ஒன்றில் முருகப்பெருமான் தங்கியுள்ளார். நாங்கள் இவற்றை எல்லாம் எம் கண்களினால் கண்டு வந்தோம்" என்று மிக்க ஆற்றலுடைய கொடிய ஒற்றர்

சொல்லவும், அதனைக் கேட்டு அண்டங்களும் எவ்வுலகமும் சுழலத் தீப்போல் சினந்து சூரபன்மன் முருகனுடன் போரிடச் சித்தமானான்.

## 3. முதல் நாள் போர்

"மாலை சூடிய வேலை ஏந்திய முருகப் பெருமானது ஆற்றலையும் பூதப் படையினரின் ஆற்றலையும், போர் செய்து விட்டு சென்ற தூதனான வீரவாகு தேவரின் ஆற்றலையும் நான் அழிப்பேன். நீங்கள் போய் விரைவாய்க் கதிரவனின் பகைவனான என்மகன் பானுகோபனை இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்!" என்று சூரபன்மன் அந்த ஒற்றரைப் பார்த்துச் சொன்னான். அந்த ஒற்றர்கள் சூரபன்மன் உரைத்ததைக் கேட்டு 'நன்று' என்று சொல்லி அகன்று சென்று பானுகோபனின் அரண்மனையை அடைந்து, அவனை வணங்கி, தந்தையினது கட்டளையைச் சொல்ல, அவன் பெருமையுடைய பெரிய வெண்மையான சிங்கங்களால் சுமக்கப்படும் அரியணையை விட்டெழுந்தான். கதிரவனின் பகைவனான பானுகோபன் அழகிய தேரின் மீது ஏறி ஓராயிரங் கோடி வீதிகளைக் கடந்து அங்கங்கே பக்கங்களில் நின்று கொண்டிருந்த வீரர்கள் எல்லாம் வணங்கிடச் சென்று பெருமைமிக்க தன் தந்தையின் திருநகரை விரைவாக அடைந்தான். பானுகோபன் தான் ஏறியிருந்த தேரினின்று இறங்கிப் பெருமையுடைய தந்தையின் அரண்மனைக்குள் போய் நெருங்கி, அவனுடைய அடிகளை வணங்கி "வீரர்க்கெல்லாம் வீரரே! என்னைத் தாங்கள் இப்போது அழைத்து வரச் சொன்னது ஏன்?" என்று வினவ, கட்டப்பட்ட வீரக்கழல் அணிந்த சூரபன்மன், "இளையவனான தாரகனையும், கிரவுஞ்ச மலையையும், என் மகன் வச்சிரவாகுவையும், மற்றவரையும் முன்பு கொன்ற பகைவரை அழித்திடச் செல்லும் முறைகளை மேற்கொண்டு போருக்குப் போக வேண்டியது என் கடமையாகும். ஆனால் அவர்களோ என்னைவிடச் சிறியவர்; நானோ மன்னர் மன்னன். ஆதலால் போருக்குச் செல்லாது வாளா இருந்தேன். எனவே, என் அரிய மகனே, இனிப்படையுடன் போய்ப் போர்க்களத்தை அடைந்து சிவனின் மகனையும் நந்திகணத்தவரையும் பூதப் படையினரையும் போரிட்டு அழித்து வெற்றி கொண்டு நீ திரும்பி என் எதிரில் விரைந்து வருவாயாக!" இவற்றைச் சூரபன்மன் சொல்லக் கேட்கவும், அழகு விளங்கும் பெரிய தோள்கள் மலை போலப் பெருத்து மேலே செல்ல பொருந்திய வியர்வைத் துளிகள் உடலைப் போர்க்க, அங்கு நின்ற பானுகோபன் "முருகனை என் ஆற்றலைக் கொண்டு வென்று அவனோடு உள்ள இலக்குமி தங்கிய மார்பினனான திருமாலையும், நான்முகத்தவனையும்,

இந்திரன் என்ற திருடனையும் இமைப் பொழுதில் பிடித்து உன்முன் கொண்டு வந்து நிறுத்துவேன். நீ தக்க தண்டனையை அவர்களுக்கு அளிப்பாயாக'' என்று சொல்லி வணங்க, ''மகனே! நீ ஆற்றலுடன் சென்று வருவாயாக!'' என்று சூரபன்மன் சொல்ல, 'நல்லது' என்று பானுகோபன் அவனிடம் விடையைப் பெற்றுக் கொண்டு, பொன் மயமாக விளங்கும் தனது தேர்மீது ஏறினான்.

தம்மை எதிர்ப்பவரின் ஆற்றலை மதிக்காதவனான பானுகோபன், இரு பக்கங்களிலும் கூர்மையாக்கப்பட்ட பெரிய வில்லை 'வெற்றி உண்டாகுவதாக' என்று சொல்லிக் கையிலே எடுத்துக்கொண்டான். செலுத்தினால் எத்தகையவரையும் கொல்லத்தக்க மோகக் கணையையும் கைக் கொண்டான். இத்தகைய போர்க் கோலத்தைப் பூண்டு வாயிலில் பானுகோபன் வரவும் முன்பே சென்ற தூதர்கள் 'போருக்குப் புறப்படுக!' என்று கூற, உடனே அசுரர் அனைவரும் போர்க் கோலம் கொண்டு புறப்பட்டனர்.

விசயன், நேமியன், மிக்க ஆற்றலையுடைய மாயன், முசலி, கண்டகன், முரன், சுரன், மூர்க்கன், தசமுகன், கனலி, சண்டன், விசண்டன், அசமுகன், மகிடன், அக்கிரவாகு, விசயசேனன், விடசேனன், விமோகன், வசை மொழியைக் கொண்டுள்ள சோமகன், மது சசிசித்து, சுசிமுகன், அசனி, சூனியகேது, அசுர சேனன் என்ற இவர்கள் முதலானவர்களும், போர் கிட்டிற்று என்று மனம் பூரிப்பவர்கள் தடுக்கக் கூடாதபடி பகைவரைக் கொல்கின்ற கடவுள் தன்மையுடைய பலவகைப் படைக்கலங்களை எடுத்துக் கொண்டு வலியவராக விரைந்து வந்தனர். அப்போது பத்தாயிரம் வெள்ளம் அசுரப் படை வீரர்கள் இடங்கள் தோறும் போய், மீன்கள் வாழ்கின்ற கடலும் வெட்கமடையுமாறு ஆரவாரம் செய்தபடி தம் பெருந்தலைவர்களின் பக்கத்தில் வந்தனர்.

அழகான வில்கள், கொடிய தண்டுகள், நீண்ட சூலங்கள், சக்கரங்கள், வேல்கள், தோமரங்கள், ஈட்டிகள், மழுக்கள், வாள்கள், கணைகள், கூர்மையான எழுக்கள், கலப்பைகள், கால பாசங்கள் முதலியவற்றைக் கைக் கொண்டு போயினர். குதிரைக் கூட்டங்கள், மதநீர் ஒழுகும் யானைக் கூட்டங்கள், சக்கரங்களை உடைய தேர்கள் என்ற இவை மூன்றும் பத்தாயிரம் வெள்ளங்களாகப் படைத் தலைவரின் பக்கங்களில் சூழ்ந்து சென்றன. ஏவலாளனால் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட தேரின் மீது உதயமலை மீது ஏறுகின்ற நெருங்கிய கதிர்களையுடைய சூரியனைப் போல

வலிமையுடன் பானுகோபன் ஏறினான். அப்போது மிக்க படை வெள்ளங்கள் எல்லாம் ஆரவாரம் செய்தன.

வலிய அசுரப் படை வெள்ளங்கள் சென்றன. தேர் வரிசைகள் சென்றன. யானைகளும் சென்றன. குதிரைகளும் சென்றன. இவ்வாறு இவை சென்றமையால் ஆரவாரம் எழுந்தது. கொடிகள் மேலே உயர்த்தப்பட்டன. புழுதியானது எழுந்தது. பேரிகைகள் அடிக்கப்பட்டன. சங்குகள் ஊதப்பட்டன. காகளங்கள் ஊதப்பட்டன. சல்லிகைகள் ஊதப்பட்டன. தடாரிகள் அடிக்கப்பட்டன. தண்ணுமைகள் அடிக்கப்பட்டன. தக்கைகள் முழங்கப்பட்டன. தேர்கள் ஆரவாரித்தன. குதிரைகள் கனைத்தன. யானைக் கூட்டங்கள் பிளிறின. கொடிய அசுரர்கள் ஆரவாரம் செய்தனர். வெண்மையான கொடிகள் அசைவால் ஆரவாரம் ஏற்பட்டது. மணிகள் ஒலித்தன. மாலைகள் அசைந்து ஒலித்தன. அந்த ஊரும் ஆரவாரித்தது.

வெப்பத்தைத் தரும் கதிரவனைச் சிறைப்படுத்திய பானுகோபன் என்பவன் நெருங்கிய படையுடன் இவ்வாறு செல்லவும், சிறப்புடைய அந்த நகரத்தினின்று இவை எல்லாவற்றையும் உணர்ந்த நாரத முனிவர் முருகப் பெருமான் வீற்றிருந்த இடத்துக்குச் சென்றார். சென்று கந்தப் பெருமானின் வீரக்கழல்கள் அணிந்த இரு பொற்பாதங்களைக் கண்டு உள்ளத்து அன்புடனே வணங்கித் துதித்து ''எம் இறைவா! கேட்டருள்க!'' என்று நாரதமுனிவர் பின்வருவனவற்றை சொல்லலானார். ''நெடு நாட்களுக்கு முன்னம் நீண்ட கதிர்களை உடைய சூரியனிடம் தாவிய தன் மகனான பானுகோபனை அழைத்து, பெரும் படையுடன் இரக்கம் இல்லாத சூரபன்மன், சினந்து, உம்மீது போர் தொடுக்குமாறு அனுப்பி உள்ளான். இந்தப் பானுகோபனுடன் எதிர்த்து நின்று போர் செய்யத் தக்கவர் தாங்களும் சிவபெருமானுமே அல்லாது தேவரில் வேறு எவர் இருக்கின்றார்? இந்தப் பானுகோபனை வெல்வது என்பது அரியதாகும். முன் ஒரு காலத்தில் இவன் திருமாலுடன் போரிட்டு அவர் புறங்கொடுத்து ஓடும்படிச் செய்தவன் ஆவான்'' என்றார்.

நாரத முனிவர் இவற்றைச் சொல்லவும், அச்சமயத்தில், நகைப்புடன், முருகப் பெருமான் தம் பக்கத்தில் நின்ற வீரவாகு தேவரை நோக்கித் திருவருள் செய்து பின் வரும் இத்தகையவற்றைச் சொல்லலானார். ''இங்கு யாம் பூதப் படையுடன் வந்துள்ள தன்மையை அங்கு இருக்கும் சூரபன்மன் அறிந்து, அந்த நகரத்தில் இருந்த அவுணப் படையுடன் தன் மகனான

பானுகோபனை நம்முடன் போர் தொடுக்கும் பொருட்டாக அனுப்பி யிருக்கின்றான். இகழ்வதற்கு அரிய எட்டு வீரர்களும், மற்றுமுள்ள இலட்சத்து வீரர்களும் ஓர் ஆயிரம் பூத வெள்ளங்களும் பக்கத்தில் சூழ்ந்து வர, நீ போய் விரைவாய் அந் நகரத்தின் மதிற்புறத்தை முற்றுகை செய்வாயாக! முற்றுகை செய்த பின்னர், அந்த மகேந்திரபுரியின் தலைவாயிலை அழித்து, அங்கு சினந்து போர் செய்பவனான சூரபன்மனின் மைந்தனான பானுகோபனின் படைகளை அழித்துப் போரிட்டு அவனை வெற்றி கண்டு இங்கு வருவாயாக!'' என்று முருகப் பெருமான் திருவாய் மலர்ந்தார். பகைவரைப் பிளக்கின்ற வேலையுடைய முருகப் பெருமான் இவ்வாறு மொழிந்தருளி வீரவாகு தேவரையும் பின்பு இளையவரான வீரகேசரி முதலியவர்களையும் பூதப் படைத் தலைவர்களுடன் அனுப்பியருளினார். எட்டு வீரர்களும், இலட்சத்து வீரர்களும் மற்றுமுள்ள அளவில்லாத பூதப் படையினரும் எதிர்த்துப் போர் செய்வதற்கேற்ற போர்க் கோலத்துடன் மேக மண்டலத்தை அளாவுகின்ற தேர்க் கூட்டங்களில் ஏறினர். இந்தப் பூதர்கள் எத்தகையவர் என்றால் பாம்பின் மன்னனான ஆதிசேடன் சுமக்கின்ற உலகம் யாவற்றையும் ஓர் தோளில் வைத்துக் கொள்கின்ற வல்லமையுடைய கையினர்; எமனைக் கொல்கின்ற அஞ்சாமை உடையவர்; கொடியவர் எல்லாரையும் விடக் கொடியவர். இவர்கள் இரத்தம் போன்ற செந்நிறமான முடியையுடையவர்கள். கொல்கின்ற படைக் கலங்களைத் தாங்குகின்ற கையினர்கள். கெடிய கழல்கள் ஒலிக்கினின்ற கால்களை உடையவர்கள். பெற்ற வரங்களினால் மேன்மை உடையவர்கள். மாயைகளையெல்லாம் வென்றவர்கள். வன்மையான அண்டங்களையும் உடைக்கக் கூடிய வன்மை வாய்ந்தவர்கள். இத்தகைய தன்மையில் நெருங்கிய பூதர்கள் எல்லாரும் செல்லவும், அவர்களுக்குத் தலைவரானவர்கள் சூழ தன்னுடைய தொன்மையான தம்பியரோடு அழகுடைய கரிய வீரக்கழலை அணிந்த வெற்றியையுடைய வீரவாகுதேவர் சென்றார்.

அத்தகைய சமயத்தில் வீரவாகு தேவரும் அவருடன் பூதப்படையினரும் மதில் பக்கமாக வந்ததைக் கண்டு மனம் தாங்காமல் அசுரர் சிலர் அங்கே நில்லாமல் ஓடித் தம் அசுரப் படைக் கடலைத் தாண்டி விரைவாகச் சென்று பானுகோபனை வணங்கி, ''மிகப் பெரிய படைகள் சூழ்ந்து வர, நீ போர் செய்ய வருவதை அறிந்து விரைவில் இங்கு வீரவாகுவை முருகப் பெருமான் அனுப்பி வைத்துள்ளார்'' என்று கூறினர். இவ்வாறு அவர்கள் கூறியதைச சூரபன்மனின் மகனான பானுகோபன் கேட்டதும், தொகுதியான அழகிய

ஒளிவீசும் மணிக்கடகம் அணிந்த கையை மற்றக் கையுடன் அடித்துப் புன்முறுவல் செய்து, பற்கள் தீயைக் கக்கச் சினத்துடன் பெருமூச்சு விட்டு "பகைவரான அவர்களைப் பிடித்து வந்து நம் அரசன் முன்காட்டி இங்குச் சிறையிலே உள்ள தேவர்களுடன் எல்லோரும் என் சிறப்பை வணங்கிப் போற்றி பாராட்டச் சிறையிலே அடைப்பேன்" என்று சூரபன்மனின் மகன் பானுகோபன், சினமுடைய உள்ளத்துடன் விரைந்து செல்லவும், அவனுடன் வந்த நெருங்கிய அவுணர் தம்படைக் கூட்டம் பொன் மயமாக விளங்கும் மதிலின் கதவைத் திறந்து முன்னால் சென்றன. எல்லை இல்லாத அசுரர்களும் எரியும் தீப்போன்ற விழிகளையுடைய பூதவீரர்களும் ஒருவருடன் ஒருவர் போர் செய்து நெருங்கியதால் இரு வகையான படைகளும் பகைத்து எதிர்த்தன. அவ்வாறு எதிர்த்துப் போர் செய்கின்ற அசுரர், பூதப் படையினர் மீது மூன்று தலைகளைக் கொண்ட வேல்களையும் முகண்டி, தோமரம், சக்தி, எழு, மழு, தண்டம் முதலான பலவகைப் படைகளையும் எடுத்து எய்தனர்.

அரிய தீயின் பெயரைக் கொண்ட அனலி அறிவு நீங்கி மயக்கம் அடையும் போதில், ஆற்றல் உடைய சிங்கத்தின் பெயரைக் கொண்ட சிங்கன், விரைந்து தான் ஏறியிருந்த தேரைவிட்டு இறங்கி, அந்த அனலியைத் தரையில் மோதி அடிக்க, அவன் இறந்து போனான். நெருங்குவதற்கு ஆற்றல் உடைய அனலி என்ற சூரன், அப்போது இறந்ததைக் கவலை என்பதை அறியாத உள்ளத்தையுடைய தீப்போலச் சுழலும் கண்களையுடைய 'சண்டன்' என்ற பெயரை உடைய அசுரன் கண்டான். "தடுப்பதற்கு அரிய படைகளைக் கொண்டு இவனது உயிரை இப்போதே பறிப்பேன்" என்று அந்தச் சிங்கன் என்ற பூதனை எதிர்க்கச் சென்றான். அந்த சண்டன் சொன்ன சொல்லைக் கேட்டு சிங்கன் தீயைப் போன்று, கண் விழித்துப் பார்த்து, இடியைப் போல ஒலி உண்டாகச் சிரித்து, இறந்து விட்ட அனலியின் கையில் இருந்த தண்டினை எடுத்துச் சென்று, அந்த சண்டனின் தோர் மீது ஏறிக் கரியமலை போன்ற வலிய தோள் மீது எமனும் அஞ்சிடுமாறு அடித்தான்.

கையிலே விளங்குகின்ற தோள் தண்டினால் கரிய சண்டன், அழகும் வன்மையும் பொருந்தி விளங்கும் சிங்கனின் மார்பில் அடித்தான். அடித்த உடனே, அவன் அதற்காக வருத்தம் அடையாது 'இவனைப் போல நானும் கையில் தோளைக் கொண்டு அடிக்க மாட்டேன்' என்று தன் காலால் உதைத்து அந்த சண்டனின் மலை போன்ற உடலை கீழே விழுமாறு

செய்தான். அசுரனான சண்டன் கீழே விழுந்த உடன் அதனைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள், கைகளை மேலே தூக்கி ஆரவாரம் செய்து, ''புண்களைப்போலக் காணப்படும் இரத்த மயமான சிவந்த கண்களையுடைய பூத நாயகனே! நீயே அல்லாது வேறு யார் சண்டனை உதைக்கப் போகின்றார்கள்? விரைவாக அவனது உயிரை வாங்கிவிடு!'' என்று குறையிரந்து வேண்டிக் கொண்டனர். அசுரப் படைகள் அஞ்சி ஓடியதையும் அசுரப் படைகளில் பலர் இறந்ததையும் வானில் உள்ள கதிரவனைச் சிறையில் அடைத்த வீரர்க்கு வீரனான பானுகோபன் பார்த்துச் சினந்து ''நடந்து முடிந்தவற்றை எண்ணுவதால் என்ன பயன்? இனி நானே போய் ஒரு நாழிகைப் பொழுது முடிவதற்கு முன்பே பகைவரின் பெயரே இல்லை என்னும்படி கொல்வேன். அவ்வாறு செய்யாது போனால் நான் சூரபன்மனுக்குப் பிறந்தவன் அல்லேன்!'' என்று சூளுரைத்தான்.

கதிரவனின் பகைவனான பானுகோபன் இத்தகையவற்றைச் சொல்லி, கதிரவனின் தேரில் பூண்ட குதிரைகளைப் போன்ற குதிரைகள் வலவனானவன் முறைப்படி ஓட்ட, பகைவரின் படைக்கடல் நடுவில் போய்த் தன் கையில் உள்ள வளைந்த வில்லைப் புருவ நெறிவுடன் வளைத்தான். மேன்மையுடைய தன்கையில் உள்ள வில்லை வளைத்து, ஒளிர்கின்ற வெள்ளியானவன் மறைதலின்றிக் கதிரவனுக்கு எதிரே உதயம் செய்து ஆட்சியில் இருக்கும் போதில், சூல் கொண்ட மேகங்கள் பெரிய உலகத்தில் மழை பொழிந்தாற் போலப் பானுகோபன் சினம் கொண்டு, எதிர்த்த பகைப் படையினர் மீது அம்புமழை பொழிந்தான். தெய்வத் தன்மை பொருந்திய பெருந்தேர்மீது இருக்கின்ற ஒப்பில்லாத பானுகோபன், போர்க்களம் முழுவதும் சென்று, காற்றாடியைப் போலச் சுழல்கின்ற ஒப்பில்லாத வில்லை வளைத்துக் கோவையாய் எய்கின்ற ஒரு தொடையில் ஆயிரங்கோடி அம்புகளை எய்து பூதக் கூட்டங்களை அழித்தான்.

பானுகோபனால் விடப்படுகின்ற அவன் பெயர் எழுதப்பட்ட கொடிய அம்புகள் தோள்களை அறுக்கும்; கைகளை அறுக்கும்; மார்பையும் கால்களையும் துணிக்கும்; பற்றி எரியும் தீயைப் போலக் காணப்படுகின்ற மயிர்களையுடைய தலைகளை அறுக்கும், வாள்களை முறிக்கும், அலங்கரிக்கப்பட்ட வெற்றியுடன் கூடிய உடல்களையுடைய பூதர்களது வாழ்நாள்களையே அவை அழிக்கும். தேவரின் கூட்டத்தைச் சிறையில் அடைத்தவனான பானுகோபன் இவ்வாறு தான் ஒரு வில்லைக் கொண்டு வன்மையால் பூதர்களை கொன்று விடவும், பல பூதர்கள் அவனது அம்புக்கு

இரையாகி இறக்கவும் வன்மை இல்லாத மற்றப் பூதர்கள் ஓடத் தொடங்கியவர்களாய் பின்வருமாறு எண்ணலாயினர். "ஒளிவீசும் வெண்மை நிறமுடைய வேலை உடைய முருகப் பெருமான் அங்குப் பாசறையில் உள்ளார். வீரவாகு தேவரோ கூழைப் படையில் (பின்னால் உள்ள டைையில்) உள்ளார். அதனால் அவர் உணர மாட்டார். மற்ற வீரகேசரி முதலானவரும் அவ்வாறே! எதிரே உள்ள நம்மை இந்தப் பானுபோபன் இப்போது கொல்வான். நாமே வல்லமை அற்றவராக உள்ளோம். எனவே நாம் இங்கு இருப்பதால் பயன் என்ன?" என்று எண்ணினார். எனவே ஓடினார்.

அஞ்சி ஓடுகின்ற பூதர்கள் எல்லாரும் படைகளின் கடைசியில் நின்ற கட்டப்பட்ட குளிர்ந்த மலர் மாலையை சூடிய வன்மையுடன் கூடிய தோள்களையுடைய வீரவாகு தேவரின் பக்கத்தில் வருந்திய உள்ளத்துடன் செல்ல, அவற்றை எல்லாம் 'உக்கிரன்' என்ற பெயர் கொண்ட படைத் தலைவன் பார்த்து செந்நிறமுடைய கண்களையுடையவானய்த் திருமாலை விட உயர்ந்து விளங்கும் ஒரு பொன்மயமான தண்டு கொண்டு சென்று, தேவர்கள் எல்லாம் புகழும் வண்ணம் தான் ஒருவன் மட்டுமே கர்ச்சனை செய்த வண்ணம் பானுகோபனுககு நேர் நின்று போரிட்டான்.

பானுகோபனால் வீசப்பட்ட எழுபடையை உக்கிரன் தன்கையில் கொண்டிருந்த தண்டினால் அடித்து அழித்து, அவனது தேரின் அருகில் போய்ப் பாய்ந்தோடும் இயல்புடைய குதிரையை அடித்து விரைவாக தரையில் விழும்படி செய்தான். எல்லாத் தேவர்களும் ஏ!ஏ! என்று ஆரவாரத்தைச் செய்தனர். பானுகோபன் தன் தேரில் கட்டப்பட்டிருந்த குதிரைத் தொகுதிகள் அழிந்து போய்விடவும், தீப்போலச் சினம் கொண்டு, பக்கத்தில் இருந்த மற்றொரு சேமத் தேரின் மீது தாவி ஏறி வில்லை வளைத்து உக்கிரனின் கையில் எடுத்திருந்த தண்டானது முரிந்து விடுமாறு ஒரு நூறு மொட்டம்புகளை எய்தான். பானுகோபன் எய்த நூறு மொட்டம்புகளால் தான் கையில் வைத்திருந்த தண்டானது நுண்ணிய தூளாக ஆகவும், மிகச் சினம் கொள்ளும் உக்கிரன் தன் கையால் தீயவனான பானுகோபனின் பெரிய தேரினை வானத்தே செல்லுமாறு எடுத்து எறிந்தான். இத்தேரானது பானுகோபனுடன் சூரிய மண்டலம் வரைப் போய் விழுந்தது. கிழே விழுகின்ற தேரினின்று குதித்து நீங்கிப் பானுகோபன், குறுகிய உடலையுடைய உக்கிரன் என்ற பூதப் படைத் தலைவனை பொன் மயமான ஒளியையுடைய கைகளால் அவனை அடித்து, எடுத்து, வானத்தில் ஏழு

கடல்களையும் கடந்து அப்பால் சென்றிடுமாறு வீசி எறிந்தான். சூலப் படையை அவன் மீது ஏவினான். பானுகோபன் எறிந்த தெய்வத்தன்மை உடைய சூலமானது உக்கிரனின் மார்பைப் பிளவுபடுத்திப் பகுத்து அப்புறம் வெளியே போய்விட, அவன் சற்றே தளர்ச்சி அடைந்தான். நூறெட்டு என்ற எண்ணையுடைய பூதப் படைத் தலைவர் தோற்றுப் போகவும், அதைக் கண்டு கொடிய சினம் முதிரப் பெற்றுக் கபாலி, அண்டலோசனன், நிரஞ்சனன், உருத்திரன், அகண்டன், தண்டகன் முதலான இலட்சம் வீரரும் பானுகோபனை எதிர்த்தனர்.

பூதப்படையினரான இலட்சம் வீரரும் எய்கின்ற அம்புகள், அசுரர் எல்லாரும் கலங்குமாறு செல்லவும், பானுகோபன் அவற்றைப் பார்த்துக் கொலைத் தன்மை கொண்ட வளைந்த வில்லை வளைத்து, அதிலே ஆயிரம் கோடியான விலக்க முடியாத அம்புகளைத் தொடுத்துப் பூதர் எய்த அம்புகளை விரைந்து அழித்தான்.

இலட்சம் வீரரும் தம் கையில் பிடித்திருந்த வில்கள் எல்லாம் அழிந்த போது, திரும்பவும் பெரிய தேர்களில் இருந்த(சேம) வில்களை எடுத்து வளைத்து அம்புகளை எய்து, கதிரவனின் பகைவனான பானுகோபன் விடும் அம்புகளை இடை இடையே அழித்தனர். சூரனின் மகனான பானுகோபன் எய்கின்ற அம்புகளை எல்லாம் அழித்த பின்பு, அப்பூதப் படையினர் செலுத்தப்படுகின்ற தேர்களின் மீது, அம்புகள் ஆயிரத்தையும், குதிரைகளின் மீது நூறு ஆயிரத்தையும், மேகத்தை அளாவும் கொடிகளின் மீது ஆயிரத்தையும், தேரை ஓட்டும் வன்மையுடைய சாரதியின் மீது ஆயிரத்தையும், எய்தனர். வெற்றி பொருந்திய தோள்களையுடைய சிறந்த வீரவாகு தேவர், திருமாலுக்கும், நான்முகனுக்கும் எட்டாத முழுமுதற் கடவுளான சிவபெருமானின் மைந்தனான முருகப் பெருமானின் திருவடிகளை மனத்தில் தியானித்துக் குற்றமுடைய மனத்தையுடைய பானுகோபனின் எதிரில் சென்றார்.

வீரவாகு தேவர் பானுகோபன் விட்ட ஆயிரம் அம்புகளைத் தாமும் ஆயிரம் அம்புகளை விடுத்துக் தடுத்து மேலும் பத்தாயிரம் அம்புகளை எய்தார். தீயவனான பானுகோபனும் அத்தொகையான பத்தாயிரம் அம்புகளை எய்து அவற்றை அழித்தான். பின்பு அவன் கொடிய அம்புகள் நூறாயிரம் செலுத்தினான். வன்மையுடைய வீரவாகு தேவர், பானுகோபன் விடுத்த நூறாயிரம் அம்புகளையும் அதே தொகையான நூறாயிரம் அம்புகளை எய்து

அழித்து பத்து இலட்சம் அம்புகளைப் பானுகோபன் மீதில் எய்தார். அம்புகள் முறையாக எய்யப்படுதலால் பானுகோபனும் வீரவாகு தேவரும் மறைவர். அவற்றை அழித்து அகற்றும் போது இமைப்போதில் வெளிப்பட்டுத் தோன்றுவர். இமைப் போதில் வெவ்வேறு வகையாக இவ்வாறு அவ்வீரர்கள் சூறைக் காற்றுப் போல் உலகம் எங்கும் திரிந்து சுற்றிச் சுற்றிப் போர் செய்தனர். கதிரவனைச் சிறையில் இட்ட கொடியவனான பானுகோபன், ஆற்றல் பொருந்திய வீரவாகு தேவர் விடுத்த கணை மழைகளை அழித்து, அவரது கையில் இருந்த வில் ஒன்றையும் விரைவாக ஆயிரம் கூரிய அம்புகளால் அழித்து வெற்றி முழக்கமிட்டான். அவ்வாறு பானுகோபன் ஆரவாரம் செய்த போது, வீரவாகு தேவர் என்ற பெயருடைய அறிஞர் மீண்டும் வில்லை வளைத்து, மிகச் சினம் கொண்டு அச்சம் உடைய கொடிய ஆயிரம் அம்புகளை விரைவில் செலுத்தி முகூர்த்தம் ஒன்றில் அப்பானுகோபன் கையில் இருந்த வில்லை அழித்தார். அவ்வாறு பானுகோபனின் வில்லை அழித்த உடனேயே, பானுகோபன் மிகவும் சினம் கொண்டு கையில் மற்றொரு வில்லை எடுத்து வளைத்து, ஆயிரம் அம்புகளை வன்மையுடைய வீரவாகு தேவரின் மார்பில் பாய எய்யவும், அவர் ஒப்பற்ற ஏழு அம்புகளால் அவனது முடியை வீழ்த்தினார். பொருந்திய பல மணிகள் பதித்த பொன் நிறமான முடியை வீரவாகு தேவர் வீழ்த்தியவுடனேயே வேறொரு ஒளிவீசுகின்ற முடியை, செந்நிற ஒளியையுடைய செங்கதிரவனை முன்பு பிடித்த தன்மையைப் போல பானுகோபன் கையில் எடுத்தான். அவ்வாறு வீரவாகு தேவர் எய்த அம்புகள் சூரபன்மனின் மைந்தனான பானுகோபனின் உறுப்புகளில் தைத்து முழுகவும், அவன் அவ்வளவில் மயக்கமாகித் தளர்ந்தான். அவனது கையில் இருந்த நீண்ட பெரிய வில்லே ஊன்று கோலாய்க் கொண்டு வறியவனாய் விளங்கினான். தோண்டப்பட்ட தெளிவான நீர்நிலையினின்று எழுவது போல இரத்தம் வெளிப்பட்டு ஒழுகியது.

அத்தகைய சமயத்தில் அவுணப் படைத் தலைவர் அனைவரும் பானுகோபனின் பெருவலியை பெற்றிராத இயல்பைப் பார்த்து, நாற்பெருங்கடலுடனே, பெருமை உடைய வேலையுடைய வீரவாகுவின் பக்கத்தில் சென்று சூழ்ந்து வளைந்து கொண்டனர். அசுரர் அனைவரும் எய்த கொல்லும் படையான மழையைச் சிதறச் செய்த பெருந் தோள்களையுடைய வீரவாகு தேவர், பல கோடி அம்புகளை விட்டு அசுரப்படை அனைத்தையும் கடல் நீரைக் குடித்த வடவா முகாக்கனியைப் போல விரைவாக அழித்தார்.

அசுரர்களின் படை அழித்த செய்தியையும், கதிரவனுக்குப் பகைவனான பானுகோபன் நின்று தனியனாய் நின்ற இயல்பையும் பார்த்து "நம் தலைவரான வீரவாகு தேவரிடம் செல்வோம்!" என்று முன்னம் பானுகோபனுக்கு உடைந்து போன வன்மையுடைய பூதப் படையினர் திரும்பவும் வந்தனர்.

அம்புகளை இடுகின்ற அம்பறாத் தூணியானது அழியவும், உலகங்களுக்கெல்லாம் காவலனான சூரபன்மனின் மைந்தனான பானுகோபன், வில் வித்தையினால் வீரவாகுவை வெல்வது அரிதாகும் என்று எண்ணித் தேவர்க்குத் தேவரான நான்முகன் தந்த மோகக் கணையை தன் கையில் கொண்டான். உள்ளத்தில் உள்ள உயர்வை அழிக்கும் தீய மோகக் கணை பானுகோபனின் கையில் வந்திட, அப்போது அவன் தன் உள்ளத்தில் வழிபாடு செய்து "கொடிய ஆற்றலையுடைய படையுடனே வீரவாகு தேவரின் அறிவைக் கொன்று வருவாய்!" என்று சொல்லி விடுத்தான். விடவும், இலட்சம் வீரருடன் எட்டு வீரரும் மற்றவரும் வீழ்ந்தனர். பகைவரின் ஊரைக் கலக்கும் வீரவாகுதேவர், உணர்வு அழிந்து நிலத்தில் நாட்டப் பட்ட பூணைப் போல நின்றார். இதை உணர்ந்து, ஆறுமுகங்களை உடைய உயிர் தோறும் இருந்து, அரிய அருளைச் செய்யும் எம்பெருமான் விரைவாக அங்கு அப்பொது 'அமோகக் கணை' என்ற பெருங் கருவியை உருவாக்கி அதனை நோக்கிச் சொன்னார். "எம்மவர் நன்றாக தெளிவடைந்து நல்ல நிலையை அடையுமாறு நின்று பானுகோபன் விட்ட மோகக் கணையிடத்தில் போய், அதன் வலிமையைச் சிதைத்து வெற்றியுடன் திரும்பி வா!" என்று கூறி அமோகக் கணையை விடுத்தார். வன்மையுடைய அந்த அமோகப் பெரும்படை செல்கின்ற போது, கொடிய பானுகோபன் விடுத்த வன்மையுடைய வீரரின் உடலில் உள்ள மயக்கமானது நீங்குமாறு விரைவாக ஒடியது. அசைகின்ற விண்மீன்கள் எல்லாம், மேன்மை பொருந்திய கதிரவன் தோன்றியதும் ஒளி குன்றிச் சென்றது போல, நிலையான நம்மவர்களாகிய படைகளை பானுகோபனின் மோகக்கணை வேகமாகத் திரும்பியது. ஒப்பற்ற கொடிய மோகக்கணை ஆற்றல் இல்லா ததாய்ச் செல்ல, ஆற்றலுடைய வீரவாக தேவரும் மற்றவரும் உடலிலே மயக்கமானது நீங்கியவராய் முருகப் பெருமானால் அனுப்பப்பட்ட அமோகக் கணையைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். திரும்பிய இந்த அமோகக்கணை என்ற பெரும் படைக்கலம் சென்று தன்னை அனுப்பிய ஆறுமுகப் பெருமானிடம் பொருந்தியது. அப்போது பூதவீரர்கள் பகைவனான

பானுகோபன் மீது போரைத் தொடர்ந்தனர். விரைவாகப் பானுகோபன் இவற்றை எல்லாம் பார்த்து வியப்பு அடைந்தான். வீரத் தோள்களைக் கொண்ட வீரவாகு தேவரை அவன் எதிர்த்துப் போரிடவில்லை. செருக்கை விட்டான். துயர் மிகப் பெற்றுத் தன் உள்ளத்தில் எண்ணலானான். இங்கு இப்பகைவரின் நினைவை எல்லாம் பெரிய உலகத்தில் அழித்தேன். அவர்கள் பிழைக்கும் வழியைக் கொண்டு பிழைத்து வெளிப்பட்டனர். இனிச் செய்வது என்ன? ஐயகோ! இவையெல்லாம் இறைவன் செயல்! என எண்ணினான். பானுகோபன் தோற்று அஞ்சிப் புறங்காட்டி ஓடியதைப் படைத் தலைவரும் பூதக் கணத்தவரும் பார்த்தனர். ''தீய பானுகோபன் மிக்க ஆற்றலை இழந்து விட்டான். நாம் அவனைப் பிடித்துக் கொண்டு வருவோம்'' என்று கூறினர். இச்சமயத்தில் இலட்சத்து எட்டுப் பேராகிய மெய்த் துணைவரும் கொடிய பூதப் படையினரும் அந்தத் துணைப் படையினரும் அருகில் வர நெருங்கிய மிக்க ஆற்றலையுடைய வீரவாகு தேவர் போர்க் களத்தினின்று பாசறைக்குத் திரும்பினார். முருகப் பெருமானின் பாசறைக்குச் சென்ற வீரவாகு தேவர் நான்முகன் முதலான தேவர்கள் எல்லாரும் போற்ற அங்கு வீற்றிருந்த சிவபெருமான் பெற்றருளிய முருகப் பெருமான் முன்னம் போய்த் தம் தம்பியான துணைவருடன் அவரை வணங்கினார். ஆனால் போரில் தோற்று ஓடிப்போன அவுணனான பானுகோபன் உள்ளத்தில், வருத்தும் துயரமும், பழியும், மானவுணர்வும், பெருகப் பெற்றுத் தனது பெருமித நிலை அழிந்து துடித்தான். தன் தந்தையான மன்னன் சூரபன்மனின் அரண்மனைக்குக் கதிரவனின் பகைவன் என்று கூறும் இயல்புடைய பானுகோபன் செல்லவில்லை. தன்னுடைய அரண்மனைக்குச் சென்று மனம் வருந்தி இருந்தான்.

## 4. இரண்டாம் நாள் போர்

கதிரவன் உதயமாவதற்கு முன் சூரபன்மன் உறக்கத்தைவிட்டு எழுந்து, மரபுப்படி செய்கின்ற நாள்கடனைச் செய்து முடித்துச் சபை மண்டபத்தை அடைந்து அழகிய மணிகள் இழைத்த பெரிய அரியணையில் அமர்ந்து தன் மகன் முதல்நாள் போரில் அடைந்த இழிவை உள்ளத்தில் நினைத்தான். நினைத்த உடனே உள்ளத்தில் சினம் பொங்க, 'இனிமேல் போர்த் தொழில் செய்ய ஒருவரையும் அனுப்ப மாட்டேன்; நானே படையுடன் போய்ப் பகைவரின் வலிமையை அழித்து வெற்றிமாலையைச் சூடுவேன்!' என்று

மனத்துள் நினைத்தான். சிவந்த கண்களையும் கூரிய பற்களையும் உடைய அவுணன் இவ்வாறு தெளிவு அடைந்து, கொடிய கண்களையுடைய அளவற்றவரை அழைத்து, "அழகிய இடமுடைய இந்தப் பெரிய நிலம் முழுவதும் வரிசை வரிசையாகச் சூழ்ந்து, கடல்களில் எங்கும் நெருங்கியுள்ள படைகளைக் கொண்டு வாருங்கள்!" என்று ஆணையிட்டான். சூரபன்மன் அவ்வாறு ஆணையிடவும், ஆயிரங் கோடியினர் அவனை வணங்கி எங்கும் சென்று, தம் மன்னவனின் ஆணையினை எடுத்துச் சொல்லவும், முன் நாளில் வெற்றி கண்ட நூறாயிர வெள்ளத்தைவிட மிக்கவர்கள், நெருங்கிய தேர்கள், யானைகள், குதிரைகள் ஆகியவற்றில் ஏறி வந்தனர். சூலமும், கணிச்சியும், தண்டும், தோமரமும், குலிசமும், வில்லும், அழகிய வாளும், கேடயமும், வளை, தடியும், வேலும், கலப்பையும், பிண்டிபாலமும், முசுண்டியும் சங்கும், சக்கரமும், எழுவும், பலவகையும், பீலியும், பெரிய முலசமும் முதலான பெரும்படை கலங்களைத் திரட்டிக் கொண்டு வந்தனர்.

இவ்வாறு இலட்சம் வெள்ளப் படையிரும் மிக்க ஆற்றலையுடையன மகேந்திர நகரத்தை நெருங்கியிருந்து ஆரவாரம் செய்தனர். வானத்தைத் தொடுகின்ற மேருமலை போன்ற சிகரம் ஒன்றின் உச்சியிலே போய் அவுணரின் மன்னன் சூரபன்மன் கடல் போன்ற பெரும் படையைக் கண்டான். அச்சமயத்தில் 'சிங்கமுகாசுர'னின் மகன் 'ஆதிசூரன்', இறந்த தாரகாசுரனின் மகன் 'அசுரேந்திரன்' என்ற இம் மைந்தர் இருவரும் சென்று மன்னர்க்கெல்லாம் மன்னனான சூரபன்மனை அடைந்தனர். மதநீர் விளங்கும் யானைகள், தேர்கள், பாய்ந்து செல்லும் குதிரைகள் சேரப் படை வீரர் சென்ற போது, பெரிய மணிகள் பதித்துச் செய்த வயிரத் தேர்மீது செல்கின்ற அவுணரின் மன்னன் சூரபன்மன், கடலில் வடவைத் தீ சூழ்ந்து கொள்ள ஆலாலமானது சென்றது போல, தேவர்கள் எல்லாம் மயக்கம் அடையச் சென்றான். தோண்டகப் பறை, துடி, பம்பை, தூரியம், முருடு, கொம்பு, மிக்க ஆற்றல் உடைய படகம், மொந்தை (ஒருவகைப் பறை), திமிலை, தடாரி, தக்கை, மணி, ஆருளி, சின்னம், காகளம், கடுக்கை, அகன்ற வாய் கொண்ட பதலை, சங்கம், குடமுழா என்பவை ஒலித்தன. அத்தகைய இயல்புடன் அசுரர் படைகளுடன் வான்வழியாகச் சூரபன்மன் தேர்மீது செல்ல, அதை அறிந்து கொண்ட, தேவர்களின் தலைவனான இந்திரன் விரைந்து ஓடிச் சென்று மணம் கமழும் கடம்ப மலர் மாலையைச் சூடிய முருகப் பெருமானின் திருவடிகளை வணங்கி "முற்காலத்தில் செய்த வேள்வியிலே சிவபெருமான் அருளுடன் தந்தருளிய நெருங்கிய படைக் கருவி

கூட்டத்துடனே சூரபன்மன் என்ற கொடியவன் இன்று போரிடுவதற்காக விரைவாக வந்துள்ளான்; அவனை எதிர்த்துப் போரிட்டு வென்று எம் செல்வங்களை எமக்கு அருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

இவ்வளவாக இந்திரன் சொல்ல, முருகப்பெருமான் அவனுக்கு அருள் செய்து, அரியணையினின்று இறங்கி நீங்கி, ஆதிசேடன் என்ற பாம்பின் வலியை அழித்து உலவும் வாயுதேவனான பாகனை அழைத்துத் ''தாவிச் செல்லும் குதிரைகள் பூட்டப்பட்ட நம் தேரை விரைவாக இங்கு கொண்டு வருக!'' என்று ஆணையிட்டு அருளினார். 'நன்று' என்று எழுந்து, வாயுதேவன் மலை போன்ற தேரினைக் கொணர்ந்து முருகப் பெருமானின் திருமுன்னம் நிறுத்தினான். வெற்றியுடைய கூரிய வேலையுடைய அப்பெருமான் அந்தத் தேரின் மீது, மணம் கமழும் மலர்களைச் சிந்தி நான்முகனும், திருமாலும் வாழ்த்தித் துதிக்க, ஏறியருளினார். செழுமையுடைய செந்நிறமான சிறந்த தேரின் மீது தேவர் வணங்கும் தலைவனாக உள்ள முருகப் பெருமான் ஏறவும், கொழுவிய தீயை முடித்துக் கொண்டாற் போலக் காணப்படும் தலைமயிருடன் காணப்படுகின்ற பூதர்கள் பெருங்கடலும் அஞ்சுமாறு ஆரவாரித்துக் கொண்டு போருக்கு எழுந்தனர். தக்கை, உடுக்கை, துடி, சல்லரி, தடாரி, தொகுதியான தண்ணுமை, ஒலிமிக்க பேரிகை, குடவடிவுடைய குடமுழா, படகம், வீணை, குழல், ஆம்பல், கொக்கரை, என்பனவற்றைக் கோடிக்கணக்கான பூதர்வாசித்தனர். ஆறுமுகப் பெருமானின் பணியை மேற்கொண்டு குற்றம் இல்லாத தம்பியான வீரவாகு தேவரும், எட்டுக் தலைவரும், இலட்சம் வீரர்களும் நெருங்கிய பூத கணத்தின் வலிமையுடைய தலைவரும் தேர்கள் மீது அமர்ந்தவராகிப் பலம் பொருந்திய உறுதியுடனேயே படையிடையே சென்றனர்.

மிக்க கூட்டமான தலைவர்களை முன்னே உடைய படைகள் இவ்வாறு செல்லச் சிவபெருமான் பெற்றெடுத்த மகனான ஆறுமுகப் பெருமான் மாணிக்க ஒளி வீசுகின்ற நிலையான தேரிலே போய்க் கூட்டமான அசுரர்களின் போர் முனையைச் சேர்ந்தருளினார். அவ்வாறு அப்பெருமான் போர்க்களத்தை அடைந்த போது, வானத்திலும் பூமியிலும் தம்மைப் பற்றி உண்கின்ற வடவைத் தீயின் வன்மையை அழிப்பேன் என்று எண்ணிக் கடலானது பரவிப் பக்கங்களில் சுற்றிக் கொள்ளும் தன்மையைப் போல், விரைவாக வளைந்து கொண்டது.

அவ்வாறு அசுரப் படையானது சூழ்ந்து கொண்ட போது, வெற்றி வாய்ந்த கொடிய பூதர்கள் மேல் எழுந்து அதட்டினர்; பொருந்திய அசுரர் படையை உதைத்தனர்; உடனே அந்த அசுரர்களும் இவர்களை தாக்கினர். பெரும் போர் ஏற்பட்டது. அண்டம் பிளவுபட்டது. வீரவாகு தேவர் கந்தவேளின் திருவடிகளை வணங்கிச் சினந்து ஒப்பில்லாத அஞ்சத்தக்க கொடிய வில்லை வளைத்து நாண் ஒலியை உண்டாக்கித் தேவர்கள் எல்லாம் வியப்பு அடையவும், அசுரர்கள் தளரவும், அசுரேந்திரனை அம்புகளால் மறைத்தார். அம்புகள் மறைக்க, அதனால் உடல் முழுவதும் இரத்தம் ஒழுகவும், வலிய அந்த அசுரன் ஆற்றல் பொருந்திய கடும்வில் ஒன்றை வளைத்து, வீரவாகு தேவரின் திருமேனிமீது, பிறை போன்ற உச்சியைக் கொண்ட ஆயிரம் அம்புகளைச் செலுத்தினான். அவர் திருமேனியிலும் இரத்தம் பெருக்கெடுத்தது. அதனால் அந்த இருவரும் பால சூரியர்கள் போல விளங்கினர். தாரகாசுரனின் மைந்தனான அசுரேந்திரன் ஏழு அம்புகளை தொடுத்து அச்சத்தை தருகின்ற சிங்கம் போன்ற வீரவாகு தேவரின் கையிலே இருந்த வில்லைத் துண்டு செய்தான். வீரவாகு தேவர் மற்றொரு வில்லை எடுத்து வளைத்து நஞ்சைக் கக்கும் கூரிய ஆயிரம் அம்புகளை அசுரேந்திரன் மீது எய்தார்.

வீரவாகு வாளை உரையினின்று உருவி எடுத்துத் தேவர்களைப் போல வான்வழியாக சென்று, இறகுகள் அரியப்பட்ட மலை போன்ற அசுரனின் தேர்மீது இராகு என்ற பாம்பு விழுங்கும் சந்திரனைப் போல குதித்து இமைப் போதில் அவனது கைகளில் ஒன்றை வெட்டினார். தன் கை துண்டு படவும் தாரகனின் மகனான அசுரேந்திரன் சினந்து வலிய கதை ஒன்றை எடுத்து வீரவாகு தேவர் மீது அடிக்க, விரைவாக அவர் வானத்தில் எழுந்து ஒப்பில்லாத தனது சிவந்த பொன் திருவடியால் அந்த அசுரனின் தலையிலே உதைத்தார். வீரவாகு தேவர் தம் அழகிய திருவடியால் உதைத்து வானத்தில் எழுந்து செல்லவும், அதைப் பார்த்து, புகையுடைய விழியைக் கொண்ட அசுரேந்திரன் அவரைத் தொடர்ந்து உடை வாளைக் கொண்டு பின்செல்ல, மேலானவரான வீரவாகு தேவர் சினந்து, பொன் மயமான வாளால் அவனது தலை அறுமாறு வெட்டினார்.

அசுரேந்திரனின் அறுபட்ட தலையும் உடலும் விழுந்து உருண்டன. அவனது உயிர் வானில் சென்றது. அதைப் பார்த்த தேவர் ஆரவாரம் செய்தனர். அண்டங்கள் பலவற்றை வென்ற சூரபன்மன் தன் தம்பியரின்

மைந்தர் இருவரும் மடிந்ததும் போரிட்டு அவர்கள் பக்கத்தில் பொருந்தியிருந்த படைகள் அஞ்சி ஓடியதும் ஆகியவற்றைக் கண்டு, நெருங்கிய ஊழித் தீயானது உலகை அழிப்பதற்கு எழுந்தது போல சினம் கொண்டு சீறியெழுந்தான். சினம் கொண்ட, காசிப முனிவரின் மகனான சூரபன்மன் 'போர் செய்கின்ற ஆற்றலையுடைய வீரவாகுவை நான் கொல்வேன்' என்று மனத்தில் எண்ணி, காற்றைவிட விரைவாக ஓடுகின்ற தேரில் வந்து சேர்ந்து, எமனின் கொடிய பசியைத் தணிக்கக் கூடியதான ஒப்பற்ற வில்லை வளைத்தான்.

சூரபன்மன் தான் விடும் அம்புகளால் பூதப் படையினரின் தலைகளைத் துளைத்தான். முகங்களைக் துளைத்தான். தோள்களைத் துளைத்தான். மாலை சூடிய மார்புகளை துளைத்தான். கைகளைத் துளைத்தான். கடிப்பிரதேசத்தைத் துளைத்தான். தொடைகளைத் துளைத்தான். கழல்கள் அணிந்த கால்களைத் துளைத்தான். பூதப் படைத் தலைவர்களும் தளர்ந்தனர். 'வக்கிரன்' என்பவன் வருந்தி விழுந்தான். 'வச்சிரன்' இரங்கினான். 'கபாலி' மன வன்மை அழிந்தான். 'உன்மத்தன்' தளர்ந்தான். பெரிய மலையை ஏந்தி 'அச்சுதன்' நின்றான். 'மாபலன்' என்பவன் ஓடவில்லை; எதிர்க்கவும் இல்லை. வீணே நின்று வருந்தினான். 'மதிசயன்' வாடினான். 'மேகன்' மருட்சி கொண்டான். 'அண்டவாபரணன்' துயரை அடைந்தான். 'மேகமாலி' உள்ளம் நடுங்கினான். 'சுப்பிரன்' மெலிவு அடைந்தான். 'காகபாதன்' உடல் துடித்தான். 'உதவகன்' கவலை அடைந்தான். 'அசமன்' உடலினின்று வடியும் இரத்தத்துள் முழுகினான். 'பெரிய வந்தன்' மனம் வருந்தி இரங்கினான். 'அத்திரி' மடிந்தான். கதிரவன் சற்றுத் தளர்ந்தான். பூபதுமன் தோற்றான். வியாக்கிரன் களைத்துத் தளர்ந்தான். 'தனஞ்சயன்' ஓடிவிட்டான். மந்தன் சூரபன்மனைத் திட்டி பெருமூச்சு விட்டான். 'பினாகி' உடல் தளர்ந்தான். 'சித்திராங்கத'னும் 'கனக'னும் துன்பக் கடலில் மூழ்கினர்.

'மாலி'யும் 'நீல'னும் உள்ளம் வருந்தினர். 'கும்ப'னும் 'நிதம்ப'னும் பெரிய கண்கள் பஞ்சடைந்தனர். 'சண்டி'யும் துடித்து அஞ்சி ஏங்கினர். 'வாம'னும் 'சோம'னும் உயிர் அழியப் பெற்றனர். சூரபன்மன் எய்த அம்புகள் பூதப் படையினரின் மார்புகளைப் பிளந்திட வருத்தித் தளர்ந்து இலட்சம் வீரர்களும் விழுந்தனர். அதைப் பார்த்து வருந்தி வீரமார்த்தாண்டன் என்ற வீரன், கையில் பொருந்திய வில்லுடனே விரைந்து வந்து, சூரபன்மனை எதிர்த்தான். பகைவர்கள் எல்லாம் அஞ்சுகின்ற 'வீரவாகு' தேரில் ஏறிவந்து

எதிர்க்கவும், அவரது அழகு பொருந்திய உருவத்தைப் பார்த்து 'இவன் முன் நம்மிடம் தூதனாக வந்தவனே' என்று நினைந்து மிகவும் சினம் கொண்டு, அசுரனின் தலைவனான சூரபன்மன் "எம் வீரமகேந்திர நகரத்தை அழித்து எண் இல்லாத எம் உறவினரைக் கொன்றாய். அளவில்லாத படைகளை அழித்தாய். வச்சிரவாகு முதலான இளைஞரைக் கொன்றாய். உன் உயிரைக் கொண்டு நின் போர்த் திறமையை முடிப்பேன்!" என்று முழக்கமிட்டான்.

அதுகேட்ட வீரவாகுத் தேவர் "நான் தூதனும் ஆவேன். அமைச்சனும் ஆவேன். பகைவரின் மீது கொடிய போரையும் செய்வேன். வேலையுடைய எம் முருகப் பெருமான் சொல்லும் பணியாவற்றையும் செய்வேன். நான் உலகத்தில் எத்தொழிலையும் செய்ய வல்லவன்! நீ விரும்பும் போரைச் செய்வாயாக!" என்று உரைத்தார். வீரவாகுதேவர் இவ்வாறு சொல்லவும், சூரபன்மனுக்குக் கண்கள் எரிந்தன. ஒளியுடைய பற்கள் உதடுகளைக் கடித்தன. உடலில் மயிர்கள் புளகம் கொண்டன. சினமானது மனத்தில் எழுந்தது. அசுரனான சூரபன்மன் மலை போன்ற தன் வில்லை வளைத்தான். நாண் ஒலியை எழுப்பி, கொடிய அம்புகளைச் சினத்துடன் எய்தபோது பெருந் தோள்களையுடைய வீரவாகு தேவர் அவற்றை அழித்து, நூறு அம்புகளை அச்சூரனின் நெற்றியில் பொருந்துமாறு விட்டார். அழிவில்லாதவனான சூரபன்மனின் நெற்றியை அடைந்த நூறு அம்புகளும், வச்சிரத்தால் ஆன பெரிய மலை ஒன்றின் மீது உச்சியலே பொருந்தும் ஊசிகள் அழிவது போல், முரிந்து தூளாயின.

சூரபன்மனால் எய்யப்பட்ட அம்புகள் எட்டும் வீரவாகு தேவரின் தோள்களில் பாய்ந்து குருதியைக் குடித்துப் பிடரியைப் பிளந்து கொண்டு தேவர்கள் எல்லாம் அஞ்ச ஓடிச் சென்றது. அங்ஙனம் சூரபன்மன் வீரவாகு தேவரின் தேரையும் பாகரையும் கொன்ற போது வெற்றியையுடைய தோள்களை உடைய வீரவாகு தேவர் வட்டமான சக்கரத்தையுடைய மற்றொரு தேரின் மீது ஏறிப் பெரிய அக்கினிக்கணை, வாயுக்கணை என்ற கணைகளை எய்தார். அதைச் சூரபன்மன் அறிந்தான். தான் எய்த அக்கினி வாயுக் கணைகள் பயனற்றுப் போனதை அறிந்த உமையம்மையாரின் திருவடிகளினின்று தோன்றிய சக்திகள் பெற்ற மைந்தருள் தலைவரான வீரவாகு தேவர், பின் வருணக் கணை, நிருதிக்கணை, இந்திரக் கணை என்ற மூன்றையும் வன்மையுடைய கொடியவனான சூரபன்மனின் மார்பிலும் தோள்களிலும் புகுமாறு எய்தார். அவை மூன்றும் அசுரரின் தலைவனான

## 1. சிகிவாஹனர்

*சதுர்புஜம் ச ஏகவக்த்ரம் த்ரிநேத்ரம் அபயம்வரம்*

*பாசாங்குச ததம் சைவ ஜ் வாலகேச சிகண்டகம்*

*இந்த்ரநீல ரதாரூடம் ரக்தோத்பல ஸமப்ரபம்*

*சதுர்தசாதி பிபவனம் சிகிவாஹனம் ஆசரேத் ரக்தவர்ண:*

*ஒரு திருமுகம், மூன்று கண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே அபயம், வரதம், பாசம், அங்குசம் ஜ்வலிக்கும்; தோகையையுடைய மயில், இந்த்ரநீலரதத்தில் வீற்றிருந்து, செந்தாமரை ஒளி, பதினான்கு உலகங்களிலும் பவனி.*

சூரபன்மனின் இரண்டு தோள்களிலும் மார்பிலும் அடைந்து அழித்தன. அப்போது வீரம் வாய்ந்த தோள்களை உடைய வீரவாகு தேவர் மாயக்கணை, அசுரக்கணை என்பனவற்றை விரைவாக விடுக்கவும், அவை சூரபன்மனிடம் சென்று அவன் உடலில் பட்டுத் தூளாக ஆயின.

தேவரின் படைகளான இவை எல்லாம் அழிந்திடவும், வீரவாகு தேவர் பகைவனான சூரபன்மனின் ஆற்றலைக் கண்டார். மிகவும் வியப்படைந்து, இவ்வுலகத்துடன் உயிர்க் கூட்டங்கள் எல்லாவற்றையும் படைத்தவனான நான்முகக்கணையும், திருமால் கணையையும் ஒன்றாகச் சேர்த்து விரைவாக விடுத்தார். அவையும் வன்மையற்றதாய்த் திரும்பி வருதலை நீண்ட வெற்றி பொருந்திய தோள்களையுடைய வீரவாகு தேவர் கண்களில் தீப்பறக்கப் பார்த்து, மிகவும் வியப்பு அடைந்து நின்றார். நிற்க, அண்டங்கள் ஆயிரத்தெட்டினையும் ஆள்கின்ற சூரபன்மன் சிரித்து அவரை நோக்கி சொல்லலானான். "நான்முகன், திருமால், உருத்திரன் என்ற மூன்று மூர்த்திகளுக்கும் முதல்வனான இறைவன் அளித்த வரத்தால், எந்தத் தேவனின் படையைச் செலுத்தினாலும் என்னை அவை வெல்லா. எந்தத் தேவரின் படை விட்டாலும் அதற்கு எதிராகப் போரிட ஒரு படையும் விடுத்துத் தடுக்க மாட்டேன். ஏனென்றால் அவற்றின் வன்மையை அறிவேன். நீ செலுத்திய ஆற்றல் உடைய கொடிய அம்புகள் என்னிடம் விரைவாக வந்து பெற்ற வெற்றி ஒன்றும் இல்லை என்பதைக் கண்டாய். என் மார்பில் விரைந்து வந்து தாக்கி அழிந்தன; மடிந்தன; முறிந்தன; பொடிந்து எரிந்தன; கரிந்தன. என் ஆற்றலை இப்போதாவது நீ அறிந்து கொள்" என்று சூரபன்மன் சொல்லவும் முருகப் பெருமானுக்குத் தம்பியான வீரவாகு தேவர் "இனி நான் விடப்போகும் கணை ஒன்றால் பகைவரின் மன்னனான சூரபன்மனின் வலிமையை அறிவேன்" என்று எண்ணி முன் காலத்தில் திரிபுரங்களை வென்றருளிய சிவபெருமானின் படைக்கலத்தை (சிவக்கணையை) பொருந்திய உள்ளத்தில் வழிபாடு செய்து விடுத்தார். வீரவாகு தேவர் சிவக் கணையை விடுகின்ற போது அது நஞ்சு, வெம்மையான தீ, இடி, கடுங்காற்று, இருள், கதிரவன், எமன், பல பூதங்கள், தொடுக்கின்ற வில், சூலம் என்ற இவையெல்லாம் சூழ 'இது உலகத்தை அழிக்கும் காலம்' எனப் பெரிதாக ஆரவாரித்து வந்தது. அசுரர்க்குத் தலைவனான சூரபன்மன் தன்னை நோக்கி வருகின்ற சிவக்கணையைப் பார்த்தான். 'இது முன் என் மார்பினை அடைந்து உடைந்து அழிந்து போன படை போன்றது அன்று. இப்படை சிவப் படையாகும், நான் பெற்றுள்ள

அதே சிவக்கணை போன்ற கணையால் இதனைத் தடுப்பேன்' என்று எண்ணித் தன்னிடம் இருந்த பழைய சிவக்கணையை எடுத்தான்.

காணத்தக்க நெற்றியில் விழியையுடைய தெய்வத் தன்மை கொண்ட சிறந்த சிவப்படைகள் இரண்டும் ஒன்றை ஒன்று எதிர்த்துப் போர் செய்தால், உலகமானது அழியும் என்று தேவர் துதிக்கவும், அவை தம்மை விட்டவரிடமே விரைவாகத் திரும்பின. அந்தச் சமயத்தில் சூரபன்மன் மூன்று தலைகளை கொண்ட பெரிய அம்புகள் பதினைந்து செலுத்தி வியக்கத்தக்க தோள்களையுடைய வீரவாகு தேவரின் கையில் இருந்த வில்லைத் துண்டாக்கினான்.

மிகவும் உயர்ந்த சினமுடைய வீரவாகு தேவரின் திருமகள் வாழும் மார்பின் மீது மணித் தண்டானது தாக்கவும் வீரவாகு தேவரின் உடலினின்று இரத்தம் ஒழுகி வெளிப்பட்டு ஆறுகள் போல அலை வீசிச் சென்றது. சூரபன்மன் கதையினால் பிளக்கப்பட்ட மார்பை உடையவராகவும், புகையும் உள்ளத்தை உடையவராகவும், தளர்ந்த உடலினராகவும், வீரவாகு தேவர், தேவர்கள் அஞ்சும் வண்ணம் விழுந்தார். வீரவாகுதேவரும் இரண்டாயிரம் வெள்ளப் படையும் ஊக்கம் கொண்ட வலிமை அழிந்து தோற்று ஓடியதும் ஆகிய தன்மையைப் பன்னிரு விழிகளையுடைய முருகப்பெருமான் பார்த்தருளினார். அங்கு அச்சமயத்தில் ஆறுமுகக் கடவுள் தேர் மீது இருந்த பாகனைப் பார்த்து ''சூரன் மீது தேரை விரைவாகச் செலுத்துவாயாக!'' என்று தேவர்கள் போற்ற உரைத்தருளினார். ஒப்பில்லாத ஆறுமுகக் கடவுள் இவ்வாறு சொல்லவும், வாயு என்ற ஒப்பற்ற தேர்ப்பாகன் நாகர்களின் தொகுதியான மணிகள் பதிக்கப்பட்ட அழகுடைய தெய்வத் தன்மை கொண்ட தேரை ஒப்பில்லாத சூரபன்மன் முன் செலுத்திச் சென்றான்.

சூரபன்மன், பலகோடி கதிரவர்கள் திரண்டு ஒன்றாகக் கூடி உலகத்தில் உள்ள இருளை ஓட்டி உயர்ந்த வானத்தை விட்டுப் போர்க்களத்தை வந்து சேர்ந்தாற் போன்ற தூய ஒப்பில்லாத மேனியுடைய முருகப் பெருமான் போர்க்களத்தில் தோன்றிய தோற்றத்தைப் பார்த்தான். தாமரை மலர்ந்ததைப் போன்ற ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கண்களும், குண்டல வரிசைகளும், செம்பொன்னால் ஆன முடியும், அழகிய மார்பும், பன்னிரண்டு திருக்கைகளும், அத் திருக்கைகளில் விளங்கும் அழகுடைய படைக்கலங்கள் யாவும், தண்டையும், சிலம்பும் ஒலிக்கும் திருவடிகளும் விளங்கச் சூரபன்மன் ஆறுமுகப்பெருமானைக் கண்டான்.

உள்ளத்தால் அறிதற்கு இயலாத திருவடிவத்தைக் கண்ணால் கண்டு முன் நின்ற சூரபன்மன் 'உலகம் முழுவதையும் அழித்தற்கு இருக்கின்ற சிவபெருமானின் திருக்குமரனான முருகப் பெருமான் இவன்!'. என எண்ணி உள்ளத்தில் சினம் பொங்க, முருகப் பெருமானைப் பார்த்து "அழிந்து போன உன் படைக்கெல்லாம் தலைவனாய் என்னிடம் தூதனாக வந்த வீரவாகு தேவரும் போர் செய்து உயிர் நீத்த பின்பு நீ ஒரு சிறுவனோ என்னுடன் போர் செய்து வெற்றி அடையப் போகின்றாய்? நன்று, நன்று உன் எண்ணம்! மேலான உன் தந்தையும், விண்ணையும் மண்ணையும் படைத்து அளித்த நான்முகனான தலைவனும், திருமாலும், என்னுடன் கொடிய போரைச் செய்ய நினைக்கவில்லை. சிறுவன் நீயா என்னுடன் போர் செயல் செய்ய! நன்று, நன்று என்று கூறி நகைத்தான்.

சூரபன்மன் இவ்வாறு கூறவும், அரிய அருளின் வடிவமாக நின்ற அழகான முருகப்பெருமான் சிறுநகை தோன்ற "நாம் வெற்றியையும் உடையோம். மிக்க ஆற்றலையும் உடையோம். மேன்மையையும் உடையோம். எண்ணில்லாத படைகளையும் உடையோம். அழியாத இயல்பையும் உடையோம். படையான பெருங்கடலை உடையோம்!" என்று நினைத்து இனிச் செருக்குக் கொள்ளாதே. விரைவில் இவற்றையெல்லாம் அழிப்போம். வரங்கள் மிக்க சிறப்படைய எங்களை மழலை பேசும் இளஞ் சிறுவனோ போரிட்டு வென்றிட வல்லவன் என்று உன் மனத்திலே எண்ணினாய். நீ அறிவற்றவன். சிவபெருமானின் நெற்றிக் கண்ணினின்று தோன்றிய ஒரு சிறுதீப்பொறி அன்றோ உலகத்தையெல்லாம் அழிப்பது."

"அறிவை உடைய முதியவர் என்றும், வயதில் தாழ்ந்தவர் என்றும் சிறியவர் என்றும், பெரியவர் என்றும், திருத்தமான தகுதியுடன் கூடிய வளங்களை உடையவர் என்றும், வறியவர் என்றும், வீரர்கள் மதிக்க மாட்டார். எவராய் இருப்பினும் வெற்றியடையத் தக்க வன்மையுடன் வந்து எதிர்த்தால் கொடிய போரைச் செய்வார். நூற்றெட்டு என்று சொல்லப்படுகின்ற யுக காலம்வரை எல்லாப் பேறுகளுடன் இனிமையாக வாழ்ந்திருக்கின்ற பெரிய நின்வலிமையை, தேறுதலடையாத கொள்கையுடைய சிறிய! இன்றே நம் வன்மையினால் ஊற்றினையுடைய உவர்க்கடலில் புகுந்த நீர்போல அழிக்கின்றோம்!" என்று முருகப்பெருமான் அருளிச் செய்தார்.

இதுகேட்டுச் சூரபன்மன் சினந்து பெரிய இவ்வுலகத்தை முன்னம் தன் அடியில் அளக்க உயர்ந்து நின்ற திருமாலைப்போல அண்டத்தின்

உச்சியினைப் பொருந்துவது போன்ற அச்சம் தரும் வில் ஒன்றை வளைத்தான். அதனை ஆதிக்கடவுளான முருகப்பெருமான் பார்த்து, திருமாலும், நான்முகனும், தேவர்களும் பலவகை வாத்தியங்களை வாசித்துத் துதிக்க அரிய திருவாலங்காடு என்ற பதியிலே சிவபெருமான் திருநடனம் செய்த அக்காலத்தில், மேலே உள்ள பெரிய அண்ட முகட்டை அடையும் வண்ணம் உயர்த்திய ஒப்பற்ற திருவடியின் வடிவத்தைப் போன்றுள்ள ஒரு பெரிய வில்லை முருகப் பெருமான் எடுத்தார்.

வன்மையையும் பெரிய திறலையும் கொண்ட காளியின் செருக்கை அடக்கி, உலகத்தைக் காண்பதற்காகத் திருநடனம் செய்தருளிய கடவுள் தூக்கிய சேவடி, உலகை அழிக்காதிருக்கும் பொருட்டாகத் தடை செய்த செவ்விய கையைப்போல, ஆறுமுகப்பெருமான் அந்த வில்லை வளைத்தார். வளைத்த வில்லில் முருகப்பெருமான் எல்லா அண்டங்களும் உடைந்ததைப் போல நாண் ஒலியை எழுப்பினார். உடனே சூரபன்மன் சினந்து, உலகத்தில் உள்ள கடல்கள் யாவும் ஆரவாரித்துக் கொண்டே உடைந்ததைப் போல அந்த நாண் ஓசைக்குப் பதிலாகத் தன் நாண் ஒலியை எழுப்பினான்.

கூர்மையான தகட்டின் வடிவமாக ஆயுதங்களை உடைய சூரபன்மன் கொல்கின்ற அம்பு மழையைப் பெய்வித்து முருகப் பெருமானையும் அவர் ஏறியிருந்த தேரையும் உலகத்தையும் மறைத்தான். முருகப் பெருமான் திருவுள்ளத்தில் 'இவனது செய்கை நன்றாக உள்ளது!' என எண்ணிக் கொடிய அம்புகளைக் கூட்டமாக விடுத்து, அவற்றையெல்லாம் அழித்தார். சூரன் அம்புகளை இப்படி முருகன் அழித்த போது சூரபன்மன் சினம்கொண்டு, பின்பு நஞ்சு பூசப்பட்ட பொன்மயமான அம்புகளை விட்டான். உடனே முருகப்பெருமான் அம்புகளை விடுத்து அவற்றை அழித்து, சூரபன்மனையும் மறைத்து, வானத்தையும் அம்பு மழையால் மறைத்தருளினார்!. மிக்க வீரத்தை உடைய சூரபன்மனின் வேல் அழியவும், வேறொரு வில்லை வளைத்து, அம்பு மழையைப் பெய்யுமாறு செய்து, எதிர் எதிராக அவன் தொடுக்கும் அம்புகளை எல்லாம் தடுத்துச் சிறந்த ஆறு திருமுகங்களைக் கொண்ட முருகப்பெருமானின் தேரில் ஏழு பாணங்களை விட்டு ஆரவாரம் செய்தான். செம்மையான கதிர்களையுடைய கதிரவனைப் பகைத்த பானுகோபனை முன் பிள்ளையாகப் பெற்ற சூரபன்மன் விடுகின்ற கொடிய அம்பு கூட்டங்கள் பரம் பொருள் வடிவாக உள்ள முருகப்பெருமானின் மிகவும் உயர்ந்த தோள்களில் பட்டு நுண்ணிய தூளாக

ஆகிப் பற்றி எரியும் தீயில் அகப்பட்டு ஒரு பூளைப் பஞ்சினைப் போன்று ஆயின. நெருங்கிய அம்புகள் பட்டுச் சாம்பலானவுடன், முருகப் பெருமான் சூரபன்மனின் வல்லமை 'நன்று, நன்று' எனச் சினந்து. சிறந்த பத்து அம்புகளால் அவனது வில்லை அழித்து அவனுடைய நல்ல தேரையும் ஆயிரம் அம்புகளால் அழித்தார்.

மணி இழைத்த தேரை அழித்த பின்பு, வன்மையுடையவனான சூரபன்மனின் அணியை அணிந்த உறுப்புகள் முழுவதும் அம்புகளை எயது. அழகுபடுத்தி அணிந்துள்ள மதாணிகளை யெல்லாம் மறைகளாலும் துணிவதற்கு அரிய முருகப்பெருமான் துண்டாக்கினார்.

அப்போது சூரபன்மன் வன்மையில் குறைந்ததைப் பார்த்துப் பக்கத்தில இருந்த படைத் தலைவர்கள் நான்கு வகைப் படைகளுடன் கலந்து விடா அடைமழை போல அம்புகளை விடுத்து, முருகப்பெருமானைச் சூழ்நது கொண்டனர். ஏழு கடல்களும் அலைகளை மோதிக்கொண்டு மேருமலையைச் சூழ்ந்தது போல, ஒப்பில்லாத பல ஆயுதங்களை எய்து ஆரவாரத்துடன் விளங்கிய அந்தப் படையை, முற்காலத்தில் சாம்பலாகுமாறு பகைவரின் புரங்களை எரித்த சிவபெருமானின் மைந்தரான திருமுருகப் பெருமான் பார்த்து சூரன் பெரும் படைகளை விரைவாக அழிக்கும் திருவுளங் கொண்டு, தம் திருக்கரம் ஒன்றில் இருந்த தெய்வத்தன்மை கொண்ட சக்கரப் படையைக் கதிரவன் போல செல்லுமாறு எறிந்தருளினார்.

விளங்கும் கதிரவன் பாதி இரவிலே போய் எல்லையில்லாத இருளை அழித்தாற் போல சக்கரமானது அசுரர்களின் தலைகளும் உடல்களும கைகளும் கால்களும் பெரிய தோள்களான மலைகளும் விடுகின்ற அம்புகளும் அழிந்திடத் துண்டாக்கியது. கொடிய போர்ச் செயலைச் செய்கின்ற அசுரர்களை அழித்து வஞ்சத்தையும் மாயமான பெரிய இருட்டையும் ஒழித்து மிகுதியாகவுள்ள இரத்த வடிவாக உள்ள பெரிய நிறத்தை அடைந்து செந்நிறம் உள்ள கதிரவனாக ஆறுமுகப் பெருமான் சக்கரம் விளங்கியது.

இவ்வாறான சமயத்தில் எம்பெருமானின் எரிகின்ற கதிரையுடைய சக்கரம் போர்க்களத்தில் வந்து கொன்றதை வன்மையுடைய சூரபன்மன் உணரவில்லை. எதிரிலே சூழ்ந்திருந்த நெருங்கிய மிகுந்த படைகள் முழுமையும் அழிந்ததைப் பார்த்து உள்ளம் மயங்கித் தனிமரமாக அவன் நின்றான்.

சூரபன்மன் தேரை இழந்தான்; வில்லுமிழந்தான்; வெற்றி பொருந்திய போரையும் இழந்தான்; படைகளையும் இழந்தான்; பெரிய அணிகளையும் இழந்தான்; முடியையும் இழந்தான்; அரசு இழந்த மன்னரைப்போல் ஆனான். இவ்வாறு எல்லாவற்றையும் இழந்து நிற்கின்ற சூரபன்மன் கோபம் பொருந்திய கண்கள் சிவக்க, மனம் பதைக்க, கோபம் கொப்பளிக்க, ஒரு சிறுவனின் வன்மை நன்றாகவுள்ளது! நன்றாகவுள்ளது! என்று நகைத்து வெற்றியையுடைய நான்முகக்கணையை எடுத்தான். அச்சம் அளிக்கும் மேகம் போன்ற சூரபன்மன் விட்ட பெருமையுடைய நான்முகக் கணையானது சென்று அருகில் சேரும் போது பரம்பொருளான முருகப் பெருமானின் கைகளில் இருந்த வேலானது அந்த நான்முகக் கணையை விழுங்கியது. கொடிய அந்தச் சூரபன்மன், வேலானது நான்முகக் கணையை விழுங்குவதைப் பார்த்தான். மனம் புழுங்கித் திருமால் தந்த ஆயுதத்தை எடுத்து ஒலிக்கும் தீப்போல் சினம்கொண்டு எய்தான்.

சூரன் விட்ட திருமாலின் ஆயுதம் அளவில்லாத நாராயணர்களின் பெரிய வடிவங்களை உண்டாக்கிக் கொண்டு முருகப்பெருமானை நெருங்கி வந்த சமயத்தில், அவரின் வேலானது, அந்த நாராயணக் கணையையும் அழித்தது. வெற்றி வேலாயுதத் தலைவன் முருகப் பெருமானின் திருவருள் தன்மையால், நான்முகன் கணையுடன் திருமாலின் கணையையும் வேலானது உண்டது. சூரபன்மன் அதைப் பார்த்து வருந்தினான், என்றாலும் மனம் தேறி சிவபெருமானுடைய வெற்றியுடைய ஆயுதத்தை விட்டால் எவர் தடுக்க வல்லவர்? என மாயையால் பெற்றெடுக்கப்பட்ட சூரபன்மன் மனத்தில் நினைத்தான். திரிபுரங்கள் மூன்றிலும் தீயானது உண்டாகப் புன்னகை கொண்டவரான சிவபெருமானின் கணையை விடத் துணிவு கொண்டு, அதை எடுத்து வழிபாடு செய்யும் முறைப்படி வழிபாடு செய்து சூரபன்மன் விடவும் அக்கொடிய படை திருநடனம் செய்கின்ற திரிசூலத்தையுடைய சிவபெருமானின் பலவடிவங்கள் எவ்விடங்களிலும் நெருங்குமாறு ஆரவாரம் செய்து, தன்னிடம் முழுவதும் தீ மயமாக ஆக்கிக்கொண்டு விரைவாக வந்தது.

பூமி முதலிய உலகங்கள் எல்லாம் ஒரு நொடிப் பொழுதில் விரைவாக அழியுமாறு அழித்தருளுகின்ற கடவுளின் பெயரையுடைய ஆயுதமானது வரவும், அதை முருகப்பெருமான் பார்த்து, 'இது எம்பெருமானின் அம்பு' என்று முருகன் நினைத்து, ஒரு கையை நீட்டி வாங்கிக் கொள்வதைப் போல, வந்த அப்படையைப் பிடித்துக் கொண்டார். காளைக் கொடியையுடைய

இறைவன் திருப்பெயரால் விளங்கும் வெற்றியுடைய நீண்ட அம்பை முருகப்பெருமான் ஒரு கையில் கொண்டவராக விளங்கினார். மாயையின் மகனான சூரபன்மன் அதைப் பார்த்தான். ''நான் பெரிய வேல் படையினது வன்மையையும், வில்லாற்றலையும், இவையல்லாது மற்றுமுள்ள வன்மைகளையும் பார்த்தேன். இனி நெய்தல் மலர் போன்ற வாயை உடைய இந்தச் சிறுவன் செய்யும் செயலைப் பார்ப்பேன்'' என்று எண்ணி அசுரர் தலைவனான சூரபன்மன் ஒன்றும் சொல்லாது மௌனமாக நின்றான்.

சூரபன்மன் வியப்பு மேலிட்டு, மயக்கம் கொண்ட தன்மையுடையவனைப் போல நின்றதைப் பார்த்து, அருள் தன்மையால் முருகப்பெருமான் ''இந்திரனின் ஒப்பற்ற மகனான சயந்தனையும் தேவர்களையும் எல்லையில்லாத காலம் சிறையிலே வைத்தாய்! அவர்களை விடுவிப்பதன் பொருட்டாக யாம் ஒரு தூதனை அனுப்பினோம். அவன் உரைத்த சொல்லையும் நீ உள்ளத்தில் ஏற்கவில்லை. தேவர்களைச் சிறையினின்று விடுவிக்கவுமில்லை. அதனால் நாம் இங்கு வந்தோம். போரில் தனக்கு நிகர் அற்றவனாக இருந்த உன் தம்பி தாரகாசூரனை கொன்ற முறைப்படி உன்னையும் சினத்துடன் இன்றே கொல்வோம் என்று வந்தோம். எம்மிடம் நெடிய தாரகனை வென்ற வேல் இருக்கின்றது. அது உன்னைக் கொலவது அரிதும் அன்று. உறுதி! படைக் கருவிகளை இழந்து நிற்கும் உனது உயிரை பறிப்பது நீதிமுறைப்படி பழியாய் முடியும் என்று எண்ணிக்காலம் தாழ்த்துகின்றோம்.''

''பலபலவற்றைச் சொல்வதானல் என்ன பயன்? தேவர்கள் பலரும் நெருங்கியிருக்கின்ற சிறையினின்று அவர்களை விடுவிப்பாயானால் உன் உயிரை அழிக்க மாட்டோம்! அதனை மறுத்து விட்டால் விரைவில உன்னைக் கொல்வோம். உன் எண்ணங்கள் யாவை? சொல்வாயாக!'' என்று முருகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளினார். உலகம் எல்லாவற்றையும் காப்பதை விரும்பிச் சிறந்த ஆறு முகங்களையும் பன்னிரு திருக்கைகளையும் கொண்டு எழுந்தருளியிருக்கினற ஆறுமுகப் பெருமான் குற்றம் உடைய சூரபன்மனுக்கு இவற்றைச் சொல்லவும், அச்சூரபன்மன் பதிலாக ஒரு சொல்லையும் கூறாது, தன் மனத்தில் பின்வருமாறு நினைக்கலானான். ''மணம் கமழும் மாலை அணிந்த முருகன் அளவற்ற நாள்கள் என் எதிரே நின்று போர் செய்தாலும் நான் அவனுடன் நின்று போர் செய்தலின்றி வாளா நின்றாலும், இவனுடைய தந்தையால் தரப்பட்ட ஒரு நாளும்

அழியாதிருக்கும் வரம் பெற்ற என்னை, இவன் கொல்லும் வல்லமையுடையவனோ! வணங்கத்தக்க முடியும், குடையும் அறுபட இழிவுடையவனாக நான் ஒருவனே நின்று போர் செய்வதானாலும் அழியப் போவதில்லை! அழியாது போனாலும் அதனால் புகழ் உண்டாகப் போவதில் லை! பின் என்ன உண்டாகும் என்றால் பழிதான் வந்து சேரும். அந்தப்பழி இனிவராது காத்துக் கொள்வேன்.''

''பெருவெள்ளங்கள் வேறே உள்ள நீர் நிலைகளைக் கவர்ந்து கொள்ளுமே அல்லாது ஊற்று நீரையுடைய பெருங்கடலைத் தன்வயப் படுத்திக் கொள்ள முடியுமோ? அதுபோல இச்சிறுவன் எதிர்த்த படைகளையும் படைக் கலங்களையும் அழிப்பதே அல்லாது என் அழிவற்ற வரத்தையும் அழிப்பானோ? என்னை இவன் கொல்வது அரிது! நானும் இவனை வெல்லுதல் இப்போது அஃதேயாகும். ஆதலால் இங்கிருந்து நீங்கிச் சென்று பழைய நகரத்தில் உள்ள வளத்துடனும் செல்வத்துடனும் கூடியிருந்து பின்பு வந்து போர் செய்து மிக்க வெற்றியை அடைவேன்'' என்று இப்படிப் பலப்பல சூழ்ச்சிகளை உள்ளத்தில் நினைத்து, மாயை வடிவமான மந்திரத்தை மனத்தில் தியானித்து, போர்க்களத்தில் நின்ற மன்னன் விரைவாக மறைந்து, அங்கிருந்து நீங்கி பொன் விளங்கும் மகேந்திர நகரத்தில் உள்ள மாளிகைக்குள் போனான்.

மாயமாக மறைந்து போன சூரபன்மனின் செயலை உயிர்கள்தோறும் மறைந்துள்ள முருகப்பெருமான் அறிந்தார். ஓர் ஒப்பற்ற வேலை விடுத்து அவனது உயிரைப் பற்றிட எண்ணவில்லை. 'ஒருவேளை இன்னும் மனம் மாறித் தீயவன் தேவரைச் சிறைவிடுத்து உயிர் பிழைக்கக் கூடுமோ' என்ற திருவருளால்! அப்போது ஆறுமுகப் பெருமானிடம் திருமாலும், நான்முகனும், இந்திரனும், மற்றத் தேவர்களும் ஆகிய எல்லாரும் வந்து தூய்மையான வந்தனையுடனே சொல்லத் தொடங்கினர். ''வன்மையுடைய அச் சூரனை உம் வேலால் அழித்திடுவீர். ஆனால் அதற்கு முன்னம் அங்கு அவனுக்கு எதிராக அரிய போர் செய்வது எங்களிடம் வைத்த இனிய அருளே காரணம் ஆகும் அன்றோ?'' என்று திருமால் முதலிய தேவர்கள் சொல்லவும், எம் தந்தையான முருகப்பெருமான் அவற்றைச் செவிமடுத்துக் கேட்டு, ''நல்லது, நல்லது'' என்று நகைத்து ''இனி அவன் நம் முன் வந்து போர் செய்தால் விரைவாக அவனை வெற்றி கொண்டு கொல்வோம்!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அப்போது பூதப்படைத் தலைவர் கூர்மையான வேலையுடைய முருகப்பெருமானை நீங்கிச் சூரபன்மனின் மகேந்திரத்துக்குள் இனிச் செல்லுதல் தக்கதன்று என்று எண்ணி முருகப் பெருமான் இருந்த போர்க்களத்துக்குப் படைகளும் தாங்களும் திரும்பி வந்தனர். முருகப்பெருமானும் பெருமையுடைய வேலையுடைய படைவீரரும், தேவர்களும் துதிக்கப், படை எல்லாவற்றையும் அழைத்துக் கொண்டு தன் பாசறைக்குள் சென்றருளினார். பாடி வீட்டிற்குள் புகுந்து முருகப்பெருமான் பூதப் படையினர் குற்றமறச் செய்துள்ள தெருக்களில் தங்கி இருக்க, இந்திரன் முதலிய தேவர்கள் பக்கத்தில் இருந்து துதிக்க, இறைவனைப் போல் அரியணையில் வீற்றிருந்தார். எவரும் மனத்தாலும் அறிந்து கொள்ளாத வகையிலே அருவமாகிப் போர்க்களத்தை விட்டு நீங்கி, அசுரர் தலைவனான சூரபன்மன், நிகர் இல்லாத மகேந்திரபுரத்தின் அரண்மனைக்குள் இலக்குமி மண மாளிகை போலக் காணப்படும் மாளிகைக்குள் சென்றான். செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பட்ட உள் அடியினையும் சிலம்பு அணிந்த கால்களையும் உடைய பதுமகோமளை என்ற தன் மனைவியின் அந்தப்புரத்துக்குச் சென்று ஐந்து வகையான தன்மைகள் கொண்ட மென்மையான படுக்கை மீது அமர்ந்து, உறங்காதவனாகவும் எவருடனும் பேசாதவனாகவும் கொடிய போர்ச் செயல் பற்றியே நினைத்த வண்ணம் அச்சூரபன்மன் இருந்தான். அப்போது, சூரபன்மன் போர் செய்யச் சென்றதையும், போரிட்டதையும், 'தோற்றோம்' எனப் பெரிய நகரத்துப் படையின்றி வறியவனாக வந்ததையும், கதிரவனின் பகைவனான பானுகோபனுக்கு ஒற்றர் உரைத்தனர். "பகைவர் யாவரும் மடிய, விரைந்து போரைச் செய்வாயாக என, தந்தையே! நேற்று எனக்குச் சொல்லி போர் செய்தற்கு அனுப்பினாய், நான் தனியாகச் சென்று பகைவருடன் கொடும்போர் செய்தேன்!. என் தந்தையே! கதிரவன் உதயமானவுடன் பகைவர் மீது போர் தொடுக்க நான் வந்தேன். நான் இன்று புறப்படுவதற்கு முன்னமே படையுடன் நீ போருக்குப் புறப்பட்டுப் போய் விட்டாய். அமைச்சரோடும் ஆலோசனை செய்யவில்லை. என்னையும் அழைத்துக் கூறவில்லை! பொருந்திய நான்கு வகைப் படைகளுடன் போருக்குப் புறப்பட்டு விட்டாய். இது பெருமையுடையதோ? போனது போகட்டும். நான் சிறியவனே என்றாலும் ஒன்றை நான் இங்குச் சொல்வேன். உள்ளத்தில் கொள்வாயாக! இன்றைய இரவு கழிந்த பின்பு சென்று யாரையும் வெற்றி கொண்டு திரும்புவேன். என்னை அனுப்புவாயாக! கூர்மையான

வேலையுடைய முருகப்பெருமானை அவனுடன் வரும் வீரர்களுடன் வெற்றி கொள்ளேன் என்றால் இங்குத் திரும்பி வரமாட்டேன். நீ அளிக்கும் அரசாட்சியையும் நான் விரும்ப மாட்டேன்!'' என்று பானுகோபன் சொன்னான்.

மைந்தன் பானுகோபன் உரைத்ததைக் கேட்டதும், எல்லா உலகங்களுக்கும் துன்பத்தைச் செய்யும் சூரபன்மன் மகிழ்ந்து தன் முகத்துக்கு எதிரே நிற்கும் தன் மைந்தனைப் பார்த்து சொல்லலானான். ''பன்னிரண்டு சிவந்த கைகளுடைய அச்சிறுவனுடன் எதிர்த்துப் போர்ச் செயலைச் செய்பவர் என்னையல்லாது வேறு ஒருவர் இல்லை. இவன் சிறியவன் என்று முருகனை நினைக்காதே. அவன் வலிமையில் ஒப்பில்லாதவன். கிரவுஞ்ச மலையைக் கொன்ற கூர்மையான வேலை ஏந்திய கையினையுடைய வலிய ஆற்றல் உடைய சிறுவனை நானே வென்றிடுகின்றேன். ''நீ தூதன் என வந்து நம் ஊரைத் துன்பப்படுத்திய பகைவரின் பெரும் படைக்குத் தலைவனான வீரவாகுவைப் படையுடன் போய்த் தனியழைத்துப் போரிட்டு கொன்று வருவாயாக'' என்று சொன்னான்.

## 5. மூன்றாம் நாள் போர்

கதிரவன் தோன்றியவுடனே, சூரபன்மனின் மகனான பானுகோபன் உறக்கத்தை விட்டு எழுந்து மரபுப்படி நாள்தோறும் செய்யக்கூடிய கடமைகளைச் செய்து முடித்து, முன்பு போரில் புறங்காட்டி ஓடிவந்து விட்டதை எண்ணி ஒப்பற்ற மாயை என்பவளைத் துதிக்கத் தொடங்கினான். வணங்கித் துதித்ததும் மாயை என்பவள் கொடுங்கோன்மையுடைய அப்பானுகோபன் எதிரில் வெளிப்பட்டு நிற்கவும், தொழுகின்ற கையை உடையவனாய், அவளிடத்தில்தான் பெற வேண்டிய பேற்றினை எண்ணிப் பின்வரும் இவற்றைச் சொல்லத் தொடங்கினான். ''என் தந்தையின் தாயே! கேட்பாயாக! ஆறுமுகனின் தூதன் வீரவாகுடன் போர் செய்தேன். அதனால் குற்றமற்ற மானத்தையும் இழந்து மிகவும் வருந்தினேன். என் வலிமையையும் இழந்து விட்டேன். பகைவருடன் போர் தொடங்கி இறுதியில் தோற்போர் அடையும் துன்பத்தை அடைந்தேன். இதை விட என்ன பழி எனக்கு வரப்போகிறது?'' என்று பானுகோபன் சொன்னதைக்

கேட்ட மாயை என்பவள் "பானுகோபனே! நீ வேத மார்க்கத்தினை விலக்கினாய்; தேவரைச் சிறையிலே அடைத்தாய்; இந்திரன் முறைமைகளை அழித்தாய்; முனிவர் செய்யும் தவங்களைக் குறையும்படி செய்தாய்; கொடுமைக் குணமே, மேலானது என எண்ணிவிட்டாய்!

"இடைவிடாமல் உயிர்கள் போற்றும் திரிமூர்த்திகளும் உனக்குப் பகைவர். ஆனால் முனிவருடனே தேவர்களும் பகைவர் ஆனால, வானத்தில் உள்ள எல்லோரும் பகைவர் ஆனால் நீ எவ்வாறு வாழ இயலும்? பலவகையாகப் பகுத்துக் பலவற்றை இங்குச் சொல்வதால் என்ன பயன்? மற்றவரால் வெல்வதற்கு அரிய ஆற்றலுடைய சூரபன்மனின் மகனே! நீ வேண்டுவதைக் கேள் தருவேன்!" என்று மாயை கூறவும் மிகவும் மகிழ்ந்து பானுகோபன் "நேற்று என் எதிரில் நின்று போர் செய்து என்னை வெற்றி கண்டு திரும்பிச் சென்ற வீரவாகுவை, இன்று அவன் படையுடன் அழிக்க, ஓர் ஆயுதத்தைத் தருவாயாக!" என்று பானுகோபன் வேண்டிக் கொண்டான்.

வெற்றியிலும் வன்மையிலும் பிழைத்த அசுரனான பானுகோபன் கூறியவற்றை மாயை கேட்டு, தன் ஒப்பற்ற ஆயுதத்தை உண்டாக்கி, அவனது கையில் தந்து "நீ இதை மறைவாக நின்று போடுதல் வேண்டும். அங்ஙனம் விட்டால், இது முருகனின் தூதனையும் மற்றவர்களையும் அறிவை அழித்துச் சுழல் காற்றின் செயலையும் செய்யும். இதனால் இன்றைய வெற்றி உன்னுடையது. செல்வாயாக!" என்று மாயை உரைத்தாள். இவற்றைச் சொல்லிவிட்டு மாயை வானத்திலே சென்றாள். அவள் கொடுத்த வரத்தால் பெற்ற 'மாயை' என்ற பெரிய ஆயுதத்தைத் தாங்கிய அந்தப் பானுகோபன், நேற்று அடைந்த பழி நீங்கியவனாய் மிக்க பெருமை அடைந்தான். கூர்மையான அம்புகள் பொருந்திய அம்பறாத் தூணியைச் சிறப்புடைய பிடரியில் கட்டி, கவசத்தை உடலில் பூண்டு, கரிய பெரிய வில்லைக் கையிலே கொண்டு இத்தகைய போர்க்குரிய பிற பெரிய கருவிகளையும் அணிந்து தோன்றினான். வாயுக்கணை, தீக்கணை, எமக்கணை, இரு முனைகளைக் கொண்ட சந்திரக்கணை, கதிரவன் கணை, திருமால்கணை, சிவக்கணை, தாமரை மலரில் இருக்கும் நான்முகக்கணை முதலியவற்றைப் பானுகோபன் எடுத்துக் கொண்டான்.

மதில் சூழ்ந்த படைக்கலக் கொட்டிலுக்குள் இருந்த தெய்வத் படைக்கருவிகளை எடுத்துக் கொண்டு, அந்த ஆயுதங்களால் தரப்பட்ட வெற்றி பொருந்திய வில்லையுடைய பானுகோபன், தம் படையினர் துதிக்க

வாயிலுக்கு வந்தான். 'ஏமகூடம்' என்ற பெயர் கொண்ட அழகிய இடம் அகன்ற பாடி வீட்டை அடைந்து பகைவர்க்கு அச்சத்தை உண்டாக்குகின்ற வேலையுடைய சிறந்த முருகப் பெருமானுக்குத் தம்பியான வீரவாகுவைப் பார்த்து தூதர் பானுகோபன் படை எடுத்து வருவதைக் கூறினர். வீரவாகு தேவர் தம் படைகளுடனே படைத்தலைவர்களும் சூழ்ந்து வர வெற்றியுடைய வேலையுடைய முருகப் பெருமான் திருமுன் சென்று, தலைவனான முருகப் பெருமானின் தாமரை மலர் போன்ற பொற்பாதங்களை வணங்கி எழுந்து சிவந்த கைகளைக் கூப்பி முன்னால் நிற்கவும், அழகின் வடிவமான அப்பெருமான் அங்கு நடந்தவற்றை அறிந்து கொண்டு பின்வரும் இவற்றைத் திருவாய் மலர்ந்தருளினார். "வீரவாகுவே! நேற்று உன்னிடம் தோற்று ஓடிய சூரபன்மனின் ஒப்பற்ற மைந்தனான பானுபோபன் உன்னை எண்ணி தைரியத்துடன் இன்று போருக்கு வந்துள்ளான். எனவே முன்போலவே நெருங்கிய படைத்துணையுடனே நீ சென்று போர் செய்க. அவன் படைக் கருவிகளாக விடுவனவற்றுக்கு நீயும் படைக் கருவிகளை விடுவாயாக! இதுவன்றி, அவன் மாயத்தைப் செய்வானானால் நம் வேலானது வந்து அந்த மாயையை விலக்கும். நீ சென்று வருக!" என்று எம் இறைவன் திருவாய் மலர்ந்தருள, அப்பணியைத் தலை மேற்கொண்டு, முன்னம் தூதராகச் சென்று போர் செய்த வீரவாகுதேவர் அப்பெருமானின் திருவடிகளை வணங்கி விடை பெற்றுச் சென்றார்.

பூதப் படையினரின் நடுவே பானுகோபன் போகவும், வீரவாகுதேவர் அவனது எதிரில் போய் ஒரு நீண்ட வில்லைக் கையிலே எடுத்துக் கணைகளைப் பூட்டினார். வீரவாகு தேவர் எய்கின்ற கொடிய அம்பும், கதிரவனும் அஞ்சுகின்ற பானுகோபன் எய்கின்ற அம்பும் பொருந்தி எதிராகக் கவ்வி நெருங்கிய பாம்புக் கூட்டங்கள் சினந்து போர் செய்வதைப் போல் பகை கொண்டு ஒன்றுக்கு ஒன்று மோதின. வீரவாகு தேவர் சினம் கொண்டு வெற்றியுடைய கொடிய அம்புகள் ஆயிரத்தால் பானுகோபன் தேர்ப்பாகரும் குதிரையும் தேரும் ஒருங்கே அழியுமாறு செய்தார். அவ்வாறு செய்யவும், பானுகோபன் வேறொரு தேரின்மீது ஏறிப் பெரிய கையில் வில்லை அவன் வளைப்பதற்கு முன்பு வீரவாகுதேவர் ஆயிரம் அம்புகளைத் தொடுத்தார். அவை அவனது மார்பை பிளந்தன. அதைக்கண்ட பூதர் எல்லாரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர் என்றாலும் பானுகோபன் மனம் தளராது வீரவாகுத்தேவர் மீது வருணக்கணை ஏவ, வீரவாகுத்தேவர் தீக்கணையைக் கையில் எடுத்தார். முருகப்பெருமானின் தூதன் வீரவாகு தேவர் விட்ட

தீக்கணையானது சென்று வருணக் கணையினை அழித்து. அக்கணையினால் உண்டான நீர் அலைகளையுடைய பெருகி எழுந்த வெள்ளங்களை எல்லாம் குடித்து, மேலே எழுந்து, பானுகோபன் பக்கத்தில் போய் அவனைப் போர்த்தது எனக் கூறுமாறு சூழ்ந்து கொண்டது. தன்னைச் சூழ்ந்து கொள்கின்ற அந்தத் தீக்கணையைக் கண்டு பானுகோபன் சினம் கொண்டு காற்றுக்கணையை எறிந்தான். அது ஊழிக்காலத்துத் தோன்றும் சூறைக் காற்றின் உருவைக் கொண்டு வர, வீரவாகு, பானுகோபன் மீது கருடக் கணையை எய்தார். "நெருங்கி வந்த கருடக் கணையை விழுங்கிப் பகைவனை அழிப்பேன்" என்று சொல்லவும், அதை அறிந்து, பானுகோபன் எமக்கணையை எய்தான். எய்த அந்த எமக்கணையையும் நந்திக் கணையானது எதிர்த்து அழிந்தது. அதன் ஆற்றலைப் பானுகோபன் கண்டு தன் மெல்லிய உதடுகளைக் கடித்து நான்முகன்கணையை பானுகோபன் செலுத்தினான். நான்முகப் படைக்கலமானது, சினந்து, வான் வழியாகப் போய் சிவபெருமானின் வாகனமான நந்திப் படையினைக் காணவும், பின்னடைந்து "இழிந்த பானுகோபன் ஏவியதால் வந்தேன். நீ வருவதை யான் அறியேன். மிக்க சினம் கொள்ள வேண்டா" என்று சொல்லி வணங்கி விரைவாகச் சமாதனாம் செய்து விட்டு நீங்கியது. கலைகளின் முன்பகுதியில் விரிந்திருக்கின்ற நூறு இதழ்களைக் கொண்ட தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகக் கணை குற்றப்பட்டுத் தோற்று ஓடவும், அதைக் கண்டு சிரித்து தேவர்கள் ஆரவாரம் செய்தனர். அதைப் பார்த்துப் பானுகோபன் கருக்கொண்ட மேகம் போன்ற கரிய நிறம் கொண்ட மேனியையுடைய திருமால் கணையைத் தொடுத்தான்.

திருமால் படை நந்திக்கணைக்கு எதிராகச் சென்று நெருங்கிப் போர் செய்து நின்ற போது, அதைப் புனிதரான வீரவாகு தேவர், பானுகோபன் விட்ட திருமால்கணையின் வன்மையை அழித்திடச் சிம்புட்பறவை வடிவமாகத் தோன்றும் வீரபத்திரப் படையை வணங்கி விடுத்தார். சிவந்த கண்களையுடைய திருமால் கணை அழிந்திடவும், வெம்மையான ஆயிரம் கதிர்களையுடைய கதிரவனைச் சினந்த பானுகோபன் இனி எத்தகைய கணையைச் செலுத்துவது என ஆராய்ந்தவனாய், இமைப்போதில் எல்லாவற்றையும் அழிக்கும் எங்கள் கடவுளான சிவபெருமான் கணையினை விடுவதற்குக் கையிலே எடுத்தான்.

சிவபெருமானின் பழைய படையை எடுத்துத் திருமஞ்சனம், கந்தகம்,

தூபம், மணி விளக்கு, அமிர்தம் முதலானவற்றையெல்லாம் உள்ளத்தில் விரைந்து உண்டாக்கிப் பூசையை முடித்து நிரப்பி மிக்க அன்பினாலே துதித்துத் தொழுது செலுத்தினான். வழிபாட்டுச் செயல் முடிந்ததும் வீரவாகுதேவர் அழிபவனான சூரபன்மன் மகன் செலுத்தும் சிவக்கணைக்கு மாறாகி சிறந்த செயலை ஆற்றி இங்கு திரும்பி வருவாயாக என வேண்டிக் கொண்டு தொழுது எல்லார்க்கும் மேலான சிவபெருமானின் படையான சிவக்கணையை விடுத்தார். தூயவரான வீரவாகுதேவர் விடுத்த சிவக்கணை எழுந்துவரவும், தீயவனான பானுகோபன் செலுத்தும் சிவக்கணை எதிராகச் சென்றது. விடுக்கப்பட்ட அப்படைகளிரண்டும் ஒன்றுடன் ஒன்று பகைத்து உலகத்தை அழிக்கின்ற ஒப்பில்லாத உருத்திரரின் உருவத்துடன் எதிர்த்தன.

இவ்வாறு பல வடிவங்களைப் படைத்து, சிவக்கணை இரண்டும், கருமை மிக்க கடலும் வானமும் திக்குகளும், உலகமும் ஆகிய எல்லாவற்றையும் கண்டு விழுங்கி அண்டகோளகையைப் பிளந்து, மேலே சென்று தமக்குள் பகை கொண்டு மாறுபடப் போரிட்டன. திரண்டிருந்த பூதவீரர்கள் தயங்கினர். இலட்சம் வீரர்கள் மயக்கம் அடைந்தனர். வீரவாகு தேவரின் துணைவரும் மயங்கினர். இதனால் அவர்கள் வீரவாகு தேவரைவந்து சேர்ந்தனர். அசுரவீரர் கீழே விழுந்து இறந்தனர். போருக்கு வந்த தேர்கள் தூளாயின. யானைகளும், குதிரைகளும் கீழே உருண்டன. அசுரர் படையில் பானுகோபன் ஒருவன் மட்டுமே அஞ்சாது நின்றான்.

போர்க்களத்தின் இந்த நிலையை அறிந்து ஒற்றர்கள் சூரனிடம் ஒடி, "ஐயனே! கேட்பீராக! உன் மைந்தனான பானுகோபன் நேற்று அங்கு வந்த தூதனான வீரவாகுவுடன் பெரும் போரைச்செய்து பின் தெய்வப்படைகளைச் செலுத்திப் பின்பு இறுதியில் உலகம் யாவற்றையும் அழித்தருளுபவனான சிவபெருமானின் கொடியதான ஒரு கணையை (சிவக்கணையை) விடுத்தனன். பானுகோபனைப் போலவே வீரவாகுவும் அத்தகைய சிவக்கணையை விடுத்தார். அந்தப் படைகள் இரண்டும் உலகம் எல்லாவற்றையும் ஒருங்கே உண்கின்ற நிகரில்லாத பல உருவங்களை உருவாக்கி அச்சம் பொருந்திய செலவை உடையதாகி வன்மையுடன் அண்டம் முழுவதையும் அழிக்கும்படி போர் நடக்கிறது என்றனர்! மிக்க ஆற்றலையுடைய வீரவாகு தேவர் விட்ட சிவக்கணை திரும்பி வரவும் பகைவன் பானுகோபன் அனுப்பிய பழைமையுடைய சிவக்கணையும் அங்கு அவனை அடைந்தது. அதனைப் பார்த்த தேவர்கள் ஆரவாரம் செய்தனர். "இழிந்தவனான பானுகோபன்

சிவக்கணை விட்ட இதிலும் வெற்றி பெறவில்லை. இவன் இன்று வீரவாகு தேவரால் இறப்பான்! எங்கள் துன்பமும் நீங்கியது!'' என்று உரைத்தனர்.

அப்போது பானுகோபன் ''நான் இருக்குமிடமானது வெளிப்பட்டு விட்டால் பகைவர் வானத்திலும் வந்து சூழ்ந்து கொண்டு போரிடுவர். நானோ இப்போது பகைவரிடம் போரிட்டு இளைத்தவனாக உள்ளேன். இனி என்னால் போர் செய்யவும் இயலாது. அதுபோக நேற்றைய தினம்போல் ஒளிந்து ஓடவும் முடியாது. இனி விரைவாகப் பகைவர் இருக்கும் இடத்தை அடைந்து, அவர்களுக்கு இருக்கும் உணர்வு அனைத்தையும் அழித்துச் சாகும் இயல்பை உண்டாக்குகின்ற மாயை என்ற சிறந்த கணையை விடுவதே சிறந்ததாகும்'' என்று உள்ளத்தில் நினைத்து அன்றிரவே மாயை தந்த வலிய ஆற்றல் வாய்ந்த கணையை விரைந்து எடுத்து இழிந்தவனான அவன் பூசை செய்தான்.

''முறையான முப்புலங்களாலும் உள்ளத்தாலும் எவரும் அறியாதபடி பகைவரிடம் போய் அவர்களின் மெய் உணர்வை அழித்து உயிரை மாய்த்து நல்ல நீரையுடைய கடலிலே எறிந்து விடு!'' என்று சொல்லி மாயக்கணையை செலுத்தினான். பானுகோபன் மாயக்கணையை விடவும், அந்தக் கொடிய படையானது வந்து சேரும் தன்மை அறிவதற்கு அரியதாகி விரைவாகப் பூமியில் கலந்து பூதகணப் படைகளைப் பாவம் போல் வந்து அடைந்தது. பெரும் பூத கணத்தவரையும் இலட்சம் வீரர்களையும் ஒளியுடைய தம்பியரையும் நெருங்கிய மாலை சூடிய தோள்களையுடைய வீரவாகு தேவரையும் ஒருங்கே வளைத்து அறிவை அழித்தது.

சிறந்த பொன் உலகமான சுவர்க்கத்தில் உள்ள தேவர்கள் அச்சம் கொள்ள, ஊன்றிய வில்லின் மீது உறங்கிய திருமாலைப் போலக் காணப்பட்ட மாயை என்ற கணை, அறிவை உண்ண, அதனால் எல்லாரும் மயங்கி மடிந்து விழுந்து கிடந்தனர்.

ஆயிரம் வெள்ளங்கள் என்று சொல்லும் அளவுடைய பூதப் படையினரையும் அவர்களின தலைவர்களையும் வெற்றியுடன் விளங்கும் வீரவாகு தேவரின் தம்பியரையும், பகைவரை வென்ற வீரவாகு தேவரையும் விரைந்து எடுத்துக் கொண்டு வான் வழியாக மாயை சென்றது. மிக்க வேகத்தை மேற்கொண்டு, சூரபன்மனின் மைந்தனான பானுகோபனின் அறிவைப்போல் விரைந்தது சென்று, சிறந்த கடல் வழியையும் கடந்து

சென்று. அதற்கு அப்புறம் நன்னீராக அகன்று உள்ள பழைய கடலின் நடுப்பகுதியை அடைந்து, தான் எடுத்துச் சென்ற அசுரர்கள் கூட்டத்தை அக்கடலிலே இட்டு விலகாது நின்று காத்தது.

வானில் மறைந்து நின்ற பானுகோபன் இத்தகைய செயலைப் பார்த்து "இனி வீரவாகுவும் இறந்தான். பூதக் கணத்தவரும் மற்றவரும் இறந்தனர். கருவம் அடங்க ஒலிக்கும் நீரையுடைய கடலில் மூழ்கினர். நாம் மேற்கொண்ட தந்திரம் நன்றாக உள்ளது" என்று ஆணவத்தில் சிரித்தான்.

அடைவதற்கு அரிய மகிழ்ச்சியுடன் பானுகோபன் அவ்விடத்தை விட்டு நீங்கி வான் வழியாகப் போய் புகழ் பொருந்திய மகேந்திர நகரத்தை அடைந்து, எட்டுத் திக்குகளைக் கொண்ட உலகம் போற்ற அரசாட்சி செய்கின்ற தந்தை சூரபன்மனைக் கண்டு வணங்கி இவற்றைச் சொல்லத் தொடங்கினான். "இன்று நான் போருக்குச் சென்று பல பெரிய போர்களை செய்து பின் கொடிய செயல் செய்த வீரவாகுவையும் அவன் அருகில் வந்த அவனுடைய தம்பியரான துணைவரையும் அவர்களே அல்லாமல் வந்த ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் ஆகிய அனைவரது உயிரையும் உண்டு உடல்களைப் பரந்த நீரைக் கொண்ட கடலிலே போட்டுவிட்டு வந்தேன். எனவே தந்தையே நீ சிறிதும் கவலை கொள்ள வேண்டாம்! நானும் படைகளுமாகச் சென்று கடலை அலைக்கின்ற காற்றைப் போல் சூழ்ந்து கொண்டு பாசறையை அழித்துத் திருமால், நான்முகருடன் இந்திரனைப் பிடித்து நாளை கொண்டு வருவேன்" என்றான். வணங்கி எழுந்து நிற்கும் தன் மகன் பானுகோபனை விரைவாக மார்பில் இறுக்கமாகத் தழுவிக் கொண்டு சிங்கத்தால் சுமக்கப்படுகின்ற செழுமையான இருக்கையில் அமரச் செய்து, குழந்தைப் பருவத்தில் வைத்துக் கொண்டிருந்தாற்போலத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டான். வடக்குத் திக்கில் உள்ள பெரிய மலையான மேருமலை வலம் வருகின்ற கதிரவனின் பழைய பகையான பானுகோபன் மாயைக் கணையை விடுத்ததும் பூதப்படையினரும் தம்பியரும் மற்றுமுள்ள பலரும் மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகு தேவரும் மயக்கம் அடைய, தூய நீர்க்கடலுள் மயங்கிய அவர்களை இட்டதும் என்ற இவற்றை தேவர்கள் எல்லாம் பார்த்தனர். இவற்றை அம்பு போல் விரைந்து செல்லும் ஞானியான நாரத முனிவர் பாடி வீட்டில் இருக்கின்ற முருகப் பெருமானிடம் சென்று செவ்விய திருப்பொற் பாதங்களை வணங்கி அஞ்சலி செய்து இந்திரன் முதலான தேவர்கள் மனம் நடுங்க "சூரபன்மனின் மகன்

பானுகோபன் மறைவாக இருந்து 'மாயை' என்ற கணையை எய்து, வீரவாகு தேவரும், அவருடைய துணைவரும் கொடிய பூதக்கணத்தவரும் ஆகிய எல்லாரும் மயக்கம் கொள்ளுமாறு கொன்று அந்த அம்பாலேயே அவர்களை நல்ல நீர்க்கடலில் தன் தந்திரத்தால் இட்டனன்'' என்று சொல்லவும், தேவர்கள் ஒருவர் பின் ஒருவராக வந்து முருகப் பெருமானின் பொற்பாதங்களை வணங்கி அவரது திரு முன்பாக நின்று, வீரர்கள் அழிந்த தன்மைகளையெல்லாம் எடுத்துச் சொல்ல, எம்முருகப்பெருமான் உடனே தம் வெற்றியையுடைய வேலைப் பார்த்துச் சொல்லலானார்.

''கங்கையைப் போன்ற வெண்மையான நன்னீர்க் கடலுக்குப் போய் அங்குள்ள மாயை என்ற கணையை அழித்து வெவ்விய தன்மை கொண்ட வீரர்களின் மயக்கத்தைப் போக்கி, அவர்கள் இங்கு விரைவாக வருமாறு செய்து பின் உன் விருப்பம்போலச் செல்!'' எனத் திருவாய் மலர்ந்தருளினார். தன் சிவந்த வேலுக்கு இத்தகைய ஓர் ஆணையை பிறப்பித்து முருகப்பெருமான் அவ்வேலை விடுக்கவும், அது 'நன்று' என்று நீங்கி வெம்மையான கதிர்களையுடைய ஆயிரங்கோடி கதிரவர்களைப் போல் விரிந்து, உலகத்தின் மீது அந்நாளில் பரந்திருந்த இருள் அனைத்தையும் உண்டு விரைவாகச் சென்றது. தீக்கணை, எமக்கணை, காற்றுக்கணையான பெரிய ஆயுதம், கடல் மன்னனான வருணனின் கணை, குபேரன் கையில் உள்ள கொடிய கணை, இந்திரக் கணை, திருமால் நான்முகன் ஆகியவர்களின் கணைகள் என்ற இவையனைத்தும் வணங்கிக் கொண்டு வர, முருகப்பெருமானால் அனுப்பபட்ட வேல் எனப்படும் கதிரவன் விரைவாக வரவும், ஒழுங்கற்ற அசுரர்களின் முகம் என்ற கருவிள மலர்கள் குவிய, தேவர்களின் முகங்களான தாமரை மலர்கள் மிகவும் அதிகமாக மகிழ்ச்சி அடைந்து மலர்ந்து விளங்கின. இப்படி வேலானது திரிபுரங்களில் சிவபெருமான் அனுப்பிய தீய சிரிப்பைப்போல் விரைவாகப் போய் ஆறுவகைப்பட்ட கடல்களும் பின் ஆகும்படி முந்தி வானில் வாழ்பவரான தேவர்கள் துதிக்க நன்னீர்க் கடலை அடைந்தது.

சிவந்த வேலானது அங்கு வரவும், கொடிய மாயை என்பவள் தந்த ஆயுதமானது, மிகவும் அஞ்சி மயங்கிக் கிடந்த வீரர்களை விட்டு விலகிப்போய் வன்மையழிந்து தன்செயலும் அழிந்து முடிந்தது.

முருகப்பெருமான் அசுரக் கூட்டத்தை அழித்தால், நான் பிழைப்பேன் என்று எண்ணிய அறிவிலியாகிய நான் செய்த குற்றமும் உண்டோ? ஏதும் இல்லை! எனவே என் மீது சினம் கொள்ள வேண்டாம்!" என்று வருணன் சொன்னான். வாழ்கின்ற கடல் மன்னனான வருணன் இதைச் சொல்லி வணங்கவும், "நீ இனி அஞ்ச வேண்டாம்!" என்று சொல்லி, ஊழி முதல்வரான முருகப்பெருமான் அனுப்பிய வேலானது அங்கிருந்து நீங்கிச் சென்று கடல் நீரில் மூழ்கியுள்ள வீரவாகு தேவர் முதலியவரை அடைந்தது. துளை பொருந்திய பல்லையுடைய பாம்பு சினத்துடன் விரைவாகக் கக்கிய தீயின் குணத்தையுடைய நஞ்சானது மேலே செல்ல விழி சுழன்று வியர்த்து வருந்தி மிகவும் மூர்ச்சையானவர், கருடத் தியானத்தில் வல்லவனாக இருப்பவனின் பார்வை பட்டு நஞ்சானது அகல அதனால் உணர்ச்சி பெற்று எழுவதைப் போல், எல்லாரும் எழுந்தனர்.

பானுகோபன் அனுப்பிய மாயைக் கணை அழிந்தது. அதனால் பாவக்கூட்டங்கள் அழிந்தன. வேதங்கள் பாடின. பூதேவி மகிழ்ந்தாள். அறத் தெய்வம் ஆடியது. உலகங்கள் அனைத்தும் ஆரவாரம் செய்தன. இதனை உணர்ந்த முனிவரும் தேவரும் தேன்மலர்களைச் சொரிந்தனர். ஆறுமுகங்களையுடைய முருகப்பெருமான் விட்ட ஒளி பொருந்திய உச்சியைக் கொண்ட செவ்வேல் வானத்தில் வருவதைப் பார்த்துச், சொல்வதற்கு அரிய மகிழ்ச்சி மிக, பலமுறை வணங்கிப் போற்றித் தலைமீது கூப்பிய கையராய் எதிர்கொண்டு வீரவாகுதேவர் முதலானோர் துதிசெய்து கொடியவனான தாரகன் மலையிலே எங்களை வீழ்த்திய அந்த நாளிலும் அங்கு வந்து நல்ல உணவை அளித்து காத்தாய். அதுவன்றி இன்னும் இங்கு வந்து எங்களைக் காத்து ஆண்டாய். ஆதலால் நாங்கள் உயிர் பிழைத்தோம். உலகத்திலேயே உனக்குச் செய்யும் கைமாறும் உண்டோ?" என்று போற்றினார். வீரவாகுதேவர் போற்றிய சொற்களைக் கேட்ட, கூரிய வேலானது அவற்றைக் கேட்டு, நீங்கள் மயங்கிக் கடலில் விழுந்ததை அறிந்தே முருகப்பெருமான் என்னை அனுப்பினார். மாயை என்ற கணை நீங்கியது. அங்கே வருவீராக!" என்றது. 'நல்லது' என்று வணங்கி வீரவாகுதேவர் நகை சேர்நத முகத்தையுடையவனாய்ப் பின்னால் தொடர்ந்து வரும் தம்பியரும் பெரிய பூதகணத்தவரும் சூழ்ந்து வரச் சென்றார். வெற்றி வேல் முன்னால் போய் வெற்றியுடைய முருகப்பெருமானின் திருக்கையில் வீற்றிருந்தது.

## 6. நகர் புகுதல்

மாயை அகன்ற வீரவாகுதேவர் முருகப்பெருமானின் திருவடித் தாமரைகளை எண்ணி, அலைகளையுடைய நீர் பொருந்திய கடல் இடத்து மின்னல் போல் விரைவாக வந்து, பழைமையான செல்வத்தினையுடைய சூரபன்மனின் பழைய வீரமகேந்திர நகரத்தைக் கண்டார். கண்டவர் "போரில் எதிர்த்து நிற்கும் வன்மையில்லாது அஞ்சி நீங்கிச்சென்று வானத்திலே மறைந்து நின்று வஞ்சனை செய்து நம்மை மாயத்தால் வெற்றிகண்டு மீண்டும் உயிர்பிழைத்து ஓடிவிட்ட அந்தக் கள்வன் பானுகோபனின் உயிரைக் குடித்தலின்றி எம் இறைவன் முருகப்பெருமானின் செம்மையான திருவடிகளைத் தரிசிக்க நான் செல்லமாட்டேன்" என்று சபதம் செய்தார். இந்தச் சபதத்தை வீரவாகுதேவர் உரைக்க அவருடைய தம்பியரும் மற்ற வீரர்களும் கேட்டு, "கொடிய சிங்கம் போன்ற வீரவாகு தேவரே! நாம் பகைவர்க்குத் தோற்றுவிட்டோம். வீணே திரும்பிப் போவது பழியாகும். வெற்றி பெற்றன்றி எம்பெருமான் முருகனின் இருபொற்பாதங்களைக் காண்பதில்லை! இது உண்மையாகும்!" என்று உரைத்தனர்.

வெற்றியுடைய அழகிய தோள்களையுடைய வீரவாகு தேவர் தம் துணைவரும் பிறரும் உரைத்ததைக் கேட்டு, "உங்களது மனத்துணிவு சிறந்தது. விரைவான பூதக்கணப்படையுடன் சென்று விரைந்து பகைவரது பழைய நகரத்தைத் தீயினுக்கு இரையாய் அளித்து எதிர்த்த வீரரைக் கொன்று சூரபன்மனின் மகன் பானுகோபனையும் கொல்வோம். எல்லாரும் வாருங்கள்!" என்று இயம்பினர். சிறந்த வீரவாகு தேவர் தம் சொல்லை அனைவரும் வியப்புடன் கேட்டு உடன் வர செல்ல, ஓர் இமை மூடும் நேரத்துக்குள், கடலின் நடுவே உள்ள வீரமகேந்திர நகரத்தின் மேற்குத் திக்கு வாயிலை அடைந்தார். அப்போது உலகங்கள் எல்லாம் அழிந்தது போலப் பூதகணங்கள் எல்லாம் ஆரவாரம் செய்தன.

வீரவாகு தேவரின் துணைவர் ஆரவாரம் செய்யும் யானைகள், குதிரைகள், அசுரர்கள், தேர்க் கூட்டங்கள், மாளிகைகள், கோபுரங்கள் என்ற இவை அழியுமாறு கூர்மையான அம்புகளைப் பலகோடி செலுத்திக் கொண்டே சென்றனர். அத்தகைய சமயத்தில் வெல்லும் ஆற்றலையுடைய தோளையுடைய வீரவாகு தேவர் தீக்கணையுடன் காற்றுக் கணையான பெரும் படையைப் பொன் மயமான வில்லிலே பூட்டி, "நீங்கள் சென்று இமைப் போதில் இந்நகரத்தை அழித்துவிட்டு வாருங்கள்" என்று ஏவினார்.

தீ சூழ்ந்து கொண்டதால் சில இடங்கள் எரிந்தன. சில இடங்கள் அழிந்து புழுதியாக ஆயின. சில இடங்கள் வெடித்தன. சில இடங்கள் கரிந்தன. சில இடங்கள் பொரிந்தன. சில இடங்கள் புகைந்தன. கங்கை நீர் தங்கிய சிவந்த சடையையுடைய சிவபெருமானின் சிரிப்பால் திரிபுரங்கள் அழிந்தது போல எல்லா வுலகங்களும் வணங்குகின்ற சூரபன்மனின் நகரம் வெப்பமான தீ பற்றிக் கொள்ள அழிந்து போனது.

இவ்வாறு இந்த மகேந்திர நகரைத் தீயானது எரித்தபோது, அதை ஒற்றர் அறிந்து விரைந்து, சென்று பொன்னால் ஆன காவல் மிக்க நகரத்துள் புகுந்து வாய் அஞ்சி நடுங்கித் துடித்து மன்னவர் மன்னனான சூரபன்மனை நோக்கிச் சொல்லத் தொடங்கினர். "பகை வீரர் மேற்குத்திசை வாயிலை அடையவும் படையுடன் அங்கிருந்த படைத்தலைவன் சிறிது நேரம் போர் செய்தான். அவனது உயிரைப் பகைவர் அழித்தனர். அவனுடன் இருந்த படைகளும் இறந்தன. மேற்குத் திசை மதிலைக் கொடிய பூதர்கள் தம் கால்களாலேயே உதைத்துத் தள்ளினர். அங்கு நிற்கின்ற ஒப்பில்லாத கோபுரத்தைப் பிடுங்கி நம் பெரிய நகரத்தினது நடுவிலே வீசி நம்மவர் இறக்குமாறு எறிந்தனர்."

"தளர்ச்சியில்லாத பூதரும் வீரவாகுவின் துணைவரானவரும் படைத் தலைவரான வீரவாகுவும் சிறந்த நகரத்துக்குள் போய் மேற்குத் திசையில் தீயை இட்டுக் கொளுத்தி அழிக்கின்றனர் என்று ஒற்றர் இவ்வாறு சொல்லவும், சூரபன்மனின் மனத்தில் சினம் மிகுந்தது. மயிர்கள் சிலிர்த்தன. புருவங்கள் நெறித்தன. மணி பதித்த முடிகள் உயர்ந்தன. கண்கள் கோபத் தீயைக் கக்கின. சூரபன்மன் சினந்து வீரம் பொருந்திய ஒற்றரைப் பார்த்து, "நீங்கள் வான் உலகத்துக்குச் சென்று, விளங்கும் யுகமுடிவில் உலகங்களை எல்லாம் அழித்தற்காக இப்போது அங்கு உறங்கிக் கொண்டிருக்கும் பெரிய மேகங்கள் எல்லாவற்றையும் இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்!" என்று ஆணையிட்டான்.

ஏழுவகையான அந்த மேகங்களும் அவர்கள் சொன்னதைக் கேட்டுச் சிறந்த மகேந்திரத்துக்குச் சென்று மன்னன் முன்புபோய் வணங்கி நின்றன. சூரபன்மன் அவற்றைப் பார்த்து, "இந்த நகரத்தை அழிக்கின்ற தீயை அவித்திடுவீராக" என்று மொழிந்தான். அங்ஙனம் சூரபன்மன் சொன்ன போது, அம்மேகங்கள் 'நல்லது!' என்று உடன்பட்டு, நீங்கி, மாவலி என்ற மன்னனிடம் குறுகிய வாமன வடிவத்துடன் திருமால் சென்று பின் நீண்ட

பெருவடிவத்தை எடுத்தது போல, அவை நெருங்கிய புகை வடிவத்தைக் கொண்டு வானில் சென்று ஓர் இமைப் போதில் எல்லாவிடங்களிலும் பரவின.

சிந்துகின்ற துளி ஒன்று யானை அளவினதாகச் சிந்தி ஓர் இமைப் பொழுது மழை பெய்தன. அவ்வாறு மழைபொழியவும் இந்த மகேந்திர நகரத்தின் மேற்குத் திசையில் உள்ள எரிக்கும் தீயானது அணைந்தது. அவ்வாறு நிகழ்வதைப் பன்னிரண்டு பெரிய தோள்களையுடைய முருகப் பெருமானின் படைத் தலைவர் வீரவாகுதேவர் தீயுண்டாகப் பார்த்து நகைத்துத் தீயின் ஆற்றலை அழித்தவை மேகங்களோ அல்லது அசுரர்களின் மாயமோ? என்று உள்ளத்தில் பலவாறு எண்ணியபோது நாரத முனிவர் அதை அறிந்து வானத்தில் சென்று "வீரரே! இதைக் கேளுங்கள். மகேந்திர நகரத்தில் உள்ள தீயை அணைத்தவை ஊழிக்கால மேகங்கள் ஆகும். கொடிய சூரபன்மனின் ஆணையினால் அவை தீயை அணைக்க வந்தன. எனவே நீங்கள் பழைமையான வடவைத் தீ என்ற வலிய கொடிய கணையை விரைவாகத் தொடுப்பீராக!" என்று ஆலோசனை கூறினார்.

வானத்தில் வந்து நாரத முனிவர் உரைத்ததைக் கேட்டு வெற்றி பொருந்திய அழகிய தோள்களையுடைய வீரவாகுதேவர் ஊழிக்காலத்துத் தோன்றுகின்ற வடவைத் தீயின் அம்சமான தீக்கணையை எய்தார். அது சென்று இடம் அகன்ற ஊழிக்கால மேகக் கூட்டத்தை ஓர் இமைப் போதில் சூழ்ந்தது. வடவைத் தீக்கணையானது போய் வானில் சூழ்ந்திருந்த மேகங்கள் எல்லாவற்றையும் வளைத்து கொண்டு அவற்றில் இருந்த நீரையெல்லாம் குடித்துத் திரும்ப வீரவாகு தேவரை வந்து அடைந்தது. அப்போது அம்மேகங்கள் வட்டமான பெரிய கடல் இனங்களைப் போல் வீழ்ந்தன.

ஊழிக்கால மேகங்கள் தோற்று ஓடவும் பூதப் படைகள் மகிழ்ச்சியால் எழுந்து துள்ளி ஆரவாரம்செய்தனர். தேவர் மலர் மழை பெய்து ஆரவாரம் செய்தனர். அவற்றைக் கண்டு பொறுத்துக் கொள்ள இயலாமல் ஒற்றர்கள் ஓடிப்போய் சூரனிடம் நிலைமையை விளக்கினார்கள். நகரத்தில் பொருந்திய தீயானது அழிந்து விட்டது என்று நினைக்க வேண்டியதில்லை. பூதர்களும் மற்றுமுள்ள வீரர்களும் இப்போது இந்த நகரத்தினின்று அதைவிட எட்டு மடங்காகப் போர் செய்கின்றார் எனக் கூறவும் அதைக் கேட்டு மயிர்கள்

எல்லாம் சிலிர்த்திட, மலை போன்ற மார்பானது வியர்வை கொள்ள, கண்கள் எரியும் தீயை வெளிப்படுத்த, மூச்சில் புகையானது தோன்ற, இடி வெளியானது போலச் சினம் கொண்ட சூரபன்மன் ''நாம் சென்று போரைத் செய்துகொடிய பூதர்களையும் வீரவாகு தேவர் முதலான வீரர்களின் தொகையினையும் அழித்துப் பின்பு இங்குப் போருக்கு வந்துள்ள சிவபெருமானின் மகனான முருகப்பெருமானை வென்று இங்கு வருவோம். நம்தேரை இங்கு கொண்டு வருக!'' என்று ஆணையிட்டான்.

## 7. இரணியன் போர்

## (மூன்றாம் இரவு நடந்த போர்)

அப்போது சூரபன்மனுடன் இருந்த இரணியன் எழுந்து தன் தந்தை சூரபன்மனின் இரண்டு அடிகளைத் தலையில் சேர்த்து, ''உனக்குப் பொருத்தமான ஒன்றைக் கூறுவேன்! கேட்பாயாக!'' என்று சொல்லத் தொடங்கினான்.

''தந்தையே! நாம் தேவரைச் சிறையிலே இட்டதால் உண்டானது பாவமே! இதனால் நன்மை ஒன்றும் இல்லை. எல்லாவற்றையும் உணர்ந்த மன்னா! நம் உயிரானது அழிவது உறுதி! நம் செல்வமும் அழிந்து போகும்!. ''நீ முன் திருமாலை வென்றதும் நான்முகனையும் முனிவர்களையும் ஏவல் கொண்டதும், வானில் உள்ள தேவர்களுக்குத் துன்பம் செய்ததும் என்ற இவையெல்லாம் கல்லால மரத்தின் கீழ் வீற்றருளிய சிவபெருமானால் அல்லவா? எனவே, அச்சிவபெருமானை அடைந்தவர் உயிர் பிழைப்பார். அவரல்லாத மற்ற அழிவற்றவர், அவர் எவராக இருப்பினும் பிழைக்க மாட்டார்' இவ்வுண்மையை வேதநூல்களும் பிறவும் கூறும். என் தந்தையே! துன்பநெறியினின்று நீங்கி இப்பொருளை உணர்வாயாக! என்றான். ''பல்லாயிரம் கோடி என்ற எண் பொருந்திய சகல அண்டங்களும் அவற்றின் புவனங்களும் இவற்றில் பொருந்தியவர்களும் பல உயிர்த் தொகுதிகளும் தேவர்களும் மும்மூர்த்திகளும் தமக்குள் கொண்ட விசுவரூப மேனியைக் கண்டிடுமாறு தேவர்க்கெல்லாம் அக் கந்தவேல் காட்டினார் என்பர். இந்திரன் குறையும், அழகிய கருணையுடைய நான்முகனின் குறையும், மற்றும்

திருமாலின் குறையும் போக்கி அழிவற்ற செல்வத்தை அளிக்கக் குற்றமில்லாத குழந்தை போலாகி ஆறுமுகங்களைக் கொண்டவன். எட்டுத் தோள்களையுடைய சிவபெருமானே என்பதல்லால் வேறு ஒன்றாகச் சொல்லக் கூடுமோ?"

"பணிந்தோம் என்றால் அப்பெருமான் நாம் செய்த தீமைகள் பலவற்றையும் பொறுத்துக் கொண்டு அருள் செய்து, தாமும் குறையாத பல வரங்களை அளித்து, அணிவகுத்து வந்த படையுடனே நீங்கிச் சென்றருள்வார். நாமும் உய்வோம். இதை நன்கு ஆராய்ந்து உனக்குச் சொன்னேன். இதுவே உனக்குச் சிறந்த நன்மை தரும்" என்று சூரபன்மனின் மகனான இரணியன் சொன்னான்.

இரணியன், அன்பு கொண்டு, தனக்கு இத்தகைய உறுதி தருவனவற்றைச் சொல்லித் தெளிவு கொள்ளச் செய்தான். அதைக் கேட்டு, சினம் எழ, கரிய தனது உடலானது வியர்க்க, பெருமூச்சு உண்டாக, உதடுகள் துடிக்க, கண்கள் சிவக்க, எரிந்த உள்ளம் துடிதுடிக்க இடிபோலக் கையை வீசி அடித்துச் சிரித்து சூரபன்மன் "ஊன் பொருந்திய நீண்ட கதிரையுடைய வேலைக் கைக்கொண்ட ஒரு சிறுவனது ஆற்றலையும், தூதனாக வந்த பகைவனின் வலிமையையும், நான் செய்ய வேண்டியவற்றையும் எனக்கு எடுத்துச் சொன்னாய். மகனே! உனக்குச் அதைச் சொன்னவர் யார்? சொன்னவரை நான் அறிந்து கொள்வேனானால் அவரது உயிரைக் களைவேன்! அவருடைய பழைய குலத்தையெல்லாம் அழிப்பேன்."

"இரணியனே! உலகம் எல்லாவற்றையும் முன் படைத்த நான்முகன் எனக்குப் பஞ்சாங்கம் பார்த்துச் சொல்லிவிட்டுப் போவான். ஆல இலையில் உறங்கிய திருமால் என் தம்பி தாரகாசுரனுக்குத் தோற்று ஓடிப் போனான். தேவரின் தலைவன் இந்திரன் கடல்மீன் முழுவதையும் என் பணியால் பிடித்துக் கொண்டு வந்து எனக்குத் தருவான். இங்ஙனமிருக்க, வெள்ளி மயமான கயிலாய மலையில் உள்ள நீலநிறக் கழுத்தினையுடைய சிவனின் மகனோ அழியாத என் பேராற்றலை நீக்குவான் என்று சொன்னாய். நீ ஆற்றலை இழந்து விட்டாய். குலமுறை தவறினாய். அரசுக்குரிய உயர்வை மறந்தாய். பகைவர்க்கு அஞ்சி அறிவுரை சொன்னாய். இனியும் நீ ஒரு சொல் சொன்னாய் என்றால் நான் உன்னை விரைவாக எமபுரத்துக்கு அனுப்புவேன்!" என்று சூரபன்மன் மகனை நோக்கிச் சீறினான்.

"இவனுக்கு இறுதிகாலம் வந்து சேர்ந்தது. பல உறுதிகளை இவனுக்குச் சொன்னேன். அவற்றால் பயன் என்ன?" என்று எண்ணித் தம் தந்தையை நோக்கி, "தந்தையே! நீ அறிஞன். நான் சிலவற்றை அறிந்தவன் போல உனக்குச் சொல்லிவிட்டேன். நான் சிறுவன் ஆதலால் பொறுத்துக் கொள்ள வேண்டும்!" என்று தன் தந்தையின் சினத்தை தணித்த இரணியன் துணிந்து போர்க்களம் போகத் தயாரானான். இரணியன் பகைவர்க்கு எமனாகும் என்று கூறத்தக்க வெற்றியுடைய வில் ஒன்றை இடக்கையில் எடுத்தான். வலக்கையில் பல ஆயுதங்களை எடுத்தான். பெரிய தன் முடியிலே தும்பை மலரைச் சூடினான். சிங்கங்கள் ஆயிரம் பூட்டப்பட்ட தேரில் ஏறினான். அறத்தை மேற்கொண்ட இரணியன் நால்வகைப் படையும் புறப்பட, துன்பமும் உண்டாகிடச் சென்று, வீரத்தையுடைய பூதர்கள் ஆரவாரம் செய்கின்ற போர்க்களத்தை தேவர்கள் எல்லாம் உடல் பதைக்கப் போய்ச் சேர்ந்தான்.

வீரமுடைய தோள்களையுடைய வீரவாகு தேவர் இவ்வாறு வரும் இரணியனைப் பாரத்து "கொடிய போர் செய்ய வருபவன் சூரபன்மனின் மைந்தருள் ஒருவனோ? அல்லதுசூரபன்மனின் வேறு சுற்றத்தவனோ? இவன் யார்?" என்று ஐயம் கொள்ள, நாரத முனிவர் வந்து "ஐய! இரணியன் என்ற மகனைச் சூரபன்மன் ஏவ, அவன் வருணக் கணையையும் இந்திரக் கணையையும் குபேரக் கணையையும், எமக்கணையையும் திக்குகளில் இம்மாறு பொருந்திய நான்கு கணைகளையும் முன்பே அனுப்பிப் பின்னால் இங்கு நமது சேனையை வருத்துமாறு கதிரவனைப் போல வருகின்றான். இவன் மாயையில் வல்லவன். பல ஆயுதங்களை உடையவன், வஞ்சமுடைய மாய சூழ்ச்சிகள் பலவற்றை அறிந்தவன். ஆதலால் இவனை நீயே அல்லாது வெல்பவர் இல்லை. எனவே ஏற்ற வகையில் போர் செய்க!" என்றார்.

இதைக் கேட்டு நகைத்த வீரவாகு தேவர் பூதப்படையினரையும் வீரகேசரி முதலானவரையும் பார்த்து "வருபவன் சூரபன்மனின் மகன் இரணியன். எனவே அஞ்சாது அம்புமழை பொழிக" என்றார். வில்லாற்றலில் வல்ல வீரவாகுதேவர் அம்பு மழையைப் பெய்து நின்று போரிட்ட போதில், பூதப் படையை எதிர்த்துப் போரிடும் அவுணர் வெள்ளம் உலையிலே உண்டான தீயின்முன் சேர்ந்த வெண்ணெய் போல உடைந்து நிலை குலைந்து தம் உயிருடன் உடலும் குறைந்தன. சிங்கங்கள் ஆயிரம்

பூட்டப்பட்ட தேரின்மீது வருகின்ற இரணியன் தான் கையிலே எடுத்த வில்லில் ஆயிரம் அம்புகள் ஒரு தொடுப்பில் செலுத்தி இமைப் பொழுதில் ஆயிரங்கோடி பூதர்களைக் கொன்றான். அவ்வாறு இரணியன் கொன்ற போதில் கொடிய பூதப் படைகளும் நிலைக் கெட்டுச் சென்ற திக்கு தெரியவில்லை. வெம்மையுடைய நஞ்சானது பாற்கடலினின்று வெளிப்பட்டு வர முற்காலத்தில் ஓடிய தேவர்களைப்போல அவர்கள் விளங்கினர். அதனை நீலன் என்னும் பூதப்படைத் தலைவன் பார்த்தான்.

இரணியன் எய்த நீண்ட அம்புகள் முழுவதும் அந்நீலனின் மார்பில் புகுந்தன. அதற்காக அவன் அழியவில்லை. சற்றும் அஞ்சவில்லை. குலமலைகளை விடுத்து மற்றக் குன்றுகளையெல்லாம் பிடுங்கி வீசி உடலினின்று இழிந்த இரத்தம் ஒழுகக் கண்கள் இமைக்காதவனாக ஆற்றல் உடையதாகச் செய்யப்பட்ட பெரிய தேரை வீசிட அதுவும் காற்று உலவும் உயர்ந்த வானத்தின் மேலே சென்றது. உடனே அத்தேரில் இருந்த இளைஞரான இரணியன் மற்றொரு தேரில் ஏற எண்ணி வரவும். அதைப் பார்த்த நீலனான வன்மையாளனும் மேலே வந்து கொண்டிருக்கும் அவன் முன்பு தானும் சென்றான்.

சுருண்ட மயிரையுடைய நீலன் என்பவன் உதைக்கவும் அசுரர்கள் உடைந்து ஓடிய அந்தப் போர்க்களத்தில் வானத்திலிருந்து தவறி விழுகின்ற மேகத்தைப் போல் மறிந்து விழுகின்ற இரணியன் மீது இந்திரன் எறிந்த வச்சிராயுதமோ எனக் கூறுமாறு பின்னும் இந்த நீலன் பாய்ந்தான். நீலன் கீழே விழுந்த காளையான இரணியனைக் காலால் உதைத்தான். அதனால் பெரிய உலகம் பிளந்தது. அவனது தலையும் பிளந்தது. மார்பும் பிளந்தது. வாய் வழியாத இரத்தம் ஒழுக அந்த இரத்தத்தில் முழுகி இன்னது செய்வது என்று அறியாது கொடிய துன்பத்தை அடைந்தான்.

ஆற்றலையும் இழந்து சினமும் இழந்து இனிச் செங்கோலையுடைய எமனால் கொள்ளப்படுவதற்குச் சமீபத்தினன் ஆகவும், இரணியன் மனத்தில் இவ்வாறு எண்ணினான். நமக்கோ இறுதிக் காலம் வந்துவிட்டது. இனி என்ன செய்வது; இனி நமக்குத் தக்க உறுதி யாது என்று எண்ணி "இப்போது இங்கு நாம் மாயம் ஒன்றைச் செய்வோம்" என்று அவன் முடிவு செய்து மாயத்துக்குரிய ஒரு மந்திரத்தை உச்சரித்து அதற்கான பூசையையும் மனத்தில் செய்தான். பினபு வேண்டியதைத் தீர்மானித்து அந்த மந்திரத்தின்

தேவதையை உள்ளத்தில் எண்ணினான். அவ்வாறு அவன் நினைத்த போது, தன்னைப் போன்ற ஒரு வடிவத்தை அந்தப் போர்க்களத்தில் மின்னல் போல் விளங்கும் பல ஆயுதங்களைப் பொருந்துமாறு தாங்கிக் கொண்டு, ''என்னைப் போலப் போர் செய்பவன் யார்?'' என்ற வீரமொழிகளைப் பேசிக்கொண்டு வன்மையான போரைச் செய்வதற்கு எதிரே வரவும், நீலன், இரணியனின் அப்போலி வடிவம் வருவதைக் கண்டான். உடனே அதன் எதிரே நடந்து புகழத்தக்க அசுரர்கள் போர்க் களத்தில் விட்டுச் சென்ற ஒரு தண்டினைக் கையில் எடுத்து, அந்தப் போலி இரணியனின் தலை மீது அடித்தான். அப்போது தேவர்கள் இவனுக்கு அவன் தோற்றான் என்று கூறி நீலன் வீரத்தை வியந்தனர்.

அவ்வாறு தேவர்கள் வியக்கும் போதில் அந்த இரணியன் அனுப்பிய மாய வடிவமும், மிக்க வருத்தம் அடைந்தவரைப் போல வானில் கிளம்பிப் போவதைப் பார்த்து, நீண்ட நேரமாகப் போர் செய்யும் நீலன், களைப்புற்று, அந்தப் போலி வடிவத்தைப் பின் தொடர்ந்து செல்ல, அந்த வடிவம் மறைந்தது. அவ்வடிவம் எங்கே போனது என்று நீண்ட நேரம் எண்ணினான். எண்ணியவன் பின் கீழே பார்த்ததும் பூமி மீது அவ்வடிவம் இருப்பதைப் பார்த்தான். அந்த வடித்தைக் கண்டு மனக்கவலையுடன் நின்று தேடின நீலன் அதனை மாய வடிவு என்று உணராதவனாய், சினத்துடன் அந்தவுரு நிற்கும் இடத்துக்கு வந்தான். அந்த உருவம் தூண் போன்ற தோளால் போர் செய்யத் தொடங்கியது. தொடங்கிய பின் தொலைவிலே சென்றது. பின் அருகில் வந்தது. அதன்பின் திக்குகளில் எல்லாம் திரிந்தது.

திண்மையான தோள்களையுடைய நீலன் 'இது மாயம்?' எனத் தெளிந்த போது, முன்னே அந்த நீலனால் புண்ணினின்றும் ஒழுகும் குருதி நீர் அருகிலே ஓடப் பூமியில் இறந்தவனைப் போல விழுந்து கிடந்த இரணியன், வன்மை வரப்பெற்று எழுந்து ஒரு தேரில் ஏறித் தன் மாயத்துடன் கலந்தான். மாயையுடன் அந்த இரணியன் கலந்து ஒரு வில்லை வளைத்து தீக்கணைகளை வைத்து உருண்ட கல்போன்ற நீலனின் தோள் மீது எய்தான். அவை பட்ட அவன் மலர்ந்த சோலையைப் போல மார்பகம் புண்ணாகக் கூர்மையான அம்புகள் பட்டு நின்றான்.

நீலன் வருந்துவதைக் கண்டு வெற்றி பொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் சினந்து ஓடும் தேருடன் விரைவாக அவ்விடத்துக்கு வந்தார். வன்மையும் கொடிய விடம் போன்ற நிறத்தையும் உடையவனான நூறு

நீண்ட அம்புகளை எய்து விளக்கா நின்ற புகழையுடைய இரணியனின் கொடியையும் வில்லையும் உடல் கவசத்தையும் அழித்தார்.

ஒப்பில்லாத கவசமானது போகவும் சூரபன்மனின் மகனான இரணியன் சிவந்த கையில் வேறொரு வில்லை எடுத்தான். உடனே வீரவாகு தேவர் ஓராயிரம் கொடிய அம்புகளை விரைவாகச் செலுத்தினார். வீரவாகு தேவர் விட்ட அம்புகள், இரணியன் எடுத்த அம்பு, பெரிய வில், பின் பக்கத்தில் கட்டிய அம்பறாத்தூணி, எதிரில் இருந்த தேர் ஓட்டும் சாரதி, தேர் என்ற இவற்றையெல்லாம் அழித்து மார்பையும் பல துளைகளாகச் செய்தன.

சூரபன்மனின் மகன் இரணியன் வேறு ஒரு செவ்விய தேரில் ஏறவும், அந்தத் தேரினையும் வீரருள் வீரரான வீரவாகுதேவர் அம்புகளை எய்து அழித்தார். அதனால் அந்த இரணியன் மயங்கி வன்மை இழந்தவன் ஆனான்.

உடனே இரணியன் "என் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு இங்கிருந்து நீங்கிச் செல்வதே கடமையாகும்" என்று விரைந்து மண்டலத்துக்குள் சென்று ஒரு தெய்வ மந்திரத்தை உள்ளத்தில் நினைத்தான். அங்ஙனம் அவன் நினைத்தவுடன் அவனது வடிவம் அருவம் ஆகியது. அப்போது இவனை மற்றவர் உணராதபடி மின்னும் குளிர்ந்த ஒளியையுடைய மீன் வடிவத்தை எடுத்து அழகான கடல் நீரினுள் போனான். போர்க் களத்தில் நின்ற வீரர்கள் பகைவர் படைகளைப் போரில் கொன்றார்கள். உடனே தூதர்கள் காற்றும் உள்ளமும் பின்படச் சென்று கல்யாணகரமான நகரத்தில் உள்ள அரசு மண்டபத்தை அடைந்தனர்.

அந்தக் கொலு மண்டபத்தில் இருந்த சூரபன்மனை வணங்கி "மன்னவா! நீ பெற்ற மகனான இரணியன் போரில் பகைவரை எதிர்த்து நிற்க ஆற்றாதவனாய்த் தப்பிப் பிழைப்பதற்கோ அல்லது ஒரு சூழ்ச்சியால் இவர்களது உயிரை நீக்குவதற்கோ, அறியோம், அவன் கடலுக்குள் புகுந்தான்" என்று ஒற்றர் உரைக்கவும், அதைக் கேட்ட சூரபன்மன் குன்றி வெட்கிக் கொடிய சினம்கொண்டு அங்கு ஒருபேச்சும் இல்லாமல் இருந்தான். அப்போது இந்த இடத்துக்கு மகன் அக்கினி முகாசுரன் வந்தான்.

# 8. அக்கினி முகாசுரன் வதை

## (நாலாம் நாள் பகலில் நிகழும் போர்)

அக்கினி முகாசுரன் என்பவன் எத்தகையவன் என்றால் எட்டுதிக்குப் பாலர்களையும் எட்டுத்திக்கு யானைகளையும் கூட்டமான ஒளிப் பொருள்களையும் குதிரைகளையும் ஓடும் தேரையும் கொண்டு வந்து வட்டு என்ற ஆட்டம் ஆடிய ஒப்பில்லாத வலிமை பெற்றுள்ளவன். அவன் கருவாய் இருந்த காலம் முதல் பதுமகோமளை என்ற இவனுடைய தாய் தன்னுடல் முழுவதும் தீயைச் சிந்தினாள். அப்போது அந்த இடத்துக்குப் பெருமையுடைய மாயை என்பவள் வந்து, "நீ தீயைச் சிந்துவதற்குக் காரணமான நின் வயிற்றிலே உள்ளவன் எரிமாமுகன் (அக்கினி முகன்) என்று கூறப்படுவான்" என்று சொன்னாள். அதனையே அவன் இயற்பெயராக் கொண்டவன். அவன் தனக்கு முன்னால் பிறந்த பானுகோபன் வானில் உதயமாகின்ற நெருங்கிய கதிர்களையுடைய சூரியனைச் சிறையிட்டதைக் கேள்வியுற்றான். நிலைபெற்ற சந்திரனைப் பலநாள் துன்பப்பட சிறையில் வைத்தான்.

இந்த எரிமுகன் அழகிய மாலையை முடியில் சூடியுள்ள தந்தையின் முன்னம் வந்து அவனது அடியை வணங்கி, "தந்தையே! நீ என்ன காரணத்தால் மெலிந்துள்ளாய்!" என்று வினவவும், சூரபன்மன் மன வருத்தத்துடன் சொல்லலானான். "தூதனாய் தேவர் பொருட்டாக இங்கு வந்தவன், இப்போது மதிலான எல்லையைக் கடந்து நம்மைப் பொருட்படுத்தாது நம் நகரத்திடையே வந்துள்ளான். அவனை வெல்லப் போன நம் படைகள் தோற்றன. பிறகு இரணியனைப் படையுடன் அனுப்பினோம். அவன் கொடியபோர் செய்து பகைவரின் வலிமையைப் பார்த்து தோற்றுப் பெரிய கடலில் புகுந்து உயிர் தப்பினான். சூரபன்மன் உரைத்ததைக் கேட்டு, தீயைக் கக்குகின்ற கொடிய கோரமான முகம் கொண்ட அக்கினி முகாசுரன் தம் தந்தை சூரபன்மனின் முகத்தைப் பார்த்துச் சொல்லலானான். "வலிமையையுடைய அத்தூதனையும் அவனல்லாது மற்றவரையும், பக்கத்தே இருந்து போர் செய்கின்ற பூதரையும் வெற்றி கொண்டு இங்கு வந்து நின்னைச் சேர்வேன். விடை தருவாயாக!" என்றான். "நல்லதைச் சொன்னாய்; பகைவனை வென்றே வருக!" என்று சூரபன்மன் விடுக்கவும், நின்று தன் தந்தையை வணங்கி விட்டு, மலை போன்ற தோள் வன்மையுடைய அக்கினி முகாசுரன் "பகைவர் எல்லாரையும் நான் ஓர்

கணப்போதில் அழித்து விடுவேன்" என்று படையுடனே செல்லலானான். பூத படையினரும் சளைக்காமல் அவுணர் மீது மூன்று தலைகளையுடைய சூலம், தண்டு, முசலம், சக்கரம் முதலிய படைக்கருவிகளையும், தம் கையிலே இருந்த கூரிய முனை கொண்ட மழுவையும், மலையையும் எறிந்தனர். அவ்வாறு எறிந்த போது அப்போர்க்களத்தில் அளவில்லாத அவுண வீரர்கள் இறந்தனர். குதிரைகளின் கால்களும் தலைகளும் துண்டாயின. பெரிய தேர்களின் அச்சுகளும் முறிந்தன. கொடிகள் அறுபட்டன. மூன்று மதநீர்களைக் கொண்ட யானைகள்பல மடிந்தன. வீரர் உடல்கள் எங்கும் வெவ்வேறாகிட இறந்தனர். அப்போர்க்களத்தில் கழுகுகளும், காகங்களும், கூளிகளும் பேய்களும் கூடி விருந்து கிடைத்தது என்று வேட்டையாடின. அசுரர் படையும் பூதப் படையும் இவ்வாறு எதிர்த்துப் போர் செய்யும் போது, அஞ்சிய வேல் போன்ற கண்களையுடைய நவசக்திகளின் வியர்வையில் வந்து தோன்றிய இலட்சம் வீரர்களும் ஒப்பில்லாத விற்களை வளைத்து அம்புகளை எய்து வளைந்து கொண்டனர். அவுணரில் யாவரும் நில்லாது தோற்று ஓடிப் போயினர்.

அசுரப் படைகள் தோற்று ஓடியவுடனே, சூரபன்மனின் மகனான அக்கினி முகன் விரைந்து மேகன், கடிய ஆற்றலையுடைய சோமன், சோமகண்டகன் முதலானவரை அனுப்ப, அப்படைத் தலைவர் பலர், அம்பு மழை பெய்து கொண்டு கொல்லும் போர்க்குரிய விற்களைக் கொண்ட இலட்சம் வீரர்களின் எதிரே சென்று போர் செய்தனர். மேகன் முதலான அசுரப் படைத்தலைவர்கள் அவ்வாறு போர் செய்ய, வீரக்கழலை அணிந்தவனும் சினத்தால் கடவுளைப் போன்றவனும் இடியும் அஞ்சும்படி ஆரவாரம் செய்பவனுமான வீரபுரந்தரன் அதைப் பார்த்து, விரைவாகத் தனது ஒப்பற்ற படையின் முன்னால் வந்தான். அவுண வீரர் வீரபுரந்தரனை வளைத்து கொண்டு அவனது உடலில் இரத்தநீர் ஒழுகுமாறு அம்புகளை எய்தனர். அவன் ஒலிக்கும் தீப்போல் சினம் கொண்டு, மற்ற அவ்வீரர்களின் வில் தேர் என்பனவற்றை மண்மீது சிந்திடச் செய்து, விரைவாக நெற்றி, மார்பு, தோள் ஆகிய உறுப்புகளின் மீது நீண்ட பல அம்புகளை எய்தான்.

வீரபுரந்தரன், தன் கையிலே ஒரு வேலை ஏந்தி "இதனால் நீ அழிந்தாய்!" என்று சொல்லி வீசினான். வீசவும் மேகத்தின் பெயர் கொண்ட மேகன் தரையின் மீது விழுந்து இறந்தான். அப்போர்க்களத்திலே இரத்த வெள்ளங்கள் ஓடின. உலகமானது அச்சம் கொண்டு நடுங்க ஒலித்துக்

தலையற்ற உடற்குறைகள் அப்போர்க்களத்தில் ஆடின. பேய்கள் மிகுதியாக அங்குப் பாடின. நாய்களின் கூட்டம் எங்கும் பரவின. காக்கைகள் நெருங்கின. பருந்துகளும் கழுகுகளும் ஒன்று கூடின. அக்கினி முகாசுரன் எய்த பெரிய அம்புகள் முருகப்பெருமானின் படைவீரன் மீது வந்தன; தைத்தன. மன்னன் சூரபன்மனின் மகன் அக்கினிமுகன் முன்பு போர் செய்யும் நம் வீரன் எய்கின்ற கொடிய அம்புகள் பலவும் அவன்மீது படாமல் விலகின. அவ்விருவரின் அம்புகளும் ஒன்றுடன் மோதி முறிந்தன. அசுரர் தலைவனுமான அக்கினி முகனின் வன்மையால் வீரபுரந்தரன் வீறு அழிந்ததும் கண்களில் தீயானது வெளிப்படப் பார்த்துப் சினந்து வில்லை வளைத்து அம்புகள் எய்து வசைச்சொற்கள் பலவற்றையும் கூறி வீரபுரந்தனின் துணைவர் ஏழுபேரும் அக்கினிமுகனை எதிர்த்துப் போரிட வந்தனர். உலகத்தில் உள்ளவரால் புகழப்படுகின்ற தலைவரான சூரபன்மனின் மகனான அக்கினிமுகன் அதிகமாக அம்புகளை எய்ய, அதனால் மெலிவடைந்த ஏழு வீரர்களும், திரும்ப அந்த கொடியவனின் முகத்தில் ஆயிரம், கைகளில் ஆயிரமும், மார்பில் ஆயிரமும், தோள்களில் ஆயிரமுமாக அம்புகளை விடுத்தனர். அன்றியும் அவனது தேரையும் உடைத்தனர்.

அப்போது அசுரனான அக்கினிமுகன் வேறே ஒரு பரந்த தேரில் பாய்ந்து நெற்றிக் கண்ணரான தூய சிவபெருமானின் அம்பை (சிவக்கணையை) எடுத்து விரைவாக விருப்புடன் அருச்சனை செய்து எய்தான். வன்மையுடைய எரிமுகன் முழுமுதற் கடவுளான சிவபெருமானின் அம்பை விட, அந்தச் சிவக்கணை வானத்துக்கும் பூமிக்கும் வடவைத் தீ வடிவமாக வரவும், ஏழு இளைஞரான வீரர்களும் சினத்துடன் அதைப் பார்த்தனர். "வருகின்ற அப்படைக்கலமானது தீக்கணையாகும். ஆதலால் அதற்கு மாறானதான வருணக் கணையை விடுவோம்" என்று மனதில் எண்ணி, ஒரு கூட்டமாக நின்ற அந்த ஏழு துணைவர்களும் வருணப் படையை எய்தனர்.

அந்த ஊழிக்காலத்து தீயைப் போன்ற சிவக்கணை வருணக் கணைகள் ஏழையும் உண்டு, உலகத்தில் உள்ளவர் அஞ்சுமாறு, வலியுடன் சென்று, துன்புறுத்தி, அந்த ஏழு பேர்களின் உயிர்களையும் உண்டு திரும்பியது. அந்தச் சிவக்கணை திரும்பிச் சென்றதும், அந்த ஏழு வீரர்களும் அங்கு இறந்து கயிலாய மலைக்குச் சென்றனர். பற்றி எரியும் தீயின் முகத்தவனான அக்கினி முகன் அதைப் பார்த்து மிக்க மகிழ்ச்சி உடையவன் ஆனான்.

அந்த ஏழு வீரர்களும் ஒன்றாக விழவும் அதை அருகில் நின்று பார்த்து வெற்றியும் வெவ்விய தன்மையும் உடைய பூதர்கள் கைகளை விரித்துக் கலக்கம் அடைந்து வாயில் அடித்து இரங்கிப் பயந்து நீங்கிச் சென்றனர். முன்னால் உள்ள வீரர் எழுவர் இறப்பையும், விடாமல் பூத வீரர் ஓடுவதையும், வெற்றித் தலைவரான வீரவாகு தேவர் விரைவாக பார்த்து "நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை!. என்று கைகளால் அமர்த்தி ஓர் இமைப் போதில், ஒப்பற்ற தனது தேருடன் அரிய தீ முகத்தவனான அக்கினி முகனின் முன்னம் சென்று "(உன்னை நான் கொல்லாத வண்ணம்) உலகமே திரண்டு நின்று உன்னைக் காத்தாலும், பல அசுரர்கள் எதிர்த்து நின்று காத்தாலும், அழிவற்ற சூரபன்மன் உன் பக்கத்தே நின்று காத்தாலும், அழிவில்லாத ஆற்றலையுடைய வேறு எவர் காத்தாலும், நான் உன்னைக் கொன்று விடுவேன்" என்று சொல்லவும், மலை போன்ற சினத் தீயானது விரைந்து எழுந்து மனத்தை வருத்த அத்தீய அக்கினிமுகன் வலிய திண்மையான ஒரு வில்லை வளைத்தான்.

சூரபன்மனின் மகன் அக்கினிமுகன், வானத்தில் பொருந்தும் இயல்புடைய சூரியக் கணையை விரைவாகச் செல்ல விட, வீரவாகு தேவரும் அங்ஙனமே சூரியக்கணையை விடுத்து அதை விலக்கினார். பின்பு வலிய தோளையுடைய அவர், பாம்பின் நஞ்சு தோய்ந்த மிகவும் கூர்மையான நூறு அம்புகள் அக்கினிமுகனின் மார்பில் பாயும்படி செலுத்தினார். அறத்தின் தன்மையை நிலை நாட்டிடும் தகுதியுடையவரான வீரவாகுதேவர் விடுக்கின்ற அம்புகள் மார்பிலே பாயவும், அந்த அக்கினிமுகன், தேவர் அமிர்தத்தை உண்பதற்காக ஒன்று கூடிப் பாற்கடலைக் கடைந்த போது, அப்பாற்கடலில் கவிழ்ந்த பெரிய மந்தரமலையான மத்தினைப் போல், தன் நிலை தளர்ந்து பெரிய தேரின்மீது விழுந்தான். விழும்போது காளியை நினைத்தான். சூரபன்மனின் மைந்தனான அக்கினிமுகன் தன்னை நினைத்ததும், நஞ்சும் அஞ்சுமாறு வரும் இயல்புடைய காளி, அவன் எதிரில் வந்தாள். கருக்கொண்ட மேகத்தைப் போலக் கரிய நிறம் கொண்டு சூலத்தைச் சுமந்து அலமரும் தோளுடைய நிறம் பொருந்திய இங்குலிகம் போன்ற சிவந்த சடையுடையும், கடுமையும், கொலைத் தொழில் கொண்டதுமான கண்களை உடைய காளி, ஞானவுணர்ச்சியை அழித்து பொறாமையை மிகுதியாக உடையவள். பூப்போன்ற அழகுடைய கால்களை உடையவள். இன்பம் ஒழிந்த பகைவரின் தலைகளையே பற்றி அறுக்கின்ற பொன்மயமான வாளையுடையவள். இப்படிப்பட்ட இயல்புகளை உடைய

## 2. அக்நிஜாத ஸுப்ரமண்ய:

*த்வி முகம் ச அஷ்ட பாஹும் ச ச்வேதம்வா ச்யாமசுந்தரம்*

*ஸ்ருவா அக்ஷமாலாம் கட்கம் ச ஸ்வஸ்திகம் தக்ஷிணேகரே*

*குக்குடம் கேடகம் வஜ்ரம் ஆஜ்யபாத்ரம்து வாமகே*

*அக்நிஹோத்ரவிதிம் தேவம் அக்நிஜாதஸ்வரூபகம்*

*நீலவர்ண:*

இரு முகம், எட்டு கைகள், வலது நான்கு கைகளில் முறையே ஹோமம் செய்யும் கரண்டி, அக்ஷ மாலை, கத்தி, ஸ்வஸ்திகம்; இடது நான்கு கரங்களில் கோழி, கேடகம், வஜ்ரம், நெய் பாத்திரம், அக்நியிற் ஜனித்த உரு, அக்நி ஹோத்ர விதியின் தேவர்.

காளி, சூரபன்மனின் மகனான அக்கினிமுகன் எதிரே சிங்கத்தின் மீது ஏறி வந்த காளி, அக்கிமுகனுக்கு அருள் செய்து, வீரவாகு தேவரிடம் உள்ள தெய்வத் தன்மையுடைய பூதப் படையின்மீது சென்று ஆரவாரமுடைய பொருட்டுச் செயலை செய்ய நினைத்து, ஐந்து வகையான மண், விண், காற்று, நீர் என்ற பூதங்களும் அஞ்ச ஆரவாரம் செய்தாள்.

காளிகளும் கூளிகளும் இவ்வாறு போர் செய்வதைப் பார்த்து, 'வெற்றியையுடைய பூதப்படையினர் எல்லாரையும் கொல்வேன்' என்று கையில் இருந்த சூலத்தைப் பத்திர காளியின் அருளைப் பெற்ற அசுரகாளி வீசினாள். தீயினை வெளிப்படுத்தும் வேலினையுடைய வீரவாகுதேவர் எய்த அம்புகள் பதினான்கும் மூன்று தலைகளையுடைய சூலத்தை நுண்ணிய துகள்களாக ஆக்கின. அத்தன்மையைக் காளி என்று உரைக்கின்ற வன்மை வாய்ந்த காளியானவள் ஓர் இமைப் போதில், முன்னால் எதிர்த்து நின்ற படைக் கடலைக் கடந்து வெல்லும்படியான வல்லமையையுடைய சிங்கத்தின் மீது அமர்ந்து ஆரவாரம் செய்த வண்ணம் வீரவாகுதேவர் முன் சென்று "நான் முன்பு எறிந்த மூன்று இலை போன்ற வடிவு கொண்ட சூலத்தைக் கொடிய கணையால் தடுத்து நிறுத்தினாய். என்னிடம் இன்னும் ஒரு சூலமானது இருக்கின்றது. அதனை எறிவேன். நீ இறப்பாய்! அது உன்னைத் தாக்காமல் காத்துக் கொள்வது அரிதாகும்!" என்றாள்.

இப்படிச் சொல்லவும், வீரவாகு தேவர் சிரித்து, "விளங்கும் சூலம் ஒன்றானது, ஆயிரம் வீசினாலும் எதிர்கொண்டு நின்று அவை முழுவதையும் பொடியாக்கி விடுவேன்! நீ பெண் ஆனதால் என் வலிய ஆற்றலை நீ உணரவில்லை!" என்று உரைத்தார். எட்டுத் தோள்களையுடைய காளி உடனே வெண்மையான பிடரி மயிரைக் கொண்ட சிங்கத்தின் மீது அமர்ந்திருத்தலை விடுத்து, பாலையையுடைய அலைகள் கொண்ட பரப்பை விடுத்து நீங்குகின்ற நஞ்சைப் போல் வீரவாகு தேவர் முன் சென்றாள். வீரவாகு தேவர் அவளது எட்டுக் கைகளையும் ஒடிப்பது போல ஒரு கையால் பிடித்தார். மற்றொரு பெருங்கையால் காளியின் மார்பில் தாக்கினார். அப்போது அக்காளி விழுந்து மயக்கம் அடைந்தாள். காளியானவள் மூர்ச்சையாகி விழுந்த பின்பு, பழைமையான ஐம்புல உணர்ச்சிகளும் தோன்றவும், அவள் தன் கொடிய தன்மையை கைவிட்டுக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

ஆடவரில் சிறந்த வீரவாகுவின் மார்பில் அடிக்கப்போகும் வீரமும் இல்லாது, கீழே மயங்கி விழுந்ததும், மிக்க மயக்கம் கொண்டதும் ஆகியவற்றை எண்ணி நடுங்கும் உயிரை உடைய அந்தக் காளி மிக்க நாணம் அடைந்து, "அழிவில்லாத ஆறுமுகப்பெருமானின் ஆணையில் வந்த வீரவாகுவுடன் போர் செய்தால் வெற்றி உண்டாகுமா? நான் அறிவு இல்லாமல் இங்கு வந்து விட்டேன்!" என்று எண்ணி, வீரவாகுவின் அடிதனில் வண்மையிழந்து விழந்து கிடந்த காளியானவள் எழுந்து, தேர்மீது ஒளியுடன் விளங்கும் வீரவாகு தேவரை இவ்வாறு புகழ்ந்து கூறினான். "சாமான்ய பயிற்சியுடைய அக்கினிமுகன் இன்று என்னை வழிபட்டுப் பல உயிர்களைப் பலி தந்து வேண்டிக் கொண்டான். அதனால் அவன் செய்த நன்றி மறவாத நான் இங்கு வந்தேன். உன்னுடைய வலிமையும் உன் வீரமும் உன் அடையாளமான அணிகளையும் நான் அறியேன். அதனால் போரில் எதிர்த்து இவ்வாறு ஆயினேன். இனி நான் என் பழைய இடத்துக்குச் செல்வேன். இனி நீ சினம் கொண்டு அக்கினிமுகனைத் தண்டித்து அவனது உயிரை உண்பாயாக! அவனுடன் வந்துள்ள மற்ற அசுரர்களையும் அழிப்பாயாக! முன் காலத்தில் கதிரவரைப் பகைத்த பானுகோபனையும் கொல்வாயாக! நீ பகைவரை வென்று ஆறு திருமுகங்களைக் கொண்ட முருகப்பெருமானின் அருளை அடைந்து மகிழ்வாயாக! நீண்ட பல ஊழிகாலம் வாழ்வாயாக! நான் கூறிய எல்லாவற்றையும் பின்னால் காண்பாயாக!" எனக் கூறினாள். இவ்வாறு காளியானவள் சொல்லி, கொடிய போரில் வல்ல வீரவாகு தேவரின் விடையைப் பெற்றுக் கொண்டு, சிங்கத்தின் அழகிய கழுத்தில் அமர்ந்து, பழைய காளிப் படைகள் சூழ்ந்து வர, தான் முன்னம் எங்கிருந்து வந்தாளோ அங்குச் சென்றாள். காளிதேவி சென்ற பின்பு, அக்கினிமுகன் அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் பார்த்துச் சினந்து 'இக் கள்வனது ஆற்றல் நன்றாக உள்ளது!' என்று எண்ணித் திண்ணிய ஆற்றலையுடைய ஆற்றலால் மிகுந்து தொலைவில் இருந்து இடியை வெளிப்படுத்திக் கொண்டு மேகமானது எழுந்ததுபோல விரைந்து எழுந்து வந்து சொல்லத் தொடங்கினான். "இனி நான் ஓர் இமைப் போதில் என் தம்பி வச்சிரவாகுவின் உயிரைப் பறித்து முன்னால் இந்நகரத்தினின்றும் நீங்கிச்சென்ற தூதனான வீரவாகுவின் வலிமையை அழித்து, அவனது உயிரை எமனுக்கு உணவாகத் தருவேன். இதைச் செய்யாது என் தந்தையான மன்னன் முன்னம் செல்லேன். இது நான் சொல்லும் வஞ்சினமாகும்!" என்று சொன்னான். அக்கினிமுகன் இத்தகைய சொல்லைச் சொல்லி பின்பு பெரிய அசுரப்படை பக்கத்தில் சூழந்து வர,

சக்கரங்களையுடைய தேரில் ஏறிப்போய், அழகிய வில்லை எடுத்து வன்மையுடன் வளைத்துக் கூரிய பெரிய நூறு அம்புகள் வைத்து வீரம் உடைய தோள்களைக் கொண்ட வீரவாகுவின் மீது செலுத்தி ஆரவாரம் செய்தான்.

கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் அரை மாத்திரைப் பொழுதில் உண்கின்ற ஆற்றலையுடைய வீரவாகுவின் நெடிய வீரபத்திரக்கணை விரைவாக செல்லும் போது, அதனது வருகையைக் கண்ட திருமாலின் மகனான நான்முகக் கணை, நடுக்கம் கொண்டு, மிகவும் தாழ்ந்து பார்த்தவர் அனைவரும் நகைக்குமாறு, விலகிச் சென்றது. அன்னப் பறைவையை ஊர்தியாகக் கொண்ட நான்முகக் கணை விலகிச் செல்லவும், வீரவாகுதேவர் விடுத்த வீரபத்திரக் கணை விரைவாகச் சென்று அக்கினிமுகனின் உயிரைக் கவர்ந்து கொண்டு அவனுடைய சிறந்த முடிகளைத் தள்ளி மின்னல் போல் வீரவாகு தேவரிடம் திரும்பி வந்து சேர்ந்தது.

கொடிய அந்த அக்கினிமுகன் இறந்து விழுந்தான். அச்செயலை விரைவாகக் கண்டு வீரவாகு தேவரை வாழ்த்தி நின்று மலர் மழை பொழிந்து தம் உடலில் உள்ள ஆடையையும் வீசி ஆரவாரம் செய்தனர் இவ்வாறு இறந்தவர்களே அல்லாது எண்ணற கொடிய வன்மை வாய்ந்த அசுரர்கள் அஞ்சி ஓடுதலும், களங்கம் அடையத்தக்க இயல்புக்கேற்ற செயல்களையே செய்து கொண்டிருக்கும் மகேந்திர நகரம் கடல் உடைந்தது போன்ற ஆரவாரம் கொண்டதாக விளங்கியது.

அந்தப் போர்க் களத்தில் தான் செய்ய வேண்டிய போர்ச் செயல் முற்றுப் பெற, அச் சிவந்த போர்க்களத்தில் நடுவில் வீரவாகு தேவர் இருக்க, போரின் பொருட்டுத் தம்மிடமிருந்து நீங்கிச் சென்ற இலட்சம் வீரரும் அளவற்ற பூதர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். எரிகின்ற தீயின் முகம் கொண்ட அக்கினிமுகன் வீசிய கொடிய அம்புகள் மார்பில் பாய ஒப்பற்ற தன் வன்மையானது நீங்கத் துன்பத்துள் ஆழ்ந்து வருந்திய வீரபுரந்தரன் மயக்கம் தெளிந்து எழுந்து ஒரு பக்கத்தில் வந்தான்.

திரிபுண்டரமான திருநீற்றை அணிந்த வீரவாகு தேவர் பக்கத்தில், மேற்கூறப்பட்ட இவர்கள் எல்லாம் வந்து நிற்கவும், மதிக்கத்தக்க தம்பியர் ஏழு பேர்களையும் காணாமல் கவலைக் கொண்டு சொல்லனானார். "ஆண்களுள் சிறந்தவரான என் தம்பியர் எழுவரும் பகைவர்க்கு எதிராகப்

போர் செய்தனர். அவர்கள் இறந்தார்களோ? அல்லது மயங்கினார்களோ? அவர்கள் எங்கு விழுந்து கிடக்கின்றனர்? இடத்தைச் சொல்வீராக!'' என்று வீரவாகு தேவர் கேட்கவும், 'உக்கிரன்' என்ற பெயர் கொண்ட பூதன், ''உன் தம்பியர் எழுவரையும் சூரபன்மனின் மகன் அக்கினிமுகன் கொன்று விட்டான். அந்த எழுவர் உயிர்களையும் எமன் கொண்டு போய்விட்டான். இங்கு முன்னதாகச் சொல்லப்படுகின்ற நூறு யோசனை தொலைவுக்கு அப்பால் ஆலமரம் ஒன்றிருக்கின்றது. வானமும் சிறிது என்னும்படி உயர்ந்து வளர்ந்துள்ள அந்த ஆலமரத்தின் அடியிலே உம் தம்பியர் இறந்து கிடக்கின்றனர். இது உண்மையே!'' என்று சொன்னான்.

உக்கிரன் சொற்களைக் கேட்ட, வீரவாகுதேவர் மிக்க துன்பத்தை அடைந்து, பக்கத்தில் உள்ளவர், தம்முடன் வர, ஏழு தம்பியரும் இறந்து கிடக்கும் இடத்துக்குச் சென்றார். நூறு யோசனை தொலைவைக் கடந்து ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த வீரவாகுதேவர் செல்ல, பசிய இலைகள் பொருந்திய ஆலமரத்தின் கீழே அன்புடைய தம்பியர் எழுவரும் இறந்து கிடப்பதைப் பார்த்தார்.

தம் தம்பியரைப் பார்த்துக் கண்கள் இரத்தத்தை வெளிப்படுத்த அவர்களின்மீது விழுந்து உடல்களைத் தழுவிக் கொண்டார். அத்தம்பியரைக் கூவி அழைத்து அரற்றிச் சிவந்த வாயைத் திறந்து பெருமூச்சுவிட்டு மேனி வியர்த்தார். உயிர் உண்டோ இல்லையோ என்று சொல்லும்படி சோர்ந்து மயங்கிப் பின் உணர்ந்து இரங்கிப் புலம்பலானார். பின்னர் மனம் தேறி வீரவாகு எழுந்து, முதுகில் கட்டப்படுகின்ற அம்பறாத் தூணியில் ஓர் அம்பை எடுத்துத் தன் கை நகத்தினால் அந்த அம்பின் முனையிலே அறக் கடவுளான எமன் காணுமாறு ''வேல் ஏந்திய முருகப் பெருமானின் தம்பி இதை எழுதினேன். தக்க காலத்தை ஆராய்ந்து உயிர்களைக் கொண்டு செல்லும் எமன் காண்க. நீ அழகிய கொடிய வில்களைக் கை கொண்டிருந்த எம்தம்பியரின் அரிய உயிரைக் கொண்டு போனாய். இது சிறந்ததோ! அவர்களின் உயிர்களை விரைவில் விடுவிப்பாயாக!'' என்று எழுதினார். செம்மைத் திறம் விளங்கும் தம் நகத்தினால் அந்த அம்பில் இவ்வாறு எழுதி அழகிய இலையை வளைத்து அதில் வைத்து, பன்னிரெண்டு தோள்களையுடைய முருகப்பெருமானை உள்ளத்தில் நினைத்துத் துதித்து விரைந்து மின்னல் போலச் சென்று எமபுரத்தை சேரும்படி அந்த அம்பை எய்தார்.

கரந்தை மலரைச் சூடியருளிய சிவபெருமானின் அழகிய மகனுக்குத் தம்பியான வீரவாகுதேவர் விடுத்த அம்பு, முன்னால் விரைந் ஏழு கடல்களையும் கடந்து சென்று வானத்தில் உயர்ந்து இருந்த மானசோத்திர மலைக்குத் தெற்கில் உள்ள எமபுரத்தில் சென்று கூற்றுவனின் முன்னர் விழுந்தது. வீரவாகு தேவர் எய்த அந்த அம்பானது விரைந்து போய் எமன் அருகில் விழ, அதனைக் கண்ட அவன் வியப்படைந்து அதன் அருகில் சென்று கையில் எடுத்துப் பார்த்தான். அது வீரவாகு என்ற இளவல் விடுத்ததாக இருக்கப் பார்த்து நிலைமையை உணர்ந்தான். கூர்மையான நீண்ட அம்பில் எழுதப்பட்ட முடங்கலின் பொருள்கள் எல்லாவற்றையும் ஆய்ந்து துன்பம் அடைந்து அஞ்சி, அந்த வீரவாகுவின் தம்பியர் இங்கு எமவுலகில் இல்லை. எங்குச் சென்றிருப்பர் என எண்ணினான். அவர்கள் கயிலாயத்தில் சென்றிருப்பதைத் தன் உணர்வால் அறிந்தான்.

உடனே எமன், அந்த எழுவரின் முன்பு சென்று வணங்கி, "எல்லாவற்றையும் அறிந்தவர்களே! உம் தமையர் உங்களை தேட இங்கு நீங்கள் இருப்பது என்ன? நீங்கள் விரைவாகச் செல்லாது போனால் அவர் என்னையும் சந்தேகப்படுவார். இந்தப் பூதர்களுடன் நீங்கள் ஏழு பேர்களும் விரைவாக எழுந்து வாருங்கள்" என்று மொழிந்தான். எமன் இதைச் சொன்னவுடன், அந்த ஏழு பேரும் அங்கு இருப்பதை விட்டு எழுந்து இரண்டு பக்கங்களிலும் இருந்த பூதர்கள் எல்லாரும் உடன் வர, கயிலை மலையை விட்டு நீங்கி ஒரு மாத்திரைப் போது அழிவதற்குள், சூரபன்மன் இருக்கும் மகேந்திர நகரத்தில் உள்ள போர்க்களத்ததை அடைந்தனர்.

அவ்வாறு அவர்கள் புகுந்த போது அந்த ஏழு பேர்களும் தங்களுடைய பழைய உடல்களில் புகுந்தனர். பூதக்கணத்தவர் எல்லாரும் அங்கு நெருங்கிக் கிடந்த தம் உடல்களில் புகுந்து எழுந்தனர். அப்போது தேவர்கள் மலர் மழை பெய்து ஆரவாரம் செய்தனர்.

இவ்வாறு ஏழு வீரர்களும் துடிதுடித்து எழுந்து மூத்தவரான வீரவாகுதேவரின் பாதகமலங்களை முறைப்படி தலைவைத்து வணங்கினர். உடனே அளவில்லாத புகழையுடைய வீரவாகு தேவர் தம் செங்கையால் அவர்களை எடுத்துப் பொன்மயமான மார்பு பொருந்தத் தழுவிக் கொண்டார். தம் தம்பியரைத் தழுவிக் கொண்ட வீரவாகு தேவர், பாம்பு உண்டு உமிழ்ந்த கதிரவன் போல ஒளிர்ந்தார். "இனி நான் அவுணரைக் கொல்வதோ அரிது?" என்று துன்பம் நீங்கி மனமகிழ்ச்சி கொண்டார். போர்க்களத்தில் இருந்து

இவை அனைத்தையும் பார்த்து வந்த ஒற்றர்கள், சூரன் அரண்மனைக்குள் சென்று தம் மன்னனான சூரபன்மனை வணங்கி, "மன்னவரே, உன் மகன் அக்கினிமுகன், போர் செய்து வீரவாகு விடுத்த வீரபத்திரக் கணையினால் இறந்து சாம்பலாகி விழுந்தான்" என்று கூறினர். ஒற்றர் இப்படிச் சொன்னவுடன் அசுரனான சூரபன்மன் பூமியில் விழுந்து, புத்திர சோகத்தால் மனந் தளர்ந்து துன்பக் கடலில் வீழ்ந்தான்.

"மகனே! நல்லவனே! கரியவனே! செல்வமே! சிறுவனே! உண்மையான என் அரிய உயிரே! இளைஞனே! வலிய வேலை ஏந்திய கையுடையவனே! மன்னா! களிறே ஐயா! நீ என்னையும் மறந்தனையோ!" என்று சூரபன்மன் சொல்லி இரங்கவும், அதனை இறந்த மகனின் தாயான பதுமகோமளை என்பவள் கேட்டு, உயிரும் உள்ளமும் நடுங்கத் துன்பக் கடலுள் மூழ்கினாள். அந்த வீரமகேந்திரத்திலும் அழும் குரல் எங்கும் கேட்பதாயிற்று.

## 9. மூவாயிரவர் வதை

## *(நாலாம் நாள் பிற்பகல் போர்)*

இந்தச் சூழலில் மூவாயிரம் மைந்தர் நடந்த இவற்றையெல்லாம் கேட்டுக் கூட்டமாக ஒன்று கூடி மன்னனான சூரபன்மன் வாழ்கின்ற அரண்மனையை அடைந்தனர்.

அடைந்த அவர்கள், "எம் தந்தையே! வன்மையுடைய இலட்சம் வீரரும் மற்ற எட்டுப் பேரும், மிகப்பெரிய ஆற்றலையுடைய வீரவாகு தேவரும், மற்ற வீரரும், நெருங்கி நிற்கும் போர்க்களத்தில் நீ அக்கினி முகன் ஒருவனை மட்டுமே அனுப்பினாய். தனி ஒருவனாய்ச் சென்ற அவன் அவ்வளவு பேரையும் கொல்ல வல்லவனோ? நீ இறந்த ஒரு அக்கினி முகன் பொருட்டு இரங்கி வருந்தாதே! நாங்கள் மூவாயிரம் பேர் இருக்கிறோம். இரணியன் என்ற உன் மகனும் இன்னும் இருக்கின்றான். தாமரையின் கணவனான கதிரவனைச் சிறையில் அடைத்த மன்னன் பானுகோபனும் இருக்கின்றான். எனவே உனக்கு ஒரு குறை உண்டோ?" என்று ஆறுதல் சொல்லவும், சூரபன்மன் துன்பம் நீங்கப் பெற்று, "நல்லது! மைந்தரே! போர்க்குச் சென்று வாருங்கள்"

என்று சொன்னான். வலிய ஆற்றலையுடைய சூரபன்மனை அந்த மூவாயிரர் கைகூப்பித் தொழுது படைக்கலங்களைக் கைகளிலே கொண்டு, தும்பை மாலையை முடியில் சூடி, மார்பில் பொருத்தமாக அணிகளை அணிந்து தேர்களில் ஏறினர். உடனே படைகள் எல்லாம் வந்தன.

அசுரர் படை எண் இல்லாதவை! மிக்க ஆற்றலையுடையது; யானைகள் எண் இல்லாதவை. அழகிய சிறப்புடைய குதிரைகளின் தொகை எண் இல்லாதவை. கூட்டமாக வருகின்ற தேர்ப்படைகளும் எண் இல்லாதவையாக வந்தன. அப்போது மூவாயிரவர் கரிய மேகங்கள் உலகத்தில் நெருங்கிச் சென்றார் போல, ஒன்று கூடிப் போர் செய்யும் போர்க்களத்துக்கு வந்தனர். அவர்கள் வருவதை முருகப்பெருமானின் பூதவீரர்கள் பார்த்தனர்.

பூதப்படையினர் அவர்களை எதிர்த்தார்கள். உடனே முதிர்ந்த சினத்துடன் விளங்கும் வன்மை பொருந்திய அசுரர்களும் எதிர்த்தனர். அச்சமயத்தில் பேரிகைகள் முழங்கின. அதனால் அண்டங்கள் பிதிர்ந்தன. சக்கரவாள மலையும் பிளந்தது. நீர் நிலையைக் கலக்கி மலர்களைச் சிதைத்த யானையைப் போல பகைவர்களால் கொல்வதற்கரிய மூவாயிரம் வில் வீரர்களும் எய்கின்ற அம்புகளால் துயரம் அடையும் பூதவீரர்கள் நில்லாது தோற்றோடினர். அதைப் பார்த்து இலட்சம் வீரர்கள் ஓராயிரம் வீரர்கள் தீப்போல சினம் கொண்டனர்.

மலை என்று சொல்லுமாறு உயர்ந்த தோள்களையுடைய வீரவாகு தேவரின் எதிரே போய், ''இந்தப் போரைச் சிறியவரான எங்களுக்கு அருள வேண்டும்'' என வேண்டினர். அவ்வாறு வேண்டிக் கொள்ளவும், வீரவாகு தேவர் அதற்குச் சம்மதித்து, ''அவர்களுடன் போர் செய்ய நீங்களே செல்லுங்கள்'' என்று சொல்ல, அவர்கள் போர் செய்யச் சென்றனர்.

இலட்சம் வீரர்கள், தம்மை எதிர்த்தவர்களின் பொன்மயமான தேர்களை வில்லில் வைத்து விடப்படுகின்ற நெடிய கொடிய அம்புகளை விடுத்து அழியச் செய்து, மூவாயிரம் கூட்டத்தவரைப் பூமியில் நிற்கும்படி செய்து, மலையிலே பொருந்திய சிங்கங்களைப் போல, பக்கத்தில் வந்த சேமத் தேர்களில் ஏறினர். வீரத்துடன் வாயுக் கூட்டங்கள் மரங்களின் கிளைகளை ஒடிக்கின்ற தன்மையைப் போல எம் இறைவனான குமரப்பெருமானின் தம்பியரான இலட்சரின் கைகளில் இருந்த விற்களை வலியப் பிடுங்கி முறித்துப் பூமியில் வீசி எறிந்தனர்.

பகைவர் விற்களைப் பிடுங்கி அழித்தவுடனே சினம் கொண்டு எம்பெருமானின் படைவீரர்கள் தம் விற்களைப் பிடுங்கியவரைத் துடிதுடிக்க அடித்தனர். உடனே அவர்களும் இடிஇடித்தாற் போல இவர்களை தாக்கினார்கள். பரந்த கரிய உப்புக் கடலும், பாற்கடலும் அலைகளை எதிர் எதிராக வீசி ஆரவாரம் செய்து எழுந்து போர் செய்யும் தன்மையைப் போல், ஒப்பில்லாத மற்போரினை இரண்டு பக்கத்து வீரரும் பகைத்துச் செய்தனர். ஆயிரவர் இத்தகைய மல் போரினைத் தொடர்ந்து நின்று செய்து, பழைய வன்மையை இழந்து, விசயன் ஒருவனைத் தவிர மற்றவர் எல்லாரும் தோற்றனர்.

தம்முடன் பொருந்திய ஆயிரவர் எல்லாரும் தோற்று ஓடவும், வெற்றி உடையவன் என்ற பெயர் கொண்ட விசயன், சினந்து ''பழியுடன் கூடிய அவுண மன்னன் சூரபன்மனின் மைந்தரை வென்று எமனது நகரத்துக்குச் செலுத்துவேன்' என்று இயம்பினான். சடையிலே பிறைச்சந்திரனை அணிந்துள்ள சிவபெருமான் அளித்த வன்மையுடையதும் கட்டப்பட்டதும் அழிவற்றதுமான வில்லானது அம்பறாத்தூணியுடன் இருந்தது. போரில் பின்னடையாத விசயன் அதனைக் கையில் எடுத்தான். விசயன் என்பவன் கையில் எடுத்த வில்லினை விரைவுடனே வளைத்து, ஒப்பற்ற காற்றைப் போல ஓடி அவர்களை வளைத்துக் கொண்டு அந்த அவுணரின் மீது அம்பு மழையைப் பொழிந்தான். காட்டில் உள்ள மரங்களை அறுப்பது போல் அவன் அம்பு மழை பெய்து பகைவரின் கைகளை அறுத்தான். கால்களை அறுத்தான். மார்புகளை அறுத்தான். சிலர் தலைகளை அறுத்தான். அவ்விசயனால் அறுக்கப்பட்ட ஆயிரவரின் உறுப்புகள் எல்லாம் பின்னும் நெருங்கி வந்து அவ்விடங்களிலே பொருந்தின. உணர்வும் உயிரும் வந்து கூடின. அதனால் அவர்கள் உயிர் பெற்று எழுந்தனர். வெற்றியுடைய விசயன் மேல் அவுணர் மலைகளைப் பொழிந்து போர் செய்தனர். மலர்கின்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனிடமிருந்து அவர்கள் பெற்ற வரத்தின் தன்மையால், தலையும் கால்களும், தோள்களும் துண்டாடப்பட்ட பின்பும் மீண்டும் வந்து கூடப் பெற்றனர்.

பிரசண்ட வாயுமோத விலகிச் சிதறிய கடலில் உள்ள நெடிய நீர் திரும்பவும் ஒன்றாகச் சேர்வதைப் போல், கழுத்துகளும், தோள்களும் கால்களும் அம்புகளால் துண்டுபட்ட அசுரர்கள் அவை பழைய படியே வந்து பொருத்தப் பெற்றனர். கொடிய இருளானது மின்னல் தோன்றியவுடனே

மறைந்து அது போனவுடன் பழைய நிலையை அடைந்து பின்னும் மீண்டும் இருள் வருவதைப்போலச் சொல்வதற்கரிய ஆற்றலையுடைய விசயன் எய்யும் அம்புகள் வருந்தோறும் அசுர மன்னவனின் மைந்தரான மூவாயிரவர்களும் இறந்து பின் உயிர் பெற்று எழுந்தார்கள். கைகளுடன் தலைகளும், கால்களும், மார்புகளும் அறுத்தவுடனே பழையபடி வந்து கூட, மூவாயிர வீரர்கள் விரைந்து உயிர் பெற்று எழுந்தார்கள். ''பகைவரான அவுணர் பல வரங்களை உடையவர். மாயங்களைச் செய்யும் தன்மை உடையவர். மிகவும் வலிமை உடையவர்' என்று சொல்லிக் கொண்டு நான் திரும்பிச் சென்றேன் என்றால், 'நான் தோல்வி அடைந்து வந்தேன்', என்று எம்முடையவர் என்னைத் தள்ளி விடுவர். அன்றியும் நான் புறமுதுகிட்டு ஓடவும் என்னைப் பகைவர் விட்டுவிடுவாரே!

மலையுடன் மாறு கொள்ளத்தக்க விசயன் இவ்வாறு அடைவதற்கரிய துன்பம் உடையவனாக மனதில் இதை நினைத்தவுடனே, இனி நான் உய்யும் வண்ணம் ஒரு செயல் உள்ளது என்று, துன்பக் கடலைக் கடக்கும் தன்மையுடைய அவன் உணர்ந்தான். ஆறுமுகங்களையுடைய எம் இறைவனே அல்லாது இப்போது எனக்கு வேறு துணையும் இல்லை. உண்மை இது! என்று, இழிகின்ற அருவி நீர் வழியும் கண்ணையுடைய விசயன் தெளிவு கொண்டு, பெருமானின் திருவடித் தாமரையை நினைத்தான். பெருமை பொருந்திய குமரப்பெருமானை உள்ளத்துள் தியானித்த போது, எண்ணியவற்றை எண்ணியபடியே எவர்க்கும் அருளும் அப்பெருமான் வானத்தில் விரைந்து விசயன் என்ற அவன் கண் எதிரில் தோன்றி சொல்லியருளலானார். "விசயனே! கேட்பாயாக! பகைவரை அழித்து விட நினைத்து அவர்களுடைய தலையும் கையும் துண்டித்தாய். அவ்வாறு நீ துண்டித்த உறுப்புகள் எல்லாம் மீளவும் அவர்களுக்கு உண்டாயின அன்றோ? அதன் காரணத்தை நீ அறியாய்! பெரிய போரில் வெற்றியில்லாது நிற்கின்றாய். மனம் தளர வேண்டியதில்லை."

"நீ பெற்ற பல படைக்கலங்களால் இவர்களைக் கொல்வாய் என்றாலும் இவர்கள் அழிய மாட்டார். விரைந்து ஆற்றல் சேர்ந்த ஒரு படையைச் செலுத்தினால்தான் இவர்கள் அனைவரும் மடிவர். இது நான்முகன் முற்காலத்தில் அவர்களுக்கு அளித்துள்ள வரமாகும்!" என்று வள்ளலான ஆறுமுகப் பெருமான் கூறி, இவ்வுலகத்தைப் படைத்த நான்முகனின் ஐந்து தலைகளுள் ஒன்றைக் கிள்ளி மற்றவர் கொண்டிருந்த மயக்கத்தை போக்கிய

எம் வைரவக் கடவுளின் வெற்றியுடைய படைக்கலம் ஒன்றை உண்டாக்கி விசயனுக்கு தந்து, "நீ பகைவர் அழிய இதனை இப்போதே விடுக!" என்று சொல்லிவிட்டுச் சென்றருளினார்.

அந்த விசயன் முருகப்பெருமான் கூறியருளிய உண்மைப் பொருளை உணர்ந்தான். உள்ளத்தில் மகிழ்ச்சி மிகப் பெற்றான். நாயினை வாகனமாக உடைய வைரவரின் வெற்றியுடைய கொடிய கணையை பெற்று மனத்தில் நிறைந்த அன்புடன் பூசை செய்தான். அவற்றையெல்லாம் அவுணர் படையுள் ஒருவனாக உள்ள 'உன்மத்தன்' என்பவன் அறிந்தான்.

"இப்போது இந்த விசயன் நம்மவர் எல்லாம் ஒருசேரப் படை ஒன்றினால் மாளும்படி கொல்வான் போலும்! அவ்வாறு அவன் கொல்வதற்கு முன்பு, 'மாயை' என்ற படைக்கலத்தால் இவனுக்கு உயிர் இறுதியை உண்டாக்குவேன்" என்று நினைத்து, அந்த உன்மத்தன் என்ற படைத்தலைவன் மாயை என்ற கணையை விடுத்தான்.

மாயை என்பவள் (பாட்டி) தந்த அந்த மாயைக் கணையை அந்த உத்தமன் விடவும், விசயன் அதைப் பார்த்துத் தீயை வெளிப்படுத்துகின்ற வைரவரின் திண்ணிய படையைச் செலுத்தினான். உடனே அப்படை சென்று, பரவிய இருளானது விரிய வருகின்ற மாயை என்ற கணையை அழித்து மூவாயிர வீரரையும் சூழ்ந்து கொன்று விட்டுத் திரும்பியது. ஓர் இமைப்போதிற்குள் மூவாயிரம் பேர்களும் போர்க்களத்தில் இறந்து போயினர். விசயன் அதனைக் கண்டு முருகப்பெருமானைத் துதித்து நின்றான். கலை நிறைந்த சந்திரனைக் கண்டு எழுகின்ற கடல் அலைகளைப் போலப் பூதகணத்தவர் எல்லாம் ஆரவாரம் செய்தனர். காவலையுடைய அவுணர் படையுள் இறவாமல் உயிர் பிழைத்திருந்தவை எல்லாம் அழகிய திசைகள் தோறும் விரைந்து தோற்று ஓடி விட்டன. தேவர்கள் மலர் மழை பொழிந்தனர். இவற்றையெல்லாம் அறிந்து தம் அரசனுக்கு அறிவிக்கத் தூதர் சென்றனர். தூதர் கதிரவனுக்குப் பகைவனான பானுகோபனின் தந்தை சூரபன்மனின் வீரக்கழல் அணிந்த அடிகளை வணங்கி "மன்னனே! உன் மைந்தர் மூவாயிரவரையும் இலட்சம் வீரருள் ஒருவனே விரைந்து கொன்று விட்டான். இது பொய்யன்று, உண்மை!" என்று சொல்ல, சூரபன்மன் மயங்கி விழுந்தான். அவ்வாறு மயங்கி விழுந்தவன் பதைத்துத் தளர்ந்து வெப்பமாகப் பெருமூச்சு விட்டு அசைந்து, விம்மி, பிளவுண்டாகுமாறு தரையைக் கையால் அடித்தான். மலையினின்று இழிகின்ற அருவியைப்

போல இழிகின்ற கண்ணீர் ஒழுக்குப் பெருகிடச் சுற்றியிருப்பவர்களும் புலம்பச் சூரபன்மன் துன்பத்துக்கு மேல் துன்பத்தை அடைந்தான்.

## 10. தரும கோபன் வதை

### (நாலாம் நாள் இரவு நிகழ்வது)

இறந்து முடிந்து போன மைந்தர் மூவாயிரவரை எண்ணி எண்ணித் துன்பம் அடைகின்ற சூரபன்மன் முன்பு, ஒப்பில்லாத நல்ல அறத்திற்குப் பகைவனான தருமகோபன் என்னும் தலைமை அமைச்சன் வந்து அவனது அடிகளை முறைப்படி வணங்கி எதிர் நின்று சொல்லத் தொடங்கினான். "எல்லையில்லாத செல்வமும் அழிவில்லாத ஆயுளும் அழியாத வளமையும் எங்கும் செலுத்தும் ஆணையும் 'இந்திர ஞாலம்' என்ற தேரும் இருக்க, மன்னவரே, தாங்கள் அறிவில்லாத தேவரைப் போல் வருந்துவது ஏன்?" என்று சூரபன்மன் மனத்தைத் தேற்றினான்.

தருமகோபன் இவ்வாறு தேற்றியபோது, சூரபன்மன் சற்றே தன் உள்ளத்தில் தேறி, துன்பத்தை ஒழித்தான். 'நானே போருக்குச் சென்று காலனைப் போலப் பகைவர் கூட்டத்தை விண்ணிற்குச் செல்லுமாறு ஏற்றிடுவேன்!" என்று சினம் கொண்டு சூரபன்மன் இருந்த இடத்தினின்று எழுந்து செல்லலானான். அவ்வாறு போருக்குப் புறப்பட்ட சூரபன்மனின் சிவந்த அடிகளை முறைப்படி வணங்கி, "மன்னர் பெருமானே! இன்றைய தினம் நீவிர் இங்கு இருப்பீராக! நானும் படையும் இப்போதே சென்று வலிய ஆற்றலையுடைய பகைவரை வளைத்து மிகவும் விரைவாகத் தாக்கி அழித்து வெற்றி பெற்றிடுவேன்." என்று தரும கோபன் என்ற அமைச்சன் வேண்டிக் கொண்டான்.

அமைச்சன் அவ்வாறு வேண்டிக் கொள்ள அவனும் மனம் திருந்தி அமைச்சன் தருமகோபனைப் போரிடப் புறப்பட அனுமதிக்க அவனும் "புண்டரீகம் என்ற பெயரையுடைய திக்கு யானையை விரைவாக இங்குக் கொண்டு வாருங்கள்" என்று தருமகோபன் ஏவலர்க்குச் சொன்னான். அவனது ஆணையை ஏற்ற ஏவலரும் விரைந்து சென்று காலில் பூட்டிய சங்கிலியை விலக்கி யானையைக் கொணர்ந்து தருமகோபன் முன் நிறுத்தினர். செலுத்துபவனின் உள்ளக் குறிப்பின்படி செல்லும் தன்மை

கொண்ட 'புண்டரீகம்' என்ற பெயரைக் கொண்ட யானைகளின் அரசன் மீது அறத்தை வெறுக்கும் கொடிய குணம் கொண்ட தருமகோபன் எல்லையில்லாத படைக்கருவிகளை எடுத்துக் கொண்டு அமைச்சர் பலரும் சூழ்ந்து வர, 'இந்திரன் இவன்தானோ!' என்று ஐயம் கொள்ளுமாறு போர்க்களம் நோக்கிப் போனான். தருமகோபன் தெருக்கள் பலவற்றை நீங்கிப் படையும் தானுமாகச் சென்று, ஆறு திருமுகங்களையுடைய வள்ளல் முருகப் பெருமானின் முழுமையான அருளைப் பெற்ற படையின் தலைவர் வீரவாகு தேவர் சினந்து நின்ற போர்க்களத்தினை அடையவும், அவ்வளவில் வீரக் கழலை அணிந்த பூதர்கள் எல்லாரும் 'பகைவர் போரிட வந்தார்!' என்று ஆரவாரம் செய்தனர். மலைகளைக் கையில் ஏந்தி ஆரவாரம் செய்து நின்ற பூதரையும், இலட்சம் வீரரையும், அவர்களைச் சூழ்ந்து நின்ற படைத்தலைவர் துணைவரையும், முன் நாளில் மகேந்திர நகரத்தை அழித்த வீரவாகு தேவரையும், அவர்களின் வலிமையையும் கொடிய தருமகோபன் பார்த்தான். பார்த்து, "இன்றைய தினம் நம் வாழ்க்கை அழிந்து விட்டதோ!" என்று நினைத்தான். இங்கு இது இவ்வாறு நிகழும்போது எங்கும் இருளின் கூட்டமும் இரவும் பகலும் மாலைக் காலமும் கலந்தது போல விளங்க, அந்தத் தருமகோபனின் அவுண வெள்ளமும் பூதகணத்தவரும் பொங்குகின்ற கடல் ஒலியைப் போன்ற ஆரவாரம் செய்து விரைவாகப் போரைச் செய்தனன். இலட்சம் வீரரும் வருந்தி வன்மை இழந்தார்கள். முற்பட்டு வந்த அமைச்சன் தருமகோபன் முதலியவரும் போரில் முயன்று நின்றனர். அப்போது அதைப் பார்த்துக் கொடிய ஆற்றலையுடைய வீரவாகுதேவரும் கதிரவன் போல் சினத்துடன் பகைவர்மீது அம்புமாரி பொழிந்தார். மிகவும் நீளமான அம்பை மிகவும் உயர்ந்த வீரவாகுதேவர் எய்த போது அவுணப் படையினர் துண்டு பட்ட கையுடையவராயும், பிளவுபட்ட தலைகளை உடையவராயும், அழியப்பட்ட உடலை உடையவராயும் ஆகினர். அமைச்சர் இறந்தனர். படைகளும் குறைந்தன. அவுணர் எல்லாரும் தளர்ந்தவராகித் தோற்று ஓடிப் போகவும், அழிவில்லாத பூதர்கள் அவர்களைப் பின் தொடர்ந்து சென்று அதட்டினர். துன்பத்தை அளிக்கும் அம்மாலைப் போதில் அவுணரைத் தொடர்ந்து சென்று பிடித்து அழிப்பதை மேற்கொண்டனர். தருமகோபன் வீரவாகு தேவரைப் பார்த்து, "நீயா வன்மையுடன் என்னைத் தாக்குவதற்கு வந்தாய்? நான் உன் உடலை அழிக்க எண்ணி நிற்கின்றேன். உன்னை நீ காத்துக் கொள்ளக் கூடுமானால் காத்துக் கொள்வாய்!" என்று கூறி தூண் போன்ற உயர்ந்த தோள்களையும் பொல்லாத தந்திரங்களையும் உடைய

தருமகோபன், முன்பே கையில் எடுத்துள்ள ஒப்பில்லாத கொடிய வில்லை வளைத்துச் செந்தேன் ஒழுக்கைப் போன்று காணப்படுகின்ற நாணியில் அம்புகளை வைத்து வீரவாகு தேவர்க்கு உடலில் வெளி இடமே இல்லை என்னும்படி அம்புகளை விட்டு மறைத்தான். வீரவாகு தேவர் அந்த அம்புகளை விலக்கி அவன் மார்புக்கு குறி வைத்து வேலை வீசினார். வேல் மார்பைத் துளைத்து வெளியில் போகவும், வலியவனான தரும கோபன் விம்மிதம் அடைந்து புகை வெளிப்படப் பெருமூச்சு விட்டு, மார்பில் ஒழுகிய இரத்த வெள்ளத்துடன் நினைவற்றவனாக இருந்தான். இருக்க, மிக்க வீரத்தையும் நிகரற்ற தன்மையையும் கொடிய இயல்பையும் உடைய அந்தப் புண்டரீகம் என்ற யானை தன் தலைவன் செயலை உணர்ந்து அறம் கிடந்த நெஞ்சம் கொண்ட வீரவாகு தேவரைக் கொல்லச் சென்றது.

எதிரே வந்த யானை மிக்க வன்மையுடைய வீரவாகு தேவரின் தேரைத் தனது கொம்புகளைக் கொண்டு முட்டிப், போர் செய்தவர் கைவிட்டுச் சென்ற ஒரு எழு ஆயுதத்தை எடுத்து, அந்த வீரவாகு தேவரின் தேரோட்டியை இறக்குமாறு அடித்தது. அதைப் பார்த்ததும் செந்தீயைப் போல வீரவாகு தேவர் சினம் கொண்டார். தனது தேர் அழியவும், வீரவாகு தேவர் பக்கத்தே குதித்துத் தனது ஒரு அழகான கையால் தன் மீது எதிர்த்து வந்த யானையின் கையைப் பிடித்து மதம் ஒழுகுகின்ற கன்னத்தில் அடித்து, விரைந்து எடுத்து மேல் உலகத்துக்குச் செல்லும்படி வீசினார். எடுத்து வீசியவுடன் அந்த யானை வானத்தில் சென்று திரும்பவும் போர் செய்ய வந்தது. அப்போது அதனைத் தருமகோபன் அறிந்து யான் யானையை இழந்தேனோ என்று அயர்ந்து யானையுடன் அணிந்துள்ள அணிகளும் மகுடமும் சிந்த விழுந்தான்.

விழுந்த ஒப்பற்ற அந்தப் புண்டரீகம் என்ற யானை மிகவும் அஞ்சி துடிதுடித்து வருந்தியது. அந்த யானையுடன் சென்ற அறிவற்ற தருமகோபன் எழுந்து வயிரம் பொருந்திய ஒரு தண்டை எடுத்துத் தன் பகைவன் மார்பில் படும்படி எறியவும், அவர் அதை நீண்ட தன் கையில் இருந்த வாளால் இரு துண்டாக வெட்டினார். வன்மையுடைய அந்தத் தண்டு அழியவும், மேலும் ஒரு வச்சிரப் படைக்கலத்தை எய்தான். அது வீரவாகு தேவரின் எதிரே வர, அதைக் கையில் பிடித்துப் புலியானது தான் கண்ட ஒரு கலைமான் எதிரே சென்றது போலச் சென்று தருமகோபனின் வன்மையான மார்பில் அடித்தார். அங்ஙனம் சினம் கொண்டு வீரவாகு தேவர் தரும கோபனின் மார்பில் அடித்த

போது, வேர் அற்று விழும் மரம் போல் மண் மீது அவன் விழுந்தான். வெற்றி மிக்க வீரவாகு தேவர், தம் ஒரு காலால் அவனை உதைத்தார். அவ்வளவில் தருமகோபன் விழுந்து இறந்தான். அவனுடன் துணையாய் வந்த அவுணப் படைகள் தோற்று ஓடின. குற்றம் பொருந்திய தருமகோபன் இறந்தான் என்ற சொல்லைக் கேட்டு, சூரபன்மன் முற்றிலும் சூழ்ந்து கொண்ட துன்பம் என்ற கடலுக்குள் மூழ்கி அழுது பெருமூச்சு விட்டு உடலும், உயிரும் துடிதுடித்திட, அங்கே எழுதப்பட்ட ஓவியம் உணர்வின்றி அசையாது இருப்பதைப் போலப் பேச்சற்று செயலற்று இருதான்.

## 11. பானுகோபன் வதை

## (ஐந்தாம் நாள் போர்)

என்னை இகழ்ந்து பிடித்துச் சிறையிலே வைத்த கள்வனான பானுகோபன் இன்று மடிந்து விடுவான். அவன் சாவதைக் காண்பதற்கு விரைந்து செல்வேன் என்று உள்ளத்தே எண்ணியவனைப் போல ஒளியையுடைய வெப்பமான கதிர்களை வீசிக் கொண்டு கதிரவன் உதயமானான். வேதநெறியை விட்டு விலகிய அவுணரின் மன்னன் சூரபனமன் இவ்வாறு மிகவும் துன்பம் அடைந்திருத்தலைப் பார்த்து அந்த இடத்தினின்றும் குருதி போன்ற கண்களையுடைய ஒற்றரில் ஒருசிலர் போய்ப் பானுகோபனை அடைந்து அவனுடைய அடிகளை வணங்கி இவற்றைச் சொல்லலானார்.

"இளங்கோவே! நீ முன்பு சிறந்த மாயை என்ற கணையை விடுத்துப் பன்னிரண்டு தோள்களையுடைய ஆறுமுகனின் தூதனை அவனுடன் வந்த படைகளுடன் கொன்று பழைய கடலுக்குள் இட்டாய். அவ்வாறு நீ செய்ததை அன்றே தேவர்கள் முருகனுக்கு எடுத்துக் கூறினர். வெவ்விய கண்களையுடைய யானை முகத்தையுடைய விநாயகருக்குத் தம்பியான முருகன், அவர்கள் உரைத்தலைக் கேட்டு, தன் கையில் இருந்த சிவந்த வேலினை அங்கிருந்தபடியே செலுத்த, அது அப்போது விரைந்து சென்று, ஆறு கடல்களையும் கடந்து போய்ப் பொங்கும் தூய நீரையுடைய கடல் நடுவினுள் புகுந்தது. அந்த வேலானது அந்தக் கடலுக்குள் சென்ற போது, நீ விட்ட மாயப் படையானது பின்னடைந்தது. அப்போதே தொலைந்தது.

உடனே அங்கு நெருங்கிய பூதக் கூட்டமும் வீரர் கூட்டமும் மிக்க திண்ணிய ஆற்றல் வாய்ந்த வீரவாகுவும் மயக்கம் நீங்கித் தெளிவு பெற்றவராக அங்கிருந்து எழுந்து நம் நகரத்தை அடைந்தனர். அப்போது அந்த வேலானது அவர்களிடம் அருள் செய்து விரைந்து திரும்பிய முருகவேளிருக்குமிடத்தை அடைந்தது. பின்பு இங்கு இந்தப் பெரிய நகரத்தைச் சுற்றிப் பகைவர் வன்மையுடன் போர் செய்யும் வண்ணம் இந்நகர மதிலுக்குள் புகுந்தனர். அரணை அடைந்த பகைவர் இந்த ஊரைத் தீக்கணை முதலியவற்றால் வருத்தவும், அதை உலகத் தலைவனான நின் தந்தை கேட்டுத் தன் அருகில் நின்ற இரணியன் என்ற நின் தம்பியையும், அக்கினிமுகன் என்ற நின் மற்றொரு தம்பியையும், மாறுபட்ட மற்ற மூவாயிரம் மைந்தரையும், தலைமை அமைச்சனான தருமகோபன் என்பவனையும் முறையே போரிட அனுப்பி வைத்தான். அவர்களும் வீரவாகுவாலும் மற்றவர்களாலும் இறந்தனர். இரணியன் அஞ்சி மீனாகக் கடலுக்குள் புகுந்து கொண்டான். ''நின் தந்தையான மன்னர் மன்னன் இவற்றையெல்லாம் கேட்டறிந்து உள்ளத்தில் சொல்வதற்கரிய துயர்க் கடலுள் மூழ்கிச சகிக்க மாட்டாது வருந்தியுள்ளான். இந்த நகரத்தில் இருந்த படைகள் யாவும் அழிந்தன. இவ்வளவு செய்த பின்பும் பகைவர் இங்கேயயே தங்கியிருக்கின்றனர்!'' என்று ஒற்றர், பானுகோபனிடம் கூறினர்.

ஒற்றர் சொல்லிய சொற்களைக் கேட்கவும் பானுகோபன் ''நம் பெரும் வாழ்க்கையெல்லாம் அழிந்தனவோ!'' என்று இரங்கி வருந்திக் கோபமும் துன்பமும் ஒன்றுக்கு ஒன்று என முற்பட்டுப் போர் செய்திட, செந்நிற மலை போன்ற தன் இருக்கையை விட்டு எழுந்து விரைவாகச் சென்றான். சென்று, அரச மாளிகையை அடைந்து, துன்பத்துடன் இருந்த சூரபன்மனின் மலர் போன்ற அடிகளைத் தன் தலை மீது கொண்டு வணங்கி, உள்ளார்ந்த அன்புடனே அவன் எதிரே நின்று ''அசுர மன்னவ! இதனை நன்றாகக் கேள்!'' என்று சொல்லத் தொடங்கினான். ''மாயை என்ற பாட்டியார் தந்த படைக்கலத்தால் நான் பகைவரை மயங்கச் செய்து நன்னீர்க் கடலில் இட்டேன். அதைத் தேவர்கள் முருகவேளிடம் உரைத்தனர். அப்போது அம் முருகன் தன் வேல் படையை அனுப்பித் திரும்ப அவர்களையெல்லாம் அழைத்துக் கொண்டார். அத்தகைய முருகனை வெல்வது என்பது கனவிலும் முடியாத ஒன்றாகும்.''

''மிகவும் நீண்ட காலம் ஆனாலும் முடியக் கூடிய செயல் ஒன்றை இடையில் விடாது முயன்று அதை அடைதல் நல்லவர்க்கு இயல்பாகும்.

இங்ஙனமின்றி உடலை வருத்தியும் தம்மால் முடியாத ஒரு செயலை இது முடியும் என்று எண்ணிக் கொண்டு அதைச் செய்வது மூடர்களின் இயல்பாகும். நீ ஆற்றல் வாய்ந்த மைந்தரை இழந்து விட்டாய். நால்வகைப் படைகளை உடையவன் என்ற உயர்வையும் இழந்து விட்டாய். என்னுடன் நீ ஒருவன் மட்டுமே இருக்கின்றாய். மேன்மையாக விளங்கிய நின் குலத்தை வேருடன் அழிக்க எமன் வந்திருத்தலையும் நீ அறிந்து கொள்ளவில்லை. பகையையே மேற்கொண்டிருக்கின்றாய். கொடிய போரைச் செய்ய வல்லவர் கிடைத்தால் நான் மனம் மகிழ்வேன். பகைவர் போருக்கு அஞ்சினேன் என்று நினைக்காதே! மன்னவ! இன்னும் நீ பல காலம் வாழ வேண்டும் என்னும் ஆசையால் இவற்றையெல்லாம் சொன்னேன். இனி உனக்கு உறுதியாக ஒன்றைச் சொல்வேன். பொன் உலகத்தவரான தேவரைச் சிறைவிட்டிடு. நீ அவ்வாறு செய்தால், கந்தவேள் நம்மிடம் கொண்ட சினத்தை விட்டுத் தான் வந்த இடத்துக்குத் திரும்பிச் செல்வான். அதன்பின் நின் செல்வங்கள் எல்லாம் அளவில்லாத காலம் நிலைத்திருக்கும்!'' என்று பானுகோபன் சொன்னான்.

சுடுகின்ற பெரிய வெப்பக் கதிர்களையுடைய கதிரவனைச் சினந்த பானுகோபன் உரைத்த சொற்களைக் கேட்டுத் தும்பை மலர் மாலையைச் சூடிய தன் தலையை அசைத்துக் தோள்களும் உடலும் குலுங்க, புன்சிரிப்புக் கொண்டு, பெருமூச்சுவிட்டு, ''நம்பியே, உன் ஆலோசனை நன்றாக இருக்கின்றது!'' என்று கேலி செய்து விட்டுச் சூரபன்மன் சொன்னான்.

''மகனே! நீ அச்சம் கொண்டாய் போலும். இரங்கத்தக்கவனே! நீ உன் மாளிகை நோக்கிச் சென்று அங்கு இனிதாக உறங்குவாயாக! அழிவில்லாத வரத்தைப் பெற்ற நான் இறக்கப் போவதில்லை. உன் மனத்தில் எனக்காக இரக்கப்பட்டு எதனையும் நினைக்க வேண்டியதில்லை. பகைவர் மீது போர் செய்யப் போவேன்!'' என்று சொன்னான். இதைக் கேட்ட பானுகோபன் ''தந்தையே! நீ சினம் கொள்ளாதே! நம் நகரத்தை வருத்தும் பூதகணங்களைக் கலையின் வன்மையுடைய வெற்றி பொருந்திய தோள்களையுடைய வீரவாகுவுடன் கொன்று உன் மனமும் மகிழுமாறு செய்வேன். என்னை விடை தந்து அனுப்புவாயாக!'' என்று கைகளைக் குவித்துத் தீயவனான சூரபன்மனின் அடிகளை வணங்கினான்.

அவ்வாறு வணங்கியவுடன் பதுமகோமளையின் கணவனான சூரபன்மன் சினம் தணிந்து மகிழ்ச்சி அடைந்தவனாக ''மகனே! உன் உள்ளம் போர்

செய்யத் துணிந்து விட்டது போலும்! நல்லது! ஐய, பகைவரை வெல்ல அணிவகுக்கும் படையுடனே போவாயாக!'' என்று சொன்னான். பானுகோபன், திருமகள் வாழ்கின்ற பல கோடி தெருக்களை நீங்கிப் பகைவரான பூதர் போர் செய்த போர்க்களத்தின் எல்லையை விரைவாக அடைந்து தன் உடன்பிறந்தவர் மூவாயிரவரும் மற்றவரும் மடிந்து கிடப்பதைப் பார்த்து 'ஆ', என்று இரங்கி மிகவும் வருந்தித் துன்பம் கொண்டு, விரைவாக வருகின்ற காற்றுடனே, கரிய மேகமானது பூமியின் மீது செல்வதைப் போல, அசுரனான பானுகோபன் கொடிய தனது வில்லை வளைத்துச் சினந்து கூரிய அம்புகளை எய்த வண்ணம் வந்தான். வரவும், வண்டுகள் மொய்க்கும் மலர் மாலை சூடிய வலியவனான பானுகோபனின் வருகையை, தடையில்லாமல் நின்று போரைச் செய்கின்ற பூதர்கள் பார்த்து, அவனுக்கு எதிரே விரைவாகச் சென்று பகைவர் கூட்டம் எல்லாம் அஞ்ச ஆரவாரம் செய்தனர்.

தொகுதியான சடையையுடைய நெற்றிக் கண்ணரான சிவபெருமானின் மைந்தரான வீரவாகுதேவரின் வெற்றி பொருந்திய வில்விட்ட கூரிய அம்புகள், பகைவரான அசுரர்களின் உடல்களில் படவும், அவர்களது கால்களும் தலைகளும் தோள்களும் புயங்களும் என்ற யாவும் துண்டுபட்டு விழுந்தன. பானுகோபன் தேரில் விரைவாகச் சென்று, கையில் பிடித்திருந்த தன் வில்லை வளைத்துப், போர் செய்வதற்கு மிக்க சினம் கொண்டு, மேலானவரான வீரவாகு தேவர் முன் நின்று ''குறைவில்லாத என் பெரும் படைகள் எல்லாம் அழியுமாறு செய்தாய். ஆதலால் இனி நீ உயிர் பிழைத்துத் திரும்பிச் செல்வது அரிதாகும். உன்னைக் கொல்வதாக வஞ்சினம் கூறி நான் வந்துள்ளேன்'' என்று வீரவாகு தேவரைப் பார்த்துப் பானுகோபன் உரைத்தான். பானுகோபன் இப்படிச் சொல்லவும் மிக்க வன்மையுடைய வீரவாகு தேவர், ''பானுகோபனே! இன்று நிகழ இருக்கும் போரிலே இறப்பவரையும், போர்த் தொழிலைச் செய்து வெற்றி பெறுபவரையும் இன்னார் என்று தேவர் காண்பர். இங்கு போர் செய்யாது பேசி நின்று காலத்தைத் தாழ்த்தாதே! போரிட வா!'' என்று உரைத்தார். பெருங்கோபத்தையும், கொடிய ஆற்றலையும் உடைய சூரபன்மனின் மகன் பானுகோபன், தான் வளைத்த வில்லிலே ஆயிரம் பெரிய அம்புகளைப் பூட்டி, மலர்மாலை சூடிய தோள்களையுடைய வீரவாகு தேவரின் மார்பைத் துளைக்கும்படி செய்தான். பானுகோபன் எய்த அம்புகள் மார்பில் புகுந்து முதுகின் வழி செல்ல, என்றும் இளமை ததும்ப விளங்கும் முருகப்பெருமானின் தம்பியான வீரவாகு தேவர்,

வருத்தத்துடன், தன் பெரிய வில்லை வளைத்துத் தேவர்கள் எல்லாம் போற்ற நாண் ஒலியை எழுப்பினார். நாண் ஓசையானது உண்டாகத் தட்டிப் பார்த்து, அந்த வில் நஞ்சினை வெளிப்படுத்தியதைப் போல அம்பறாத் தூணியில் இருந்த ஆயிரம் அம்புகளை எடுத்து, வில்லில் வைத்து, வன்மையுடைய கொடிய பானுகோபனின் தோள்களில் படுமாறு செலுத்தினார்.

வீரவாகு தேவர் செலுத்திய ஆயிரம் அம்புகள் அழகிய தோள்களில் பாயவும், வருந்தி மனம் நொந்து இமைப் போதில் கொடிய சூரபன்மனின் மகன் பானுகோபன், நல்ல அம்புகள் நூறால் தூய வீரவாகு தேவரின் வில்லைத் துண்டாக்கினான். வீரவாகு தேவரின் செம்மையான வில்லானது முறிந்திடவும் தேவர்கள் அதைப் பார்த்து அச்சம் சொண்டனர், வீரவாகு தேவர் ஒரு வேலைச் சினத்துடன் கொடிய தொழிலையுடைய சூரபன்மனின் மகன் பானுகோபனின் நெற்றியில் பாயும்படி வலிமையுடன் வீசினார். இரத்தமானது ஆறு போலச் சென்ற போது கொடியவனான பானுகோபன் ஓர் இமைப்போது நினைவு அற்றவனாகத் தன் தேரின் மீது நின்று, பின்பு பழைய வுணர்ச்சியுண்டாக அதைப் பார்த்து வீரவாகு தேவர் ஒப்பற்ற ஒரு வில்லை விரைவாக எடுத்து வளைத்தார்.

அச்சமயத்தில் நூறாயிரக் கொல்லும் கொடிய அம்புகளால், கருங்கடலில் தோன்றி வருகின்ற கதிரவனைச் சிறையில் இட்ட பானுகோபன், சிவந்த வேற்படையை உடைய முருகப் பெருமானின் தூதனான வீரவாகு தேவரின் தேரைப் பொடிப் பொடியாக்கி எல்லாக் கடலும் தோற்கும்படி இடியேற்றத்தைப் போல் ஆரவாரம் செய்தான். அவ்வாறு ஆரவாரம் செய்கின்ற போது, வீரவாகு தேவர் சினம் மிகப் பெற்றுச் சிறந்த வானிலே நின்று தன் வில்லைக் காலில் பொருந்த வளைத்துக் கூர்மையான ஓராயிரம் அம்புகளைச் செலுத்திக் கரிய உடலையுடையவனான பானுகோபனின் விரைவாக ஓடுகின்ற தேரைத் தூளாகுமாறு செய்தார்.

தேரானது தூளாகிட வானிலே நின்ற கொடியவரான பானுகோபன் பெருஞ்சினம் கொண்டு வில் வீரனான வீரவாகுதேவரின் மார்பில் ஐந்து நஞ்சு ஊட்டப்பட்ட கூரிய அம்புகளைப் புகுந்து அழுந்துமாறு செலுத்தி, மலையை விடப் பெரியதாக வளர்ந்துள்ள பெருந் தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்தான். மார்பில் புகுந்த நீண்ட அம்புகளால் உள்ளம் வருந்திய

வலிய வீரவாகு தேவர் தன் கையில் உள்ள வில்லில் பதினான்கு அம்புகளை வைத்து விட்டு, வரம் பெற்றவர்களுள் தமக்கு ஒப்பில்லாத சூரபன்மனின் மைந்தன் பானுகோபனின் தலையில் விளங்கிய முடியைத் தூளாக்கினார்.

பெருமையுடைய தன் முடியானது பொடியாகிட, வறியவனைப் போல விளங்கும், வலிமையுடைய சூரனின் மகனான பானுகோபன் பதினான்கு அம்புகளைச் செலுத்தித் தூண் போல விளங்கும் தோள்களையுடைய வீரவாகு தேவரின் மார்பில் கட்டப்பட்டிருந்த கயிற்றுடன் கூடிய கவசத்தைத் தூளாக்கினான். மார்பில் கட்டப்பட்டிருந்த கவசமானது தூளாகவும் தீயைக் கக்கும் நாகம் அணிந்த சிவபெருமானின் மகனான வீரவாகு தேவர் 'இது நல்லது' எனச் சிரித்து, இரண்டாய்ப் பிளவுபட்ட சந்திரனைப் போன்ற அகன்ற வாயையுடைய அர்த்த சந்திரக் கணையை விடுத்து மேகம் போன்ற கரியவுடலினனான பானுகோபனின் வில்லை ஒடித்தார்.

தீயவனான பானுகோபனின் போரிடும் முயற்சியை வீரவாகு தேவர் பார்த்து, தூய்மையான வாள் ஒன்றை எடுத்து, அவனது இடக் கையினை வெட்டித் துண்டு படுத்தினார் அப்போது அவன், 'நான் எனது மாயை என்ற பழைய கணையைச் செலுத்துவேன்' என எண்ணினான். அச்சமயத்தில் வீரவாகு தேவரும் அந்தப் பானுகோபனின் தலையை துண்டாக்கினார். வீரவாகு தேவர் வாளால் அவனை வெட்டவும் அவனுடைய தலையும் மலையைப் போன்ற தோள்களும் உடலும் விழுந்தன. கதிரவனின் பகைவனான பானுகோபன் வாழ்நாள் முடியப் பெற்றான். அவனது உயிரைக் கவர்ந்த எமன், வீரரான வீரவாகு தேவரைப் பாராட்டியபடி தெற்குத் திசையில் உள்ள தனது உலகத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

சூரபன்மனின் மகன் பானுகோபன் இறந்ததை முனிவர்களும் தேவர்களும் மற்றுமுள்ளவரும் பார்த்து மகிழ்வால் ஆடினார்கள்; பாடினார்கள்; ஆரவாரம் செய்தார்கள். "தன்னிடமிருந்த மாயை என்ற பழைய கணையால் நம்மை யெல்லாம் மயக்கி நன்னீர்க் கடலில் புகுத்தி வருத்திய பானுகோபனைக் கொன்று விட்டோம். நாம் உரைத்த வஞ்சினமும் முடிந்தது. இனி நம் இறைவன் முருகவேள் திருமுன்பு படையுடனே செல்வோம்! வருக!" என்று வீரவாகு தேவர் உரைத்தார்.

பேரொளி நிரம்பிய பாடி வீட்டிற்குள் புகுந்த புனிதரான வீரவாகு தேவர், பூத கணத்துடனும் தம்பியரோடும் சென்று, பக்தி மேலிட, ஆறுமுகங்களைக்

கொண்ட முருகப் பெருமானைப் பார்த்து அவருடைய திருவடித் தாமரைகளைப் பலமுறை விழுந்து வணங்கினார். முருகப் பெருமான் அதை யுணர்ந்து அவ்வீரவாகுவை நோக்கி, "நீ சூரபன்மனின் மகன் பானுகோபனுடன் போர் செய்து வருந்தி அங்கே அவனைக் கொன்றாய். ஆதலால் யாம் மகிழ்வு கொண்டோம். உனக்கு வேண்டியவற்றை விரைந்து கேள். யாம் அவற்றை அளிப்போம்!" எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

ஆறுமுகங்களையுடைய முருகப்பெருமான் கூறவும், அங்கு அவரது எதிரே நின்று வணங்கும் வீரவாகு தேவர், "எம் பெருமானே, நும் செயலின்றி யான் செய்தது ஒன்றுமில்லை. என்றாலும் அடியவன் எனக்கு இப்போது வரம் ஒன்றினைத் தந்தருள வேண்டும்!" என்று கேட்டார். "அழகு பொருந்திய குபேரனின் செல்வ வாழ்க்கையையும் நான் விரும்பேன். மேன்மையான இந்திரனின் அரச வாழ்வைக் கனவிலும் விரும்ப மாட்டேன். திருமால், நான்முகன் ஆகியோர் பெற்றுள்ள பதங்களையும் ஒரு பொருளாக நான் மதிக்க மாட்டேன். தங்களின் திருவடிகளின் மீது செலுத்தும் இடையறாத அன்பையே மிக வேண்டுவேன். அந்த நல்ல வரம் முக்தியை விட அரியதாகும். அதைத் தங்களை நினைத்து வழிபடும் முனிவரும் பெறுவதில்லை. சிறியவனான நான் அதை நீங்காது பெற்று உய்யும் வகையை அருள் செய்ய வேண்டும்" என்று சொல்ல, "எம் தந்தையான கந்தவேள் "அவ்வீரவாகுதேவரை நோக்கி "உனக்கு அதனை அளித்தோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். வீரவாகு தேவர்க்கு இத்தகைய வரத்தை அளித்தருளிப் பக்கத்தில் வந்து தொழுத தம்பியர்க்கும் நல்ல அருள் செய்து அவர்கள், தம்தம் இருப்பிடங்களுக்குச் செல்ல யாவர்க்கும் மேலானவரான முருகப் பெருமான் விடை தந்தருளினார். செந்நிறமான கதிரையுடைய சூரியனின் பகைவனான பானுகோபனைக் கொன்ற வீரவாகு தேவர் முதலியவர் மேலான கந்தவேளைத் தொழுது தம் இருப்பிடங்களுக்குச் சென்றனர்.

பானுகோபனுக்கு நேர்ந்த முடிவைக் கண்டு "இது இவர்கள் செய்ததானால், இனி இவர்கள் நம் மன்னனையும் கொல்வர்" என்று எண்ணிக் குதிரைப் பாகர் குதிரையின் மீது விரைவாகச் சென்றதைப் போல் தூதர் உளம் பதைக்க சூரபன்மனிடம் போய் நடந்தவற்றைக் கூற; சூரபன்மன் என்பவன் ஆழமான துன்பக் கடலுள் மூழ்கி 'ஓ' என்று கதறி விழுந்து பெருமூச்சு உண்டாகப் புரண்டான். "செய்த போர்ச் செயலில் எல்லாம்

வெற்றி பெற்று முடித்த என் மகன், இங்கு வந்த தூதன் ஒருவன் தாக்க மாண்டு விட்டான் என்றால் நான் இதுகாறும் ஆண்ட பேரரசின் ஆற்றல் நன்றாகவுள்ளது!'' என்று புலம்பியபடி போர்க்களம் போய் இறந்து கிடக்கும் மகனின் தலையையும் மார்பையும் சிவந்த கையையும் முன் இருந்தது போல உடல்களின் அவ்விடங்களில் பொருத்திப் பார்த்துக் கலங்குவான். ''என் உயிரே, நீ இன்னும் இருக்கின்றாயோ!'' என்று புலம்புவான்.

சூரபன்மன் மயங்கி விழுவான். கையை நெரிப்பான், தன் மகனைக் கருணையுடன் பார்த்து அழுவான்; விழுவான்; தளர்வான்; புரள்வான்; வாயில அடித்துக் கொள்வான்; தரையிலே உருள்வான்; பெருமூச்சு விடுவான்; வியர்ப்பான். மன்னர்க்கெல்லாம் மன்னவனான சூரபன்மன் இவ்வாறு துன்பத்தை அடைந்து வருந்தினான். அவனது அச்செயலை அழியாத மகேந்திர நகரத்தினுள் காவலுடன் கூடிய அரண்மனைக்குள் இருந்த பானுகோபனின் தாயான பதுமகோமளை என்பவள் கேட்டாள். துன்பம் அடைந்தாள். பதுமகோமளை நிலத்தில் விழுந்து நீண்ட கூந்தல் அவிழ சோர்ந்த கைகளை உடையவளாயும் இரத்தம் வடியும் கண்ணை யுடையவளாயும், வயிற்றில் அடித்துக் கொண்டு ஆற்ற முடியாத துன்பம் கொண்டவளாயும், வலையில் அகப்பட்ட மான்போல் வருந்தினாள்.

## 12. சிங்கமுகாசுரன் வதை

புலம்பி அழுத சூரன் மனம் தேறி 'என் தம்பி சிங்கமுகனை அழைத்துக் கொண்டு வருக' என்று ஆணையிடவும் அதை ஒற்றர் கேட்டு, அவனை வணங்கிச் சென்று, மனத்தில் நினைக்கின்ற நினைப்பை விட விரைவாகச் சென்று, வடக்குக் கடலை அடைந்து அங்கு உள்ள (சிங்கமுகாசுரனின்) ஆசுர நகரத்தை விரைந்து அடைந்து (அவனது) அரண்மனைக்குள் போய்த் தலைகள் ஆயிரமுடைய சிங்கமுகாசுரனைப் பார்த்தனர். அம்பை விட விரைவாகச் செல்லக்கூடிய ஒற்றர் சென்று சிங்கத்தின் ஆற்றல் பொருந்திய முகத்தையுடைய சிங்கமுகாசுரனைக் கண்டு, ''உன் தம்பியான தாரகாசுரனைக் கிரவுஞ்ச மலையுடன் கூரிய முனையையுடைய வேலால் இவ்வுலகத்திலேயே வந்து அழித்தவனான கந்தவேள் நம் மகேந்திர நகரத்துக்கு செந்தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன் முதலான தேவர்கள் சூழ வந்து சேர்ந்துள்ளான். அவ்வாறு அவன் வந்த போது, அறிவுடைய

தருமகோபன் முதலான அமைச்சரும், வச்சிரவாகு, மூவாயிரவர், பானுகோபன் முதலானவர் சென்று போரிட்டு மடிந்தனர். சூரபன்மனின் ஒரு மகனான இரணியன் என்பவன் மட்டும் போரில் தோற்று ஓடிக் கடலில் போய் மறைந்துள்ளான். எம் மன்னன் சூரபன்மன் அங்கே இருக்கின்றான். இதுவே அங்கு நடந்தது'' என்று தூதர் உரைத்தனர். முன் நிற்கும் தூசிப்படையுடன் நான்கு வகையான படைகளும் நெருங்கி வந்து சேரவும் குற்றம் பொருந்திய சிங்க முகத்தையுடைய சிங்க முகன் பார்த்து, தீயைப் போன்ற அசுரர் பலர் பக்கத்தில் சுற்றி வர, ஒளியுடைய அழகிய பெரிய தேர் ஒன்றின் மீது ஏறினான். சிங்கமுகன் தேரில் ஏறியவுடன் அவனுடைய படைகள் ஆரவாரம் செய்தன. முயற்சியுடைய வெற்றி வாய்ந்த குதிரைகள் பேரொலியைச் செய்தன. விளங்கும் துளை பொருந்திய கைகளையுடைய யானைகள் கர்ச்சித்தன. மணிகள் ஒலித்தன. தேர்கள் இரைச்சல் இட்டன.

எப்போதும் தாழ் இடுதல் இல்லாத அழகிய பொன்னால் இயன்ற தலைநகரத்தின் தலை வாயிலுக்கு வந்து, தான் ஏறி வந்த பொன் தேரை விட்டு இறங்கி, படையில் உள்ள தலைவர் யாவரும் வணங்க அரண்மனைக்குள் புகுந்து சூரபன்மனின் பெரிய அரண்மனைக்குச் சென்று கொலு மண்டபத்தை அடைந்த சிங்கமுகாசுரன், தன் தமையனின் திருவடிகளில் தலை படும்படியாக வைத்து அன்புடனே கூப்பிய கையுடன் வணங்கினான்.

அழிவில்லாத சூரபன்மன் நடந்ததைச் சொல்லவும், மிக்க சினம் கொண்ட சிங்கமுகன் கேட்டு அறிந்து, உள்ளத்தால் துன்பமானது உண்டாகத் தன் தமையனான சூரபன்மனின் சிறந்த அடிகளை வணங்கி நின்று ''அந்த முருகனின் படைகள் போர் செய்ய, அதனால் என் மைந்தர்கள் இறந்தனர். தலைமை அமைச்சனான தருமகோபனும் இறந்து போனான். படைகளும் அழிந்தன. இரணியன் என்ற பெயரையுடைய மகன் ஓடிக் கடலில் புகுந்து கொண்டான். வளமையான தோள்களையுடைய மைந்தனையும் நெடுங் காலமாக இருந்து வந்த அமைச்சர்களையும் உறவினர்களையும் மற்றும் உள்ளவர்களையும் நீ இழந்திருக்கின்றாய். உன் உள்ளத்தின் எண்ணமானது அற்பமானது. அற்பமானது!''

''ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனை சிறுவன் என்று எண்ணினாய். விளைவை நீ அறிந்து கொள்ளவில்லை! என் சொல்லானது உனக்கு நஞ்சாக ஆயிற்றே மேனாள் விதியை எவரே வெல்லும் தன்மையுடையவர்? முருகன் என்ற ஒருவனை நான் வென்று விட்டால்

இங்கே வந்து உன்னைக் காண்பேன். அவ்வாறு முருகப் பெருமானை வெல்லாது போனால் எல்லாரும் இறந்து படுவர் நிச்சயம். ஐயனே! இனி நின் மனதுக்குக் தோன்றியவாறு செய்க!'' என்று கைகூப்பிச் சூரபன்மனை வணங்கிப் பின் அங்கு ஓர் இமைப்பொழுதும் நில்லாது, உடனே திரும்பி, நெருங்கிய படைகள் சூழ்ந்து வரத் தன் நகரத்தில் உள்ள இருப்பிடத்தை அடைந்தான்.

அவ்வாறு சென்ற சிங்கமுகாசுரன் சோறான மேருமலையையும், அதன் அருகில் சூழ்ந்து கிடந்த ஊன் மலையையும், அளவில்லாத இரத்தம், தேன், பால், தயிர், மது முதலான பல கடல்களையும் உண்ணத் தொடங்கினான். பின்னர் சிங்கமுகன் முன்னம் தான் அணிந்திருந்தனவாகிய பழைய அணிகளைக் கழற்றி எறிந்து, வளமை வாய்ந்த அழகிய மாட்சியான புதிய அணிகளை, விளங்கும் கதிரவர்கள் மறைத்தால் உடனே வேறு கதிரவர்கள் உதிக்குமாறு அணிந்து கொண்டு, தண்டையும், சக்கரத்தையும், சிவபெருமானால் அளிக்கப் பெற்றுள்ள சூலத்தையும், வச்சிரம் முதலிய தெய்வக் கணைகளையும், தன்னைப் பெற்ற மாயை என்பவள் கொடுத்த வன்மையுடன் கூடிய பாசத்தையும் கையிலே எடுத்துக் கொண்டான். கைகளின் இடம் எல்லாம் ஒளிவீச மற்ற எல்லாவிதமான ஆயுதங்களையும் பின்னர் எடுத்துக் கொண்டு பத்து நூறாயிரம் குதிரைகள் கட்டிய ஒப்பில்லாத சித்திரமயமானதும் மணிகள் அசைவதும் உயர்ந்ததுமான ஒரு தேரில் ஏறினான்.

விலங்குகளில் சிறந்த சிங்கத்தின் வெய்ய முகம் போன்ற முகம் கொண்ட வீரன் பெருமை பொருந்திய நகர வாசலை அடைதலும் உடனே, அவனுடன் போருக்குச் செல்ல வேண்டிய நான்கு வகைப் படைகளும் வந்தன. அவை ஒரு நூறாயிர வெள்ளமாகும். பகைவரின் உயிரைப் பறிக்கும் சிங்கமுகன் பெரும் படையுடன் செல்வதைப் பார்த்து தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனும் இந்திரனும் மற்றத் தேவர் அனைவரும் அஞ்சி நடுங்கினர். சிவந்த ஒளியையுடைய அத்தேவர்கள் மார்பிலே வியர்வை உடையவர்களாய் உடல் இரைக்க விரைவாக ஓடி, விசுவகன்மனால் அமைக்கபட்டிருக்கின்ற வீடு என்ற கோயிலுள் தேவர்கள் நெருங்கியிருக்கின்ற சிற்சபையில் எழுந்தருளியுள்ள, பாவிகளால் அடையப்படாத வேலவனான முதல்வன் எதிரில் போய்ப் பாத தாமரைகளை வணங்கி நின்று சொல்லலானார்.

"இறைவரே! இங்கு வருகின்ற சிங்கமுகன் பெரிய ஆயிரம் தலைகளை யுடையவன். அன்றியும் இரண்டாயிரம் அழகான கைகளையுடையவன். ஆயிரத்து எட்டு அண்டங்களையும் வென்றவன். ஆயிரம் யோசனை உயரமான உடலை உடையவன். எவர்க்கும் உள்ளத்தாலும் எண்ணுவதற்கரிய வஞ்சமும் மாயமும் என்ற இவற்றில் இவன் வல்லவன். அளவில்லாத ஆற்றலையுடைய இவன் இந்த உலகம் எல்லாம் இறந்தாலும் அரிய உயிர் அழியாத தன்மை கொண்டவன். பாம்பை அணிந்துள்ள மேலான இறைவனான சிவபெருமான் முன்காலத்தில் தந்ததும், அளவில்லாத பகைவரைப் பகைத்து அவர்களின் உயிரை உண்டு இரத்த வெள்ளத்தில் முழுகியதுமான ஒப்பில்லாத சூலத்தை எடுத்தவன். இவன் எட்டுத் திசைகளையுடைய உலகத்தையும் ஏழு பாதங்களையும் இவையல்லாதுள்ள சுவர்க்கம் முதலான மேலிடம் எல்லாவற்றையும் தன் ஒரு கையினால் எடுத்து உண்டு உமிழ்கின்ற ஒப்பற்ற வன்மையுடையவன்."

"எல்லையில்லாத படைக் கடலானது தன்னைச் சூழ, கொடிய ஆற்றலுடன் பெரும் போர் செய்வதற்காக இவன் இங்கு வந்துள்ளான். இவன் உயிரை அழித்து, எம்பெருமானே, எங்களையெல்லாம் பாதுகாத்தருள வேண்டும்!" என்று நான்முகன், இந்திரன், முதலான தேவர்கள் எல்லாம் வேண்டிக் கொண்டனர். நான்முகன், இந்திரன், முதலியவர் சொன்னதைக் கேட்டு உணர்ந்த ஆறுமுகப் பெருமான், தன் பக்கத்தில் நின்ற குற்றம் இல்லாத வாயுதேவனைப் பார்த்து, "நம் தூய தேரைக் கொண்டு வந்து இங்கு முன்னால் நிறுத்து!" என்று சொன்னார்.

கூர்மையாகத் தீட்டப்பட்ட வேலையுடைய செங்கையுடைய முருகப் பெருமானின் பக்கத்தில் நின்ற வெற்றியுடைய தோளையுடைய வீரவாகு தேவர் அப்பெருமான் உரைத்ததைக் கேட்டு அவர் திருமுன்பு சென்று திருப்பொற்பாதங்களில் வீழ்ந்து வணங்கி "தமக்கு ஒப்பில்லாத வெற்றி யுடைய வீரர்களும் முற்பட்ட படைகளும் சூழ, நான் சென்று பகைவனின் உயிரைக் குடித்து இங்கு வருவேன். ஆதலால் என்னைப் போருக்குப் அனுப்பியருள வேண்டும்!" என்று வீரவாகு தேவர் வேண்டிக் கொண்டார். ஆடவருள் மேலவரான முருகப் பெருமான், வீரவாகுதேவர் உரைத்த அச்சொல்லைப் புன்முறுவலுடன் கேட்டு, "இறப்பதற்காக வந்திருக்கும் சிங்கமுகனான பகைவனின் கொடிய போரை உனக்குத் தருமாறு வேண்டினாய். நல்லது! உன்னை அனுப்புகிறோம், இங்குள்ள படைகளுடனே முன்னால் நீ போருக்குச் செல்வாயாக!" என்று அருள் செய்தார்.

முருகப்பெருமான் இவ்வாறு அருளவும், வீரவாகு தேவர் எழுந்து கைகூப்பி வணங்கி, வெற்றி கொள்கின்ற பூதப்படையாளர் துணை சூழ, அந்த மன்றத்தை விட்டு நீங்கி அழகிய கடைவாயிலை அடைந்து ஒன்றிய தன் பாசறையான மாளிகைக்குள் சென்றார். மேன்மையான தெய்வப் பெரும் படைகளை எல்லாம் ஒருசேரவே எடுத்துக் கொண்டு தும்பை மாலையைப் பூண்டு சிவந்த வானத்தைவிடச் சிவந்த ஒப்பில்லாத தேரில் ஏறி விரைவாக வாயிலுக்கு வந்தார். கண்டவர் எல்லாரும் வியப்பை அடையவும், ஆயிர வெள்ளம் பூதப்படையினர் அப்படையின் தலைவர்கள் தம்முடனே சூழ்ந்து வரப் போர்க்களத்தின் எல்லையை வீரவாகு அடைந்தார்.

அப்போது சிங்கமுகன் என்ற கொடியவனின் படையும் வந்து நெருங்கியது. பூதப்படையும் அப்போது ஆகாயக் கங்கையானது கடலின் எதிரில் சேர்வதைப் போல, வந்து எதிர்த்தது. இவ்வாறு நடந்த போரில் அசுரரில் சிலரும் பூதப்படையினரில் சிலரும் வரங்களை இழந்தனர். வன்மைகளை இழந்தனர். வெற்றியுடைய கால்களையும், கைகளையும் இழந்தனர். தோள்களான மலைகளை இழந்தனர். அணிகள் பொருந்திய மார்புகளை இழந்தனர். மணிகள் பதித்த முடிகளை இழந்தனர். தலைகளை இழந்தனர்.

சினம் கொண்ட துன்முகன் தனது பெரிய வில்லை வளைத்துக் கூர்மையான ஒப்பில்லாத ஆயிரம் அம்புகளை ஒரு தொகையாக எய்யவும், அவன் எய்த அம்புகள் இவ்வளவு என்று மதித்து, வீரவாகு தேவர் தன் ஒப்பில்லாத வில்லை வளைத்து விரைவாகப் பெரிய வன்மை பொருந்திய ஆயிரம் அம்புகளைப் பகைவன் எய்த அம்புகளை அழிக்குமாறு எய்தார். ஆயிரம் அம்புகளால் வீரவாகு தேவர் துன்முகன் எய்த ஆயிரம் அம்புகளை அழித்து, அந்தக் கொடியவனின் வில்லை ஏழ் அம்புகள் எய்து அழித்து, அவன் அணிந்திருந்த கவசத்தையும் ஓர் அம்பால் அழித்து, அளவற்ற அம்புகளை உடல் முழுவதும் எய்தார். வீரவாகுதேவர் விட்ட அம்புகள் உடலைப் பிளக்கவும், அந்தப் பிளவுகளினின்று ஒழுகிய இரத்தம் வெள்ளம் போல் ஓசையுடன் ஓடவும், கொழுவிய தீயைப் போன்ற துன்முகன் இறந்தவனைப் போல் மயங்கி விழுந்தான்.

அவ்வாறு பலவித எண்ணங்களையுடையவனாக நின்ற துன்முகன் மாய மந்திரம் ஒன்றை மனத்தால் நினைத்து, அதன் தேவதையை தியானித்து, முறைப்படி செபித்து, சக்கரம் முதலான உறுப்புகளையுடைய தேர்மீது

இருப்பதை விடுத்து வான் வழியாகச் சென்றான். மனித உடலையும் சிங்க முகத்தையும் உடைய வன்மையானவனான கொடிய சிங்கமுகன், நாம் இவ்வாறு இருந்தால் இப்போதே நம் படைகள் அனைத்தும் அழியும் என்று படைகளை முன்பக்கத்தில் இட்டு, நாம் பின்பக்கத்தில் நிற்பதால் பயன் இல்லை என்று எண்ணித் தான் நின்ற இடத்தினின்றும் முன்நோக்கி சென்றவன், தன்னைப் பார்த்துப் போர் செய்வதற்காக எதிர்பட்ட பூதரைப் பார்த்துச் சினந்தான். பூதப்படையினர் சிங்கமுகன் மீது படும்படி எறிந்த மலைகள் ஒன்றுடன் ஒன்று மோத, அதனால் உண்டான தீப்பொறிகள் திக்குகள் தோறும் தீப்பொறிகளாக அடைந்தன. அதனால் உயிர்க் கூட்டங்கள் புகைந்தன; பொரிந்தன; மறித்தன; இவ்வாறு அழிந்தன.

பகைவரைக் கொல்லும் ஆற்றல் மிக்க பூதர்களில் பலர் சிங்கமுகன் செய்த கொடிய போராலே கை அறுபட்டனர். பலர் பகைவரைக் கொல்கின்ற திண்ணிய தோள்கள் அறுபட்டனர். பலர் தலை சிதறப் பெற்றனர். பலர் காதற்றவர் ஆயினர். பலர் பொன் மாலை சூடிய மார்பும் பிளந்து கீழே விழுந்து புரள்வர். பல பூதர்கள் ஒழுகிய இரத்த வெள்ளத்தவராய் மிக்க துன்பம் அடைந்தனர். பலர் இறந்து பட்டனர். அங்ஙனம் இறந்தவர் உடலினின்று வேறுபட்ட தலையினரான பூதருள் பலர் கவந்தமாகி அங்குமிங்கும் உலாவிக் கூத்தாடித் தொழிலைச் செய்தனர். கருவில் வந்து சேர்ந்த உயிர்கள் எல்லாம் அழிகின்ற ஊழிக்காலத்தில் அந்த உயிர் அனைத்தையும் பிரளய காலக்கனி உண்பது போலப் போர் செய்ய வந்து நின்ற ஒப்பற்ற அழியாத சிங்கமுகன் ஒருவனே பூதர் எல்லாரையும் கொன்றான்.

தேரைவிட்டு இறங்கிச் சென்ற சிங்கமுகன் சிலரது தேர்களை எடுத்து ஒன்றின் மீது ஒன்றாக அடித்தான்; தேர்களை எடுத்து ஒடித்தான்; சிலருடைய தேர்களை உதைத்தான்; சிலரின் தேர்களை பொடியாக்கினான்; சிலர் தேர்களை பூமியுள் புக அமுத்தினான். சிங்கமுகன் இவ்வாறு பூதர் தேர்களை அழித்ததும், இலட்சத்து வீரர்களும் தம் தம் உயிர்களை மட்டும் சுமந்து கொண்டு விற்களுடன் அம்புகளும் மற்றப் படைக்கலங்களும் மானமும் உடன் வன்மையும் இழந்து புறமுதுகிட்டனர். இதனை அப்போர்க்களத்தில் நின்ற வீரவாகு தேவர் பார்த்தார்.

வீரவாகு தேவர் எய்த அம்புகளில் குதிரைக் கூட்டம் முழுவதும் அழிந்தன. அகன்ற பெரிய தேர்கள் சிதைந்தன. ஆண் யானைகளும் பெண் யானைகளும் இறந்தன. எண்ணில்லாத அசுரர்கள் மடிந்தனர். பிணமலைகள்

மிகுதியாயின. விளங்கும் பேய்களும் நெருங்கின. அலைகளுடன் கூடிய இரத்த வெள்ளமும் திரையுடைய கடலை அடைந்தது.

இவ்வாறு அசுரர் படைகள் அழியுமாறு வீரவாகுதேவர் போரிடவும், அதைப் பகைவரைக் கொல்லும் கூர்மையான வேலையுடைய சிங்கமுகனின் மைந்தரும் பஞ்ச மூர்த்திகளும் வெல்லக்கூடிய பேராற்றல் படைத்தவர்களுமான 'சதவீரர்' என்பவர் பார்த்தனர்.

தேரோட்டும் பாகர்க்குரிய நூலைக் கற்று அதில் வல்லவரான அத்தேரோட்டி குதிரைகளைத் தட்டி எழுப்பி வானளாவ உயர்ந்த பெரிய தேரினைச் செலுத்தினான். அத்தேரில் சிங்கமுகன் வீரவாகு தேவரைக் குறித்துவரவும், நாயகத் தன்மையில் சிறப்புடைய முருகப்பெருமானின் திருவடித் தொண்டரான வீரவாகுதேவர், இவனது வருகையைப் பார்த்து ஏற்பட்ட மகிழ்வால் தன் தேரை விரைவாகப் பகைவன் தேருக்கு நேராக விட்டுச் சென்றார்.

நீண்ட இலை போன்ற வடிவையுடைய சிங்கமுகன் எறிந்த சூலமானது, குற்றமற்ற முருகப்பெருமானுக்குத் தம்பியான வீரவாகுதேவர் எய்த அம்புகளை அழித்துத் தம் எதிரில் வரவும், வீரவாகு தேவர் அதைப் பார்த்து, வருந்தி மேலும் சுடரையுடைய சிறந்த ஆயிரம் அம்புகளைத் தொடுத்தார். அவ்வாறு வீரவாகுதேவர் தொடுத்த சமயத்தில், எதிர்பட்டு வருகின்ற அந்த அம்புகளை ஊன் பொருந்திய முனையுடைய சூலமானது அழித்தது. பகைவரும் துதிக்கும் வீரவாகு தேவர் மீது அச்சூலமானது தேவர்களும் மருளும்படியாக விரைந்து சென்றது. வீரவாகுதேவர் மீது செல்லும் சூலத்தைப் பார்த்து இலட்சம் வீரரும் நடுக்கம் கொண்டனர். எட்டுப் படைத் தலைவரும் வருந்தி கலக்கம் கொண்டனர். பூத கணத்தவர் அனைவரும் துன்பம் அடைந்தனர். தேவரால் தரப்பட்ட இந்தத் தெய்வத் தன்மை கொண்ட சூலமானது, விலக்குவதற்கு அரியதோ? என்று பெருமூச்சு விட்டு விம்மினார்கள்.

வலிமை நீங்காத வீரவாகு தேவர் தாம் செலுத்திய அம்புகளை அழித்து வருகின்ற அந்தச் சூலத்தின் ஆற்றலை உணர்ந்து, நீண்ட மேகம் போன்ற நீல நிறக் கழுத்தையுடைய சிவபெருமான் தமக்குத் தந்தருளிய வாளை எடுத்து அச்சூலத்தை இரு துண்டாக வெட்டினார். சிங்கமுகன் வீசிய சூலமானது அழிந்திடவும், வீரவாகு தேவரின் துணைவராக உள்ளவரும்

இவ்வுலகத்தை சேர்ந்துள்ள பூதர்களும் மிகவும் மகிழ்ச்சியில் திளைத்தார்கள். பாற்கடலினின்று வந்த ஆலகால நஞ்சு வருத்திடவும், அதனைக் குற்றமற்ற சிவபெருமான் உண்டு தங்களைக் காப்பாற்றிய அக்காலத்தைப் போலத் தேவர்கள் எல்லாம் துன்பம் நீங்கி மகிழ்வு அடைந்தனர்.

தாம் கையில் கொண்ட அந்தச் சிவக்கணையை, வீரவாகு, மந்திரத்தினை, விதித்த விதிப்படி உச்சரித்து மனத்தில் பூசையைச் செய்து, "வானத்தில் உள்ள தேவர்க்கும் திருமால் நான்முகனுக்கு வெல்ல இயலாத அழகிய தோளையுடைய சிங்கமுகனைக் கொல்வாயாக!" என்று வணங்கி எய்தார். இருள் அடைந்த அறிவை உடைய சிங்கமுகன் தான் முன்பு தவம் செய்து புகழ் பெற்ற மூன்று கண்களையுடைய சிவக்கணையை ஒளியுடைய மணிக் கடகம் அணிந்த ஒரு கையில் இருந்ததைச் சொல்லப்படும் மந்திரத்தினால் வணங்கிச் செலுத்தினான்.

சிங்கமுகன் செலுத்திய சிவக்கணையும், முன் வீரவாகு தேவரால் செலுத்தப்பட்ட சிவக்கணையும் நெருங்கி எதிர் எதிர் பொருந்தி, சமமான இரண்டு தலைவர்கள் ஒருவரை ஒருவர் காண வேண்டும் என்று விருப்பத்தால் விரைந்து அன்பு கலந்து பிரிவதைப் போல், தம்மைச் செலுத்தியவரிடமே திரும்பி வந்து சேர்ந்தன. "நான் எய்கின்ற அம்புகளால் உடலில் இவன் புண்படவில்லை. சிவக்கணை போன்ற தெய்வ ஆயுதங்களாலும் அழிவைப் பெற மாட்டான். எனவே கொடிய சிங்கமுகன் முருகப்பெருமானின் சிவந்த கைப் படைகளினால் அல்லாது இறவான். கொடிய இவனது உயிரை அழித்தல் முடியாது. எனினும் கொடிய போரைச் செய்து, இங்கு இவனது வானை அளாவியுயர்ந்த தேரையும் படைக் கலங்களையும் படையினரையும் விரைவில் அழிப்பேன்!" என்று வீரவாகு நினைத்தார்.

வீரவாகு தேவர் இவ்வாறு நினைத்துப் பதினான்கு அம்புகளைச் செலுத்தி ஒப்பில்லாத சிங்கமுக முடையவனது தேரை ஓட்டுபவனது அழகிய தலையை அறுத்துக் கொன்றார். தேரோட்டியின் தலையானது கீழே விழுவதற்கு முன்னம், சூரபன்மனுடன் பிறந்த சிங்கமுகன் சினந்து ஓர் தண்டை ஓர் இமை மூடும் பொழுதிற்குள், மின்னலைப் போலச் செலுத்தவும், அது கட்டப்பட்ட வீரக்கழலை அணிந்த இளையவரான வீரவாகு தேவரின் மார்பிலே பாய்ந்தது. வீரவாகு தேவரின் மிக அகன்ற மார்பில் புகுந்த தண்டானது பல கணக்கிடை வெளிகளில் சூரியன் ஒளி

புகும் போது காணப்படுகின்ற சிறிய அணுத்துகளைப் போலச் சிதைந்து புகை போல் ஆகி அகன்றது.

தோள் ஆற்றலால் வெற்றியுடைய வீரவாகு தேவர் சினம் கொண்டு, விரைந்து ஓடுகின்ற நீண்ட அம்புகள் ஓராயிரம் செலுத்திப் பெரிய ஆற்றல் வாய்ந்த சிங்கமுகன் ஏறிய உயர்ந்த அழகிய பெரிய தேரை அழித்தார்.

''உயிருடன் ஒட்டிப்போர் செய்கின்ற பகைவர்களை ஒரு சார்பாகக் கட்டிக் கொண்டு அவர்களின் அரிய உயிரை உண்டு விரைவாகச் சென்று அடைந்து பழைய கதிரவன் உதிக்கின்ற மலையின் மீது எடுத்துக் கொண்டு போய் அவ்விடத்தில் அவர்களை வைத்து விட்டுத் திரும்பாமல் அங்கே இரு'' என்று சொல்லி மாயைக் கணையை விடுத்தான் சிங்கமுகன்; பலராக நின்று போர் செய்த பூதப் படையினரும், வில் வீரரான எட்டுப் பேரும், மற்ற வீரர்களும், புராதனர் புகழ்கின்றவரும், போர் செய்வதற்கரிய தோள் ஆற்றலையுடைய வீரவாகு தேவரும் ஆகிய எல்லோரும் கட்டப்பட்டு அந்த மாயாப் பாசத்துக்குள் அகப்பட்டுக் கொண்டனர்.

அவர்களை அந்த மாயாபாசம் திருமகளின் கணவன் நாராயணன் அறிதுயில் கொள்கின்ற திருப்பாற்கடலில் உள்ள உதயம் என்னும் பெரிய மலையை அடைந்து, மூச்சு விடுதலின்றி உறங்குகின்ற மதத்தையுடைய வீரரை வைத்து அவர்களுடனே இருந்து வந்தது. அப்போது சிங்கமுகன் முருகப்பெருமான் இருக்கும் இடத்துக்குச் செல்வதைப் பார்த்து தேவர்கள் வருந்தி ஓடினார்கள். இதனை உணர்ந்து வாயுதேவன் பாசறையை அடைந்து, கிரவுஞ்ச மலையைப் பிளந்த கூர்மையான வேலையுடைய குமரப்பெருமானின் ஒலிக்கும் கழல் அணிந்த திருவடிகளை வணங்கி, ''ஐயனே! செவி கொடுத்தருள்க! பூதர்களுடன் பகைவரைக் கொல்கின்ற படைத் தலைவர்கள் போய் உண்மையான வன்மையைப் புலப்படுத்திக் காட்டிப் பெரிய போரைச் செய்யவும், அதைக் கண்டு கொடிய சிங்கமுகன் தன் கையில் இருந்த மாய பாசத்தால் நம்மவர் எல்லாரையும் இளைக்குமாறு கட்டிக் கதிரவன் உதயம் ஆகின்ற மலையில் கொண்டு வைத்துள்ளான். முருகப் பெருமான் வாயுதேவன் உரைத்த சொற்களைக் கேட்டு, ''அந்தச் சிங்கஇமுகன் எங்கே இருக்கின்றான்? அவன் எங்கே இருக்கின்றான்?'' என்று கேட்க, திரும்பவும் அந்த வாயுதேவன், ''கொடிகள் கட்டிய தேரையுடையவனும், சூழ்ந்த படையையுடையவனுமான அந்தச் சிங்கமுகன், தான் மடியத் தக்க முறையினால் இங்கு வருவான் போலும்!'' என்று சொன்னான்.

விரைந்து செல்லும் தேரைக் கொண்டு வர முருகப்பெருமான் பணித்ததும் வாயுதேவன், ஆறுமுகங்களையுடைய முருகப்பெருமான் இட்ட கட்டளையைத் தலைமேல் தாங்கிபோய், அழிவற்ற, சிவபெருமானால் அளிக்கப்பெற்ற தேரைக் கொண்டு தாறுகோலும் கயிறும் தாங்கி ஏறி ஓட்ட, முருகப்பெருமான் அந்தத் தேர்மீது அமர்ந்தருளினார். அவ்வாறு அவர் ஏறியருளியதால் தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள். இந்திரன் சாமரை வீசவும், தேவர்கள் ஆலவட்டம் வீசவும், சந்திர சூரியர் என்று கூறப்படுபவர் குளிர்ந்த நிழலைத் தரும் குடைகளைச் சுமக்கவும், அந்தகன் உடைவாள் ஏந்தவும், இயக்கரின் தலைவனான குபேரன் அடைப்பை தாங்கவும், கடலரசன் செம்பொன் படியகம் ஏந்தவும், முருகப்பெருமான் எழுந்தருளினார்.

குற்றம் இல்லாத பூதர் சூழ்ந்து வரவும், தேவர்கள் வாழ்த்தவும், நம் பெருமான் பாசறையிடத்தை நீங்கிப் போர்க்களத்துக்கு, வீசும் காற்றும் மின்னலும் வெட்கம் அடையுமாறு நொடிப் பொழுதில் எழுந்தருளவும், அப்போது 'விளங்கும் படைகளுடனே பகைவனான முருகன் எங்கே, எங்கே?' என்று தேடிய வண்ணம் வந்த சிங்கமுகனும் எதிர்ப்பட்டான். கங்கையின் மகனான முருகப்பெருமானும் மாயையின் மகனான சிங்கமுகனும் எதிர் எதிரே நெருங்கியவர் ஆகவும், பகைவரின் வருகையை கண்ட பூதர்கள் பருமனான எழுக்களையும் வான் அளாவிய மரங்களையும் கணிச்சிகளையும், தண்டுகளையும், தீ கக்கும் சூலங்களையும், சக்கரங்களையும், கொழுக்களையும், மலைகளையும் வீசி, விரைந்து அவுணர்களையும் உயர்ந்த கொம்புகளை யுடைய யானைகளையும், குதிரைகளையும் தேர்களையும் அழித்தார்கள். பூதர்கள் இவ்வாறு மலை, மரம் முதலியவற்றைக் கொண்டு போர் செய்ததால், அசுரர்களும் குந்தகங்கள், மழுக்கள், தண்டுகள், வச்சிரங்கள், எழுக்கள், அம்புகள், முற்பட்ட கங்க பத்திரங்கள், வேர்கள், உலக்கைகள், கொழுக்கள், சங்குகள், எந்திரங்களில் வைத்து எறியும் கவணகற்கள், கைவேல்கள் மற்றுமுள்ளவை ஆகியவற்றை எய்தவர்களாப் போர் செய்து பூதப் படையினரை அழித்தனர்.

இவ்வாறு பூதப்படையும் அசுரப் படையும் கைகலந்து போர் செய்வதைத் தீப்பொறி சிதறும் வட்டமான கண்களையுடைய சிங்கமுகன் பார்த்தான். இனி நெருங்கி நின்றும் போர் செய்யும் இப்பகைவர்களை வாரி உண்டு என் சினத்தை விரைவில் போக்கிக் கொள்வேன் என்று தனக்குள்

ஒரு தீர்மானம் செய்து கொண்டு. அண்டமும் திசையுமான எவ்விடத்தும் தானே நிற்கத் தக்க ஒரு பெரிய மாய வடிவத்தை எடுத்தான்.

மகரந்தம் சிந்துகின்ற மலர் மாலையை சூடிய தன் தம்பியான சிங்கமுகன் கொண்ட ஒரு பெரு வடிவத்தையும் கந்தவேள் அவனுக்கு எதிரில் தனியாக நிற்பதையும் பூதர்கள் எல்லாம் அவனுக்கு உணவான தன்மையையும் சூரபன்மன் ஒரு மலை நின்று பார்க்கவும். அதற்கு முன்பே எண்ணில்லாத பூதப் படையினர் முழுவதையும் சிங்கமுகன் உண்ணும் இயல்பையும் அங்கு வந்த கந்தவேள் கண்டருளினார்.

தாம் ஒருவராகவே நின்று உலகம் எல்லாவற்றையும் அழித்தருளுகின்ற நடராசப் பெருமான் பெற்ற அளவில்லாத பேராற்றல் உடைய முருகப் பெருமான் பகைவரோடு போர் செய்கின்றது போன்ற ஒரு சிறிய திருவிளையாடலைச் செய்தருளத் திருவுள்ளம் கொண்டார். செந்நிறமான தாமரைக் காடுகளும், செவ்விய சூரிய சந்திரர் குழுக்களும் அழகான செவ்விய ஒளியை உண்டாக்கிச் கொண்டிருந்தாற் போன்று பன்னிரண்டு திருக்கைகளும் ஆறுமுகங்களும் கொண்ட முருகப்பெருமான், வாயுதேவன். தேரை செலுத்தப் போர்த் தொழிலை செய்வதற்காக எழுந்தருளினார்.

வலிய வில்லினின்று முருகப்பெருமான் எழுப்பிய நாண் ஒலியைக் கேட்டும், அந்த ஒலியால் உலகத்தில் கவிழ்ந்து விழுந்ததன் படைப் பரப்பையும் சிங்கமுகன் கண்டான். "இத்தகைய செயலைச் செய்பவன் யார்! சிவபெருமானின மகன் இவனே போலும்! அவனது வில் ஓசையே இவ்வாறு இருந்தால் இவன், முன்பு என் தம்பி தாரகனைக் கொன்றான் என்று கூறுதல் உண்மையே போலும்!" என்று வெண்மையான பிடரிமயிர் அசைகின்ற தலை உடைய சிங்கமுகன் இத்தகைய சொற்களைச் சொல்லி, "இந்தச் சிறுவனின் வன்மையை அழித்து மீள்வேன்!" என்று சொல்லிக் கால்களை உடைய பெரிய தேருடனே ஓர் இமைப் பொழுதில் அவ்விடத்தை அடைந்து வேலை ஏந்திய பெருமை பொருந்திய முருகப்பெருமானைப் பார்த்து "நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானின் மைந்த! ஒன்று சொல்வேன், கேள்! பகைவரின் வலிமையை அழித்தல் அரசராக இருப்பவரின் கடமையேயாகும். ஆதலால் நாங்கள் எங்கள் பகைவரான தேவரைத் தண்டித்தோம். தேவரே அல்லாது எங்கட்கு வேறு பகைவர் இல்லை" அங்ஙனம் இருக்க, நீ எம்மீது போருக்கு வந்தது ஏன்? என்று வினவினான்.

## 3. சௌரேய சுப்ரமணியர்

*சதுர்வக்த்ர அஷ்டநயனம் புஜாஷ்ட கமலாஸனம்*

*குஞ்சிதம் வாமபாதம் ச ஸுஸ்திதம் தக்ஷிணம்பதம்*

*சக்த்யுத்பலே புஷ்பபாணம் அபயம் தக்ஷிணே கரே*

*வஜ்ரம் ச இக்ஷுதநு: சூலம் வரதம் வாமகே ததம்*

*பத்ம புஷ்ப நிபம் சைவ ஸௌரபேய ஸ்வரூபகம்*

*பாடலவர்ணம்*

*நான்கு முகம், எட்டு கண்கள், தாமரையில் வீற்றிருத்தல்,*

*இடது கால் சற்று வளைவாகவும், வலக்கால் ஊன்றியும்,*

*வலது நான்கு கரங்களில் சக்தி, தாமரை, மலர்ப்பாணம்,*

*அபயம்*

*இடது நான்கு கரங்களில் வஜ்ரம், கரும்பு வில், சூலம்,*

*வரதம் பாதிரிப்பூ வர்ணம்.*

இவ்வாறு சிங்கமுகன் உரைக்கவும், அதைச் செவியேற்றருளிய எம் இறைவன் முருகப்பெருமான் அவனை நோக்கிச் "சிங்கமுகனே, கேள்! உலகில் வாழ்கின்ற எளிய ஒருவனை வலியன் ஒருவன் தண்டித்தால் நாம் அவனை முறைமையாக விளங்கும் தண்டனை செய்து எல்லா அண்டங்களுக்கும் அரசினைச் செய்கின்றோம். ஆதலால் நீங்கள் தேவர்களுக்கு இட்ட சிறையினை அகற்ற வந்தோம். இங்குப் போர் செய்வதும் அதன் பொருட்டேயாகும்!" எனத் திருவாய் மலர்ந்தருளினார். "பகைமை விளங்கும் போருக்கு வந்த அளவற்றவர் இறந்தனர். வருத்தத்துடனே புறங்கொடுத்து அஞ்சி ஓடியவர் தொகையும் அதுவே! அதை நீ அறிந்து கொள்ளாமல் போர் செய்ய எண்ணி வந்து விட்டாய்! தேவரின் சிறையைக் கனவிலும் நாங்கள் விடுவதுண்டோ?" என்று சிங்கமுகன் சொல்லி முடிப்பதற்கு முன்பு, பன்னிரண்டு தோள்களையுடைய முருகப்பெருமான் 'இவன் கொண்ட எண்ணம் நன்று!' என்று நினைத்தருளி, சிரித்து, தம் வில்லிலே ஒரு வயிர அம்பினைப் பூட்டி விரைந்து விட, அந்த அம்பு தீயவனான சிங்கமுகனின் மார்பில் புகுந்து துளைத்து உருவி முதுகில் வெளிப்பட்டுச் சென்றது.

தொகுதியான அழகிய கதிர்களையுடைய முருகப்பெருமானின் அம்பானது பாய, அதனால் அச்சிங்கமுகனின் முதுகும், மார்பும், வாயில் போலத் துளைகள் உடையதாக ஆயின. அத்துளைகளை அத்தீயவனின் வயிற்றிலே இருந்த பூதகணங்கள் எல்லாம் பார்த்து புற்றிலிருந்து வெளிப்பட்டுப் பறந்து போகின்ற ஈசல்களைப் போல அவ்வழிகளை நாடி வந்தனர்.

அறத்தை விலக்கித் தீய நெறியில் நடந்த சிங்கமுகனின் உடலிலே அம்புகளால் உண்டான வாயில் வழிகளால், கூட்டின் இடத்தனின்று நீங்கிப் பறந்து நீங்கும் பறவைகளைப் போல சிங்கமுகனின் வயிற்றுக்குள் இருந்த பூதங்கள் எல்லாம் வெளிப்பட்டுச் சென்று கந்தபெருமானின் பக்கத்தில் வந்தன. அச்சமயத்தில் ஆறுமுகங்களை யுடைய பெருமான் தமக்கு ஒப்பில்லாதவரும் தம் இளையவரும் ஆன வீரவாகு தேவர் முதலானவரையும், நெருங்கியுள்ள பூத கூட்டத்தவர் அனைவரையும் விடுவிக்க வேண்டும் என்று திருவுள்ளத்தில் நினைத்தருளித் தம்மிடம் உள்ள ஓர் அம்பை விட்டருளினார்.

அப்பெருமான் எய்த அம்பு பல கடல்களையும் தாண்டி முற்பட்ட கதிரின் உதய மலையை அடைந்து, வீரர்களைக் கட்டாகக் கொண்டு சுற்றியிருக்கும் மாய பாசத்தை அறுத்தது; உடனே எம் முருகப்பெருமான் திருவருளால் அவர்கள் அனைவரும் உறங்கியவர் விழித்து எழுந்ததைப் போல் எழுந்தனர்; மாய பாசமான தளையிலே அகப்பட்டுக் கொண்ட வீரவாகுதேவர் முதலியவர் அந்தப் பாசத்தளையினின்றும் முருகப்பெருமான் அருளால் விலகிக் களங்கம் இல்லாத நல்ல அறிவு தோன்ற உய்ந்தவராய், சொல்லால் சொல்ல இயலாத இன்பம் அடைந்தவராய்ச் சிவபெருமானுக்கு இனியவரான முருகப் பெருமானின் திருவடிகளை வணங்கினர்.

மாய பாசத்தை அறுத்து, வீரவாகு முதலியவர்க்கு ஏற்பட்டிருந்த மயக்கத்தைப் போக்கி, புட்பக விமானத்தைப் போல வடிவம் கொண்டு, மேற்குறித்த வீரவாகு தேவர் முதலியவரை ஏற்றிச் செல்லும் முருகப் பெருமான் எய்த அம்பு, கதிரவன் உள்ள ஏழு கடல்களைக் கடந்து, விரைவாகப் போய், போர்க்களத்தில் படைகளுடன் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் நெடிய திருவடிகளுக்கு முன் நின்றது. நெருங்கிய அம்புகள் உள்ள தூணியில் புகுந்தது.

அசுர படைகள் வயிரம் வாய்ந்த பலவித ஆயுதங்களை வீசிக் கொண்டு பிரளய காலத்தில் உலகம் எல்லாவற்றையும் அழிக்கின்ற ஒப்பற்ற உருத்திரரின் மகனான முருகப்பெருமானை ஆரவாரத்துடனே சூழ்ந்து கொள்ளவும், நெற்றிக் கண்ணரான சிவபெருமான் மகனான முருகப் பெருமான் புன்சிரிப்புத் தவழ வெற்றி பொருந்திய தம் கொடிய வில்லை வளைத்து நெருங்கிய அம்பு மழையை அவர்கள் மீது எய்தார்.

முருகப் பெருமான் எய்த அம்புகள் பட்டு இறந்தவரின் உடல்களைத் தின்ன எண்ணி பருந்துகள் வந்து நெருங்கின. காக்கைகள் வந்து நெருங்கின. கவந்த கூட்டங்களும் நெருங்கின. பேய்களும் நெருங்கின. அசுரர்களின் இனங்கள் அறுபட்டன. யானை, குதிரை, தேர் என்னும் இவை அழிந்தன. இவ்வாறு நான்கு வகைப் படைகளும் அழிந்த அந்தப் போர்க் களத்தில் சிறந்த சிங்கமுகன் ஒருவன் மட்டும் இறவாது எஞ்சி நின்றான்.

மேலே உயர்ந்து விளங்கும் அண்டங்கள் அனைத்தும் பொருந்துமாறு மாயா வல்லமை கொண்ட பெரிய அந்த உருவம் முருகப்பெருமானின் அம்புகள் பட்டு அழிந்தது. ஆதலால் அந்த வடிவு நீங்கிப் பழைய தன்மை

அடைந்து தேரின் மீது நின்றான். ஆற்றலையுடைய சிங்கமுகன் முருகப் பெருமான் எய்தருளிய அம்புகளை ஓர் ஆயிரம் அம்புகளால் அழித்துப் பின்னும் கொடிய பத்து இலட்சம் அம்புகளை எம்பெருமான் மீது படுமாறும் எய்தான். அரிய தீயைப் போன்ற சினம் உடைய மனித வடிவத்தையும் சிங்க முகத்தையும் உடைய சிங்கமுகன் விட்ட கூரிய அம்புகள் மார்பிலே அழுத்தவும், வாயுதேவன் தன் வன்மையிழந்து மிகுந்த இரத்தம் ஒழுகத் துன்பம் அடைந்தான்.

தம் தேரோட்டியான வாயுதேவன் அடைந்த துன்பத்தைப் பார்த்து வெற்றி பொருந்திய நம் இறைவன், கட்டப்பட்ட வில்லை இருபக்கமும் வளைத்து ஒரு நூறு அம்புகளைச் செலுத்திப் பகைவனின் வயிரம் பொருந்திய சிறந்த கொடிகளையுடைய தேரை அழித்தார். தேர் அழிந்தவுடனே கொடியவரில் எல்லாம் கொடிய சிங்கமுகன், தேர் அழிந்த சந்திரனைப் போன்றவனாகி, மேகத்தின் ஒலியும் அழிந்து போகும்படி பேரொலியுடன் சிங்க நாதம் செய்தவனாய் பூமியில் இறங்கி முருகப் பெருமான் மீது படுமாறு பல அம்புகளை எய்தான்.

இறைவன் எய்த அம்புகளைத் தண்டினை வீசி பொடியாக்கியதையும், கொடிய அந்தச் சிங்கமுகன் கையிலே கொண்ட தண்டுடன் வருவதையும் கண்டு, தீட்டப்பட்ட ஏழு அம்புகளை விடுத்து, வன்மையான தண்டினை எடுத்து வந்த கையைப் பெரிய நிலத்தில் அறுத்துத் தள்ளினார். முருகப் பெருமான் ஓர் ஆயிரம் அம்புகளைச் செலுத்திச் சிங்கமுகனான அசுரரின் ஆயிரம் பெரிய முடித்தலைகளை விரைவாக அறுத்துப் பின் இரண்டாயிரம் கொடிய அம்புகளை விடுத்து அவனுடைய இரண்டாயிரம் கைகளையும் வெட்டி வீழ்த்தினார்.

தேவர்களாலும் காண்பதற்கு அரியவனான முருகப் பெருமான், தம்மால் வெட்டப்பட்டவை சிங்கமுகனுக்கு முளைத்தெழுந்ததைக் கண்டார். முன்பு இவன் ஆலங்காட்டில் செய்த வேள்வியில் கைகளையும் தலைகளையும் விடாது வெட்டித் தீயில் இட்ட தன்மையால் முளைத்தனவாகும் இவை. இப்படி தம் திருவுள்ளத்தில் நினைத்த அளவில் சிங்கமுகன் "முருகனே! நீ புதிதாக முளைத்துக் கொண்டே இருக்கும் எனது தலைகளை வருத்தும் அம்புகளை விடுத்துப் பலயுககாலம் அழித்தாலும் மேலும் மேலும் அவை முளைக்கின்றனவே அல்லாது உனக்கு அஞ்சி முளைக்காது நின்று விடுமோ? நில்லா. என்னுடன் போர் செய்து இளைப்பவனான நீயோ

என்னுடன் போர் இயற்ற வல்லவன்? சிறுவனான நீ வல்லமையில் சிறந்த என் அரிய தவத்தின் இயல்பை நினைக்கவில்லை. அதை நினைக்காது போனாலும் உன் தந்தையால் அளிக்கப்பட்ட ஆற்றலையேனும் அறிந்திருக்க வேண்டும். அதையும் நீ உணர்ந்தாயில்லை! அந்த இரண்டையும் உணராமையால் என்னுடன் போர் செய்ய வந்தாய். இத்தகைய இயல்பால் இங்குப் போருக்கு வந்த உன் முயற்சியும் முற்றுப் பெறுவதன்று. மாட்சிமை உடையவர் எனப்படும் தேவர் நாங்கள் இட்டிருக்கின்ற சிறையினைக் கடந்து திரும்பி அந்த இடத்துக்கு வந்து சேருதலும் வன்மையாளனான நான் இறந்து படுதலும் இல்லை! ஆதலால் இங்கிருந்து நீ திரும்பிச் செல்வாய்; உன் உயிரைப் பறிக்காமல் விட்டு விடுகின்றேன்'' என்று கூறினான்.

இவ்வாறு சிங்கமுகன் கூறவும், எம்பெருமானான குமரப்பெருமான் ''உன் உயிருக்கு வரையறை செய்த காலமானது கழிந்து விட்டது. எமனும் உன் பின்னால் வந்து நின்றான். நீ என்ன பிதற்றுகின்றாய்? அறிவில்லாதவனே! ஓர் இமைப்போதில் நின்னை கொன்று விடுவேன். காண்பாயாக!'' என்று உரைத்தருளினார்.

கிரவுஞ்ச மலையைப் பிளந்த கூர்மையான வேலையுடைய அழகிய முருகப்பெருமான் செலுத்திய அம்புகளால் அழிந்த தன் தலைகளும் கைகளும் திரும்ப முளைக்காத தன்மையை அசுரனான சிங்கமுகன் பார்த்து, முன்னே பலகாலம் தாம் கற்ற வித்தைகள் யாவும் ஒன்றுகூட இல்லாது, புலவன் ஒருவனோடு எதிர்த்து வாது செய்யும் போது வாதத்துக்குப் பயன் இன்றி அரங்கமாகிய கழகத்தில் தளர்ச்சி அடைந்தவனைப் போல, அவமானம் அடைந்து வருந்தி ''இருபக்கமும் கூரிய வேலை ஏந்திய பெருமையுடைய கந்தவேளே! என் தலைகளும் கைகளும் அறுபட்டன என்று எண்ணாதே! என் பெரிய ஆற்றலைத் தேவர் எல்லாரும் அறிவர். ஒரு தலையும் இரு கைகளும் கொண்டே உலகம் முழுவதையும் அழிப்பேன்!'' என்று சொல்லிப்போர் செய்வதை நினைத்து, அங்கிருந்த ஒரு மலையை பறித்து முருகப்பெருமான் மீது வீசினான்.

மிக்க சீற்றத்தையுடைய சிங்கமுகன் உரைத்ததையும் அவனால் ஏவப்பட்ட தண்டினையும் செம்மையான சுடரையுடைய மேனியரான முருகப்பெருமான் சிந்தித்து, பார்த்துத் தம் செந்தாமரை மலர் போன்ற ஒரு திருக்கரத்தில் இருந்த அழகான வச்சிரப் படையை நோக்கி, ''நீ அந்த வஞ்சகனின் உயிரை விரைந்து கொண்டு வருவாயாக!'' என்று திருவாய்

மலர்ந்து விடுத்தருளினார். 'நீ போய் அந்த வஞ்சகனின் உயிரை உண்டு வருவாயாக!' என்று உரைத்தருளி விடுக்கவும், அந்த வச்சிராயுதம் போய் விரைவாக எதிர்த்து வந்த தண்டினை அழித்துப் பொடித்தது போலப் புழுதியாக்கி, மலைமீது போகும் இடிக் கூட்டங்களைப் போலப் பேரொலியுடன் அந்த சிங்கமுகனின் மார்பை அடைந்து, அவனது உயிரை உண்டு வெளியே இரத்தத்தைக் கொப்பளித்தவாறு திரும்பச் சென்றது.

முருகப் பெருமான் செலுத்திய குலிசப் படையானது மலையின் மீது விழும் இடி போலப் பேரொலி உடையதாய்த் திடீரென்று அகலமான மார்பைப் பிளந்து அவன் உயிரை வாங்கிக் கொண்டு முதுகை பிளந்து வெளியே போகவும், மார்பானது பிளவுபட்டுத் துடிதுடித்து வீழ்ந்து, இரத்தம் வெள்ளம் அலைமோதச் சிங்கமுகன் என்ற கொடிய அசுரன் இறந்து கிடந்தான்.

அப்போது வன்மை மிக்க அந்த வச்சிரப்படை வான் வழியாகப் போய், அங்குள்ள தேவ கங்கையில் முழுகி, கற்பகச் சோலையில் பொருந்திய பூந்தாதில் படிந்து, சங்கப் புலவர்களுள் தலைமை சான்ற தமிழ்ப் புலவரான முருகப்பெருமானின் சிவந்த கைகளில் வந்து அமர்ந்திருந்தது. வச்சிரப் படையானது மலைமேல் விழும் இடியைப்போல் சிங்கமுகனின் மார்பில் தாக்கி அவனது உயிரை உண்டு வானில் சென்று ஆகாயக் கங்கையில் முழுகிக் கற்பகப் பூந்தாதில் படிந்து கந்தவேளின் கையகத்தில் வந்த இந்த இயல்பை வானில் நின்ற நான்முகன் முதலான தேவர்கள் பார்த்து ஆரவாரம் செய்து ஆடிப்பாடி மலர் மழை பெய்து மகிழ்வடைந்து வணங்கி, எம்முருகப் பெருமானைச் சூழ்ந்து துதித்துப் புகழ்ந்தனர்.

முருகப்பெருமான் அத்தேவர்கள் எல்லார்க்கும் திருவருளைச் செய்து, பூத வெள்ளங்களுடனும், ஒளியுடைய வாள் ஏந்திய ஒன்பது வீரருடனும், கண்டவர் இது 'சுவர்ணவுலகம்' என்று கூறுமாறு அழகுபடுத்தப்பட்ட பாசறைக்குள் எழுந்தருளினார். வெற்றி பொருந்திய நீண்ட வேலையுடைய முருகப்பெருமான் வியக்கத்தக்க அலங்காரத்தையுடைய பாசறையில் வீற்றிருக்க, அந்த இறைவனுடன் முன்னம் போர் செய்த சிங்கமுகன் போர்க்களத்தில் அழிந்ததை ஒற்றர் அறிந்து மகேந்திர நகரத்துக்கு ஓடினார். ஒளி பொருந்திய காஞ்சி நகரத்தில் உள்ள காமகோட்டம் என்ற கோயிலின் மேல் நிலையனின்றும் சக்கர தீர்த்தத்தில் விழுபவர்களைப் போல, தம்பி இறந்தான் என்று கேட்ட துன்பத்தால் கண்ணினின்றும் ஒழுகிய நீர்க் கடலில் சூரபன்மன் விழுந்தான்.

கிரவுஞ்ச மலைக்கு அருகில் இருந்த துளையுடைய துதிக்கையைக் கொண்ட யானைமுகனான தாரகன் இறந்த பின்பு ஒரு தோளை இழந்து மனம் தளர்ந்து வருந்தினேன். ஓ! சிங்கமுகனே, இன்று பகலில் நீ இறந்து விட்டாய். ஆதலால் நான் மற்றோர் தோளையும் இழந்து விட்டேன். சூரபன்மன் இவ்வாறு தனது அண்டம் எல்லாம் செவிடாக தன்னந்தனியாக அழுகின்ற ஒலியைக் கேட்டுத் தங்களுக்கு உண்டான மகிழ்ச்சியால் நல்ல பாஞ்ச ஜன்னியம் என்ற சங்கையுடைய திருமாலும், தாமரை மலரில் தோன்றிய அன்ன வாகனனான நான்முகனும், வேள்வித் தலைவனான இந்திரனும் ஆரவாரம் செய்தனர்.

## 13. சூரபன்மன் வதை

சூரபன்மன், வெற்றியுடைய வேல்களை ஏந்திய ஆயிரங்கோடி ஒற்றர்களைப் பார்த்து "நீங்கள் என் ஆட்சிக்குட்பட்ட அண்டங்கள் எல்லாவிடங்களிலும் போய்த் தங்கி அங்குள்ள படைகள் எல்லாவற்றையும் விரைவாக இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்று சொன்னான். அங்ஙனம் சூரபன்மன் சொன்னதும் ஒற்றர்கள் சொல்வதற்கரிய வேகத்துடன் பலவாகப் பிரிந்து சென்று பொன் மயமாக உயர்ந்துள்ள அண்டங்களில் எல்லாம் புகுந்து மன்னர்க்கு மன்னனான சூரபன்மனின் கட்டளையை எடுத்துக் கூறினர். அங்ஙனம் ஒற்றர் உரைத்தவுடனே, அந்த அண்டங்களில் எல்லாம் வாழ்கின்ற அசுரத் தலைவர்கள் தொகுக்கப்பட்டுள்ள நான்கு வகைப் படைகள் என்ற கடல்களுடனே நெருங்கி, மிகுந்த அண்டங்களில் எல்லாம் முற்காலத்தே அமைக்கப்பட்டுள்ள வாயில்கள் வழியாகச் சென்றனர்.

அசுரரின் படைகள் எல்லாம் பூமியிலும், வானத்திலும், பக்கங்களில் உள்ள திசைகளிலும், கடல்களிலும், மலைகளிலும், வழியிலும், பாதத்திலும் மற்றுமுள்ள இடங்களிலும், வெற்றிடம் இல்லாமல் நெருக்கமாகச் சென்றன. அந்தச் சமயத்தில் ஒற்றர் சூரபன்மன் இருக்கும் இடத்துக்குச் சென்று அவனுடைய கரிய நெய்தல் மலர் போன்ற அடிகளை வணங்கி, "உம்முடைய படைகள் பிற அண்டங்களிலிருந்து வந்து அருகில் சூழ்ந்துள்ளன. அந்தப் படைகளின் புழுதி முன்னால் சென்று வானவீதியில் பொருந்திய பிரமாண்டத்தை நெருக்கின" என்று கூறவும் 'நல்லது' என்று அவுணர் தலைவனான சூரபன்மன் எழுந்து, தன் இருப்பிடத்துக்குச் சென்று

மிக்க நீரில் முழுகி, நெருங்கிய ஐந்து வகையான உணவுடனே ஆறு சுவைகள் பொருந்திய உணவை உண்டான். அவ்வாறு அவன் உண்டானே அது நஞ்சா, அமிழ்தமா? சூரபன்மன் உணவை உண்ட பின்னர் விரைந்து நெற்றியில் திருநீறு அணிந்தான். உடல் முழுமையும் மணம் கமழ சந்தனக் குழம்பைப் பூசினான். மலர் மாலையைச் சூடினான். பழைய ஆடை அணிகளை விலக்கி வேறு புதிய நல்ல இனியவற்றை அணிந்தான்.

பின்னர் சிவபெருமான் தனக்குத் தந்துள்ள சிறந்த படைக்கலங்கள், மற்ற தேவர்களின் பெயர்களில் விளங்கும் படைக்கலங்கள் என்ற எல்லாத் தெய்வக் கணையையும், குற்றம் இல்லாத ஆயிரங்கோடி தேர்களில் வைத்து, அவற்றையும் அவற்றுடன் வெற்றியுடைய சிங்க ஊர்தியையும் கெடுதல் இல்லாத 'இந்திர ஞாலம்' என்ற தேரையும் பரிசனத் தன்மையுடைய அசுரர்களை உடன் கொண்டு வருமாறு ஆணையிட்டான். சென்ற பாகர்கள் தேர்க் கொட்டிலுக்குள் புகுந்து அங்கு நிறுத்தியுள்ள உயர்ந்த தேர்களில் ஒரு பொன் தேரினில் அதை இழுத்துச் செல்லும் வண்ணம் மற்ற விலங்குகளை வருத்தும் எழுபதினாயிரம் சிங்கங்களையும், வெற்றியையுடைய எழுபதினாயிரம் குதிரைகளையும், எழுபதினாயிரம் காளைகளையும், கட்டி மேலும் அலங்காரம் செய்து கொணர்ந்தனர்.

அத்தகைய தன்மைகள் கொண்ட தேரைத் தேரோட்டிகள் கொண்டு வந்து சூரியனைச் சிறையிட்ட பானுகோபனின் தந்தையான சூரபன்மன் எதிரில் நிறுத்தலும், அச்சூரபன்மன் அதில் விரைவாக ஏறியிருந்தான். ஏறியிருத்தலும் அசுரர்கள் அவனை 'வெற்றி பெறக்கடவை' என்று மலர்களை வாரி இறைத்து வாழ்த்தினர். சூரபன்மன் போருக்குச் சென்ற போது படைகள் நேரியங்கள், பெரிய நிசாளங்கள், சல்லிகைகள், பேரிகைகள், ஊதுகொம்புகள், விளங்கும் தண்ணுமைகள், தூரியங்கள், எக்களங்கள், உடுக்கைகள் முதலான சிறப்புடைய பலவகை வாத்தியங்களையும் வாசித்துக் கொண்டு சென்றன.

போர்க்களத்துக்கு அரசனான சூரபன்மன் போர்க்கோலம் கொண்டு செல்ல, அவன்முன் அணிப்படையாகச் சென்ற அசுரப் படைகள், சிவபெருமானின் அருமைந்தரான முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற பாடி வீட்டை பூமியிலும் வானத்திலுமாகச் சூழந்தனர். "அழிவில்லாத ஆயிரத்தெட்டு அண்டங்களில் இருந்த படையுடனே மிகப்பெரிய சூரபன்மன் தேரின் மீது ஏறிப் போர் செய்ய வந்தான். அவனது முன்னணிப்

படையானது நம் பாசறையைச் சூழ்ந்து கொண்டது'' என்று திருமால், நான்முகன், இந்திரன் முதலான தேவர்கள் முருகப்பெருமான் முன் நின்று கூறினர்.

தேவர்கள் இது உரைக்கக் கேட்ட அழகான அரியணையில் வீற்றிருக்கும் பன்னிரு தோள்களை உடைய முருகப்பெருமான் வாயுதேவனைக் குறிப்பாகப் பார்த்தருளினார். உடனே அவரது குறிப்பை உணர்ந்த வாயுதேவன், விரைவாக முளவுகோலையும் கயிற்றையும் எடுத்துக் கொண்டு பொன் போல விளங்கும் 'மனவேகம்' என்று பெயர் உடையதும் குதிரைகள் கட்டப்பட்டதுமான தேரைக் கொண்டு வந்து நிறுத்தினான். வாயுதேவன் தேரைக் கொண்டு வந்து நிறுத்தியவுடன் விரைவாக எழுந்து அழகிய புதியதாக மலர்ந்த கடப்ப மாலையைச் சூடிய முருகப்பெருமான் புள்ளிகளையுடைய மழு, வச்சிராயுதம், சூலம், கத்தி, வாள், கேடயம், சக்கரம், தண்டு, எழு, வில், கோல், வில் என்ற இவற்றைத் தம் கைளில் கொண்டருளினார். இவர் இவ்வாறு ஏந்துவாரானால் இவரை வெல்ல நின்ற சூரபன்மனின் தவத்தை இவ்வளவு என்று கணக்கிட முடியுமா?

சூரியனின் நடுவே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் போல், ஆறு திருமுகங்களைக் கொண்ட முருகப்பெருமான், அசைகின்ற உளையை யுடைய குதிரை பூட்டப்பட்ட தேரின் மீது ஏறியருளினார். உடனே வீரவாகு தேவரும் அவருடைய தம்பியரான எட்டுபேரும் பருந்துகள் உலவுகின்ற குருதி படிந்த வேலையுடையவர்களும் அருகில் சூழ்ந்து வந்தனர்.

அங்ஙனம் மலர் மழை பெய்த போது வேதங்களுக்கும் எட்டாத அழிவில்லாத முருகப்பெருமான் தேர் மேலே கிளப்பித் திண்மையுடைய பிருதுவி அண்டத்தில் உள்ள பேர்க்கப்படுகின்ற உயிர்களை அழிப்பதற்காகச் செல்லும் முதல்வனைப் போல ஆரவாரிக்கின்ற படை வெள்ளத்தின் மீது சென்றார். அந்தச் சமயத்தில் ஆறு திருத் தோள்களையுடைய முருகப் பெருமான் பக்கத்திலே இருந்த அனைவரும் பூமியும் எட்டுத்திக்குகளும் என்றும் இவற்றில் எங்கும் நீங்காமல் சூழ்கின்ற அசுரனான சூரபமன்மனின் படையை நோக்கி, ஏக்கம் கொண்டு பழைய வன்மையை இழந்து இந்திரன் பின்வருமாறு சொல்லலானார்:

''இந்த அசுரர்களில் பலர் அக்கினிமுகாசுரனைப் போன்றவர்களாக வந்துள்ளனர்; உயர்ந்த யாளிமுகத்தவனை போல் பலர் காணப்படுகின்றனர்;

முகபடாம் அணிந்த துதிக்கையையுடைய கயமுகாசுரனைப் போலப் பலர் வந்துள்ளனர்; சிங்கமுகாசுரனைப் போல் பலர் விளங்குகின்றனர்; "மதுவுடனே கைடபனைப் போல் பலர் வந்தனர்; எல்லாரும் துதிக்கின்ற சுந்தோப சுந்தர்களை போல நெருங்கி வந்தவர் பலர்; ஒலிக்கும் கழலையுடைய சலந்தராசுரனைப் போல் பலர் வந்தனர்; மிகவும் முற்றிலும் சினம் உடைய மகிடாசுரனைப் போல நெருக்கமாக வந்தவர் பலர்.

பலர் சிவபெருமானின் படைக்கலத்தை ஏந்தியுள்ளனர். பலர் சிறந்த தாமரையில் வீற்றிருக்கின்ற நான்முகன் கணையைச் சுமந்துள்ளனர். பலர் காலனின் மழுவுடன் தண்டினையுடையவர். பலர் முரணின் படைகளை அழித்த முராரியின் சிறந்த ஆயுதங்களைச் சுமந்தவர்கள். முருகப் பெருமானுடன் போர் செய்வதற்கு ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் உள்ள படைகள் அனைத்தும் வந்து நெருங்கியுள்ளன. இவற்றுடன் எதிர்த்து நின்று போர் செய்து வெற்றி பெறுவதற்குப் பிரளய காலம் வரை ஆகுமானால் அசுரர்களின் மன்னன் இறப்பது எவ்வாறு? என்று இந்திரன் சொல்லவும், இலங்கையை ஆண்ட இராவணனைக் கொல்லும் ஆற்றல் கொண்டு நின்ற, திருமகளை மார்பில் கொண்ட திருமால், தேவர்களை அரசு முறையில் காக்கும் இந்திரனின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து, அவனது கவலையை ஒழிப்பதற்காக அவனைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார்:

"காலமாகவும், காலம் அன்றிக் கருமமாகவும், கருமம் அன்றி உருவமாகவும், உருவமின்றிக் குணங்களாகவும், குணங்கள் இன்றி உலகமாகவும் உலகமின்றி நமக்கெல்லாம் அநாதியாக மூலகாரணமாக இருந்த இறைவனே ஆறு திருமுகங்களுடன் எழுந்தருளிப் போந்துள்ளார். மலைகளின் மீதெல்லாம் திருவிளையாடலைச் செய்கின்ற குமரவேள், மேரு என்று சொல்லப்படுகின்ற பொன் மயமாக விளங்கும் மலையில் வந்து, உலகங்கள் முழுவதையும், அந்த உலகங்களில் வாழ்கின்ற உயிர்கள் அனைத்தையும், தேவர்களையும், தன் திருமேனியில் காட்டி அன்றொரு வடிவம் கொண்டு நின்றதனை அறிந்துள்ள நீ அதனை மறந்து விட்டாயோ?"

"தூய்மையான ஒரு சிறுவரைப் போல் தோன்றிய முதல்வரைச் சூழ்ந்துள்ள கொடிய அசுரரையெல்லாம் விரைவாக அழித்து அகற்றி, தம் திருக்கைகளில் உள்ள வேலால் சூரபன்மனின் வன்மையையும் நீக்குவார்; ஆதலால் நீ அஞ்ச வேண்டியதில்லை" என்று அறிதுயில் கொள்கின்ற திருமால் இயம்பினார். திருமால் இவற்றைக் கூறி இந்திரனின் மனத்தைத் தேற்றி,

"ஆரவாரத்துடன் அசுரப் படைகள் வானத்தில் நெருங்கின. ஆதலால் நாம் அனைவரும் அக்குமரக் கடவுளின் அருகில் நின்று போரின் தன்மையைப் பார்ப்போம்" என்று வேலை ஏந்திய குமரக் கடவுளின் அருகில் தேவர்களுடனே சென்றார். அத்தகைய தன்மையைப் பார்த்து ஆறுமுகக் கடவுள் புன்னகை கொண்டருளி கொலை செய்கின்ற போர் செய்ய எண்ணிச் சென்றார். உடனே வானத்திலும் பூமியிலும் நெருங்கி நின்ற அசுரப் படைகள் ஆரவாரம் செய்யத் தொடங்கின. உடனே போர் செய்ய எண்ணி முன்னால் சென்ற பூதப்படைகள் பின்னிட்டன.

அசுரர்கள் தண்டினையும் சக்கரங்களையும் வச்சிரப் படைக் கலங்களையும் சூலங்களையும் விற்கள் உண்டு உமிழ்கின்ற அம்புகளையும் வேற் கூட்டங்களையும் பிண்டி பாலங்களையும், கண்ட பாசங்களையும் இவையேயன்றியுள்ள படைக்கலங்களையும், தங்கட்குத் தேவர்கள் அளித்த படைக்கலங்களையும் எய்து நின்று ஆரவாரம் செய்தனர். மூன்று திருவிழிகளையுடைய சிவபெருமான் பெற்றருளிய அழகிய குமரக் கடவுளின் வன்மை பொருந்திய கட்டப்பட்ட வில்லின் முதிர்ந்த ஓசையானது போய், பொருந்திய செவிகள் தோறும் புகுந்ததும், அழியாத அசுரப் படைத் தொகை முழுவதும் அழிந்தது. தேர்கள் யாவும் உடைந்தன. வரிசையாக வந்த குதிரைகள் புரண்டன. வெண்மையான சந்திர மண்டலத்தை அளாவிய நீண்ட மலைகள் விழுபவை போல் கரிய யானைகள் தரையில் வீழ்ந்தன.

வன்மையையுடைய அசுரர்கள் சூழ்ந்துள்ள பூமியின் விரிந்த இடமும், அகன்ற கடலும், வானமும், ஆகிய இடங்களில் எல்லாம் நெருங்குவன அம்புகள் என சொல்லுமாறு, குற்றம் இல்லாத வேதங்களின் இரகசியங்களைப் பொதிய மலையிலே வாழ்கின்ற அகத்திய முனிவர் உணரும்படித் திருவருள் செய்த குருவான குமரக் கடவுள், கட்டப்பட்ட வில்லில் நெருங்கிய மேகங்கள் மழைத்துளிகளைச் சிதறுவது போல் அளவில்லாத அம்புகளை வைத்து எய்தார். எல்லா உலகங்களையும் உடைய எம் இறைவன் எய்கின்ற அளவில்லா அம்புகள், கொடிகளை அழித்தன. அளவில்லாத அம்புகள் குடைகளை அழித்தன. அளவில்லாத அம்புகள் படைக்கலங்களை அழித்தன. பொருந்திய யானைகளை அளவற்றவை அழித்தன. மேகத்தின் ஒலி போன்ற ஒலியுடைய தேருடன் அசுரர்களின்

தலைகளை அளவற்ற அம்புகள் அழித்தன. தம்மை அடைந்த அடியார்கள் விரும்பியவற்றையெல்லாம் அளிக்கின்ற முதல் வள்ளலான முருகப் பெருமான் தம் திருக்கைகளால் விடும் அம்புகள் பூமியைப் பிளந்து விரைந்து செல்லும்; பாதாலத்தில் பரந்து செல்லும்; மிகவுயர்ந்த அண்டமுகட்டிலும் உருவிச் செல்லும்; திக்கிடங்களிலும் செல்லும்.

மாட்சிமை பொருந்திய ஆதித்தர்களின் உடல்களை மறைத்த கொடிய மாந்தேகாதியரைப் போல் ஆறு திருமுகங்களை உடைய முருகப்பெருமான் எய்த அம்புகள் அசுரர்களின் தலைகளை அறுத்துத் தள்ளி வானத்தில் சென்றன. (மாந்தேகர் என்னும் அசுர இனத்துள் ஒருவகையினர் கதிரவனின் எதிரில் நின்று அவனது ஒளியை மறைத்துக் கொண்டு அவனுடன் போர்ச் செய்தனர் என்பது வரலாறு.) வியக்கத்தக்க செயலையுடைய குமரக் கடவுள், மேகம் இல்லாது வெண்ணிறமாகக் காணப்படுகின்ற வானத்திலும், திக்குகளிலும், கடல்களிலும், பூமியிலும், களத்திலும், பாசறைகளிலும் அவற்றைச் சுற்றிய பாடிகளிலும் திரிந்து குற்றம் அற்ற அசுரர்களைக் கொன்றார்.

அசுரப்படை வீரர்கள் காற்றைப்போல அண்டகடாக வழியில் உள்ள சுழியின் வழியாகப் புகுந்து மேலே விளங்கும் தேர்கள் யானைகள் குதிரைகளின் மிக்க கூட்டங்கள் என்ற இவற்றுடன் குமரப்பெருமானும் ஆயிரத்தெட்டு அண்டங்களின் தலைவனான சூரபன்மனும் எதிர்த்து நின்று போர் செய்யும் போர்க்களத்துக்கு விரைவாகச் சென்றனர். அசுரர் நூற்றெட்டு யுகங்களாகத் தம்மை ஆள்கின்ற சூரபன்மன் முருகப்பெருமானுடன் எதிர்த்து நின்று பெரிய போர் செய்ய வேண்டித் தேர் மீது வந்து நின்றதை யுணர்ந்து ஆர்வமுடனே ஆரவாரம் செய்தனர்.

இவ்வாறு அவர்கள் தம்மைப் தேற்றிக் கொண்டபோது தேவர்கள் துதிக்க, வீரவாகுதேவர் முதலான ஒன்பது வீரர் அருகில் வர, ஆற்றலையுடைய பூதர்கள் ஆரவாரிக்க, மரணமும் பிறவியும் அற்ற நம் குருபரன் அந்த ஆயிரத்தெட்டு அண்டங்களில் உள்ள அசுரர் எதிரே தோன்றினார். குழந்தை வடிவாய் விளங்கும் சிறப்பையுடைய எல்லாவுலகங்களுக்கும் முதல்வரான குமரப்பெருமான் நம் எதிரே வந்தருளியதைப் பார்த்து, அந்த அசுரர்கள் "மிகவும் சிறியவனான இவனோ தாவிச் செல்லும் குதிரைப் படைகளையும் யானைப் படைகளையும் உடையவனாக இல்லையே! இவனோ நம் பகைவன்?

இந்தச் சிறுவன் இந்த அண்டம் முழுமையும் மற்ற அண்டங்களினின்றும் வந்து நெருங்கிய படைகள் ஓர் இமைப் போதில் மாளுமாறு கொன்றனன், என்றால் இது நம்ப முடியாத அதிசயமாக அல்லவா உள்ளது'' என்று வியந்தனர்.

இதோடு நில்லாது நம் படைகளை கொன்ற குமரனுடன் அரசர்க்கு அரசனான சூரபன்மன் வந்து போர் செய்வதற்கு முன்னே நாம் இவனுடன் போர் செய்து இவனை அழிப்போம்!'' என்று அசுரப் படையினர் எண்ணலாயினர். கருவத்துடன் இவற்றைச் சொல்லிக் கொண்டு அவ்விடத்தில் முற்பட்டு வந்த படை வீரர்கள் சந்திரன், சூரியன், அக்கினி என்ற மூன்று கண்களையுடைய சிவபெருமான் அளித்த ஆறுமுகப் பெருமானை வலிமையுடனே ஆரவாரத்துடன் சூழ்ந்து கொள்ள, குமரப்பெருமான் தம் தேரோட்டியான வாயுதேவனைப் பார்த்து "நீ கொடிய அசுரப் படைகள் இருக்கும் இடங்களில் எல்லாம் கை அணி, நெற்றி அணி என்ற படை வகுப்புகளுக்கு அருகில், விரைவாகத் தேரை ஓட்டு'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

மண் உலகும், விண் உலகும், திக்குகளும், கடல்களுமாகிய எல்லா இடங்களிலுமாகத் தேர் உலவும். அப்பெருமான் திறத்தில் நெருங்கின அசுரர்களின் வன்மை பொருந்திய படைகள் அழியுமாறு ஒரு தொகுப்பில் பல கோடி அம்புகளாக வில் நாணில் வைத்துவிட்டார். நம் முருகப்பெருமான் செலுத்திய அம்புகளால் கால்கள் ஒரு பக்கத்திலும், கழுத்துகள் ஒரு பக்கத்திலும், வால்கள் ஒரு பக்கத்திலும், கொம்புகளுடனே முதுகுகள் ஒரு பக்கத்திலும் துதிக்கைகள் ஒரு பக்கத்திலும் என்று இப்படி யானைகள் அறுபட்டன.

பகைவரால் செய்யப்படுகின்ற வன்மையுடைய போரைக் கடக்கும் குதிரைகள் யாவும் எம் இறைவன் ஏவிய அம்பின் கூட்டங்களால் கல் அணைகள் அற்றன. பற்கள் முழுமையும் சிதைந்தன. செல்லும் கால்களுடன் தலைகளும் அற்றன. 'ஒல்' என்ற ஒலியும் அற்றது. மார்புகள் துணிபட்டன. அழகு பொருந்திய தேர்கள் அழிய, அவற்றின் சக்கரங்கள் கடல் போன்ற இரத்த நீரில் மூழ்குபவை மேருமலையைச் சுற்றி வரும் சூரியர்கள் பூமியைக் கீறிக்கொண்டு கீழே உள்ள நில எல்லையை அடைந்ததைப் போல் விளங்கும்.

முருகப்பெருமான், "பகைவர் மீது இது சிவபெருமானின் திருக்கையிலே உள்ள சூலமோ, அல்லது அவரது திருக்கையில் உள்ள கண்ட கோடாரியோ, அல்லது பழைய திருமால் விடுகின்ற சக்கரப் படையோ, அல்லது இந்திரனின் வச்சிரப் படையோ அல்லது யுக முடிவுக் காலத்துச் சூறைக் காற்றுடன் சேர்ந்த ஊழித்தீயோ!" என்று எண்ணும்படி அம்புகளை எய்தார். கிரவுஞ்ச மலையானது பிளவுபடுமாறு வேலை விட்டருளிய குமரப்பெருமான் பெருமை பொருந்திய கொடிய அம்புகளால் அந்த அண்டங்களினின்றும் இந்த அண்டத்துக்கு வரும் வழியை அடைத்துத், தன் அம்பால் இறந்து விட்ட படைகளின் உடல்களினின்று ஒழுகும் இரத்தமும் பிணக்குவியலும் நீண்ட பாதலங்களிலும் கடலைப் பக்கத்தே உடுத்த பெரிய நிலப் பரப்புகளிலும் நிறைந்து வானத்தை நெருங்கிப் கிடப்பதை நோக்கினார்.

நெற்றிக்கண்ணால் உலகம் அனைத்தையும் அழித்த சிவபெருமான் பெற்றெடுத்த மைந்தரான முருகப்பெருமான், தன் பன்னிரெண்டு திருக் கண்களையும் விளங்கும் கூட்டமான வெம்மையான தீச்சுடரையுடைய வடவைத் தீயைப் போல் செய்து அப்போதே உற்றுப் பார்த்தார். பார்த்தவுடனே பிணமலைகள் எரிந்தன. பிணக்குவியல்கள் வெந்து நுண்மையான துகள்களாக ஆயின. மூவகையான உலகங்கள் என்று சொல்லப்படுகின்ற சுவர்க்க மத்திய பாதலங்களும் முன் போலவே இருந்தன. இந்த அதிசயத்தைப் பார்த்துத் தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனும், திருமாலும், இந்திரன் முதலான தேவர்களும் முருகக் கடவுளைத் துதித்து வணங்கினர்.

"என் படைகளை அழித்த பகைவனை அவனுடன் வந்த தேர்களுடனே அழிப்பேன்" என்று சொன்ன அவுணரின் மன்னன் சூரபன்மன் உள்ளத்தில் மிக்க சினம் மூளப்பெற்றுப் போர்ச் செயலை எண்ணிக் காற்றைவிட அதிக வேகமாகத் தேரில் வந்து எதிர்த்தான். வாயுதேவன் ஓட்டும் தேரில் எழுந்தருளும் முருகப்பெருமானும் சென்று அவனை எதிர்த்தார். முருகப்பெருமான் தன் எதிரே வந்தபோது, அப்பெருமானின் பொலிவும், இரண்டு பக்கங்களிலும் பொருந்திய உயர்ந்த பன்னிரு திருக்கைகளும், சிறந்த படைக்கலங்களும், இயல்பாக அமைந்த வீரமும் பெருந்திறலும் என்ற இவற்றைப் பார்த்து 'முன்னாளில் வாழ்ந்திருந்த தக்கன் இவன்' என்று மனத்தில் நினைத்தான். பின்வருவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

"சிறப்புடைய வெண்மையான சந்திரனை அணிந்த சிவபெருமான் இறவாது இருப்பாயாக என்று அருள் செய்த தன்மையினால் நான் உன்னுடன்

போர் செய்து இறவேன். எக்காலத்தும் இந்த தன்மையுடையவனாகவே இருப்பேன். திருமால் முதலான தேவர்களும் எமனும் ஒரு காலத்திலும் என்னுடன் போர் செய்ததில்லை. என் ஆற்றலை அறியாது போரிட்டு இறந்தவர்களோ ஒருவர் இருவர் அல்லர்; பலர்; இதை அறிந்து கொள்ளவில்லை போலும்!''

''பாலகனே! நீ போர்க்களத்துக்கு வந்து போர் செய்த என் படைகளை அழித்தாய். அதனால் உன்னைச் சிறுவன் என எண்ணிவிடப் போவதில்லை. நீ போர் செய்யும் ஆற்றல் இல்லாது புறமுதுகிட்டாய் என்றாலும் உன்னை விரைவாக ஓடிவிடாது பிடித்துக் கொள்வேன். அன்றியும் உனக்குத் துணையாக வந்த தேவர்களுடன் பூதர்களையும் இப்போதே அழிப்பேன்!'' என்று தன் சுற்றத்துடனே அழிய இருக்கின்ற சூரபன்மன் சொன்னான். இவ்வாறு உரைத்த சூரபன்மனைப் பார்த்து, ''கொடிய குற்றமான செயற்கு வேறு எவரும் ஒப்பாகாத வண்ணம் விளங்கும் கயவனே! நீ பயனில்லாத சொற்களைச் சொன்னாய். அவற்றால் ஆவது ஒன்றுமில்லை. நின் மார்பு பொருந்துமாறு யாம் விடும் அம்பு நீ இதுகாறும் சொன்ன சொற்களுக்குத் தக்கவாறு உனக்கு விடை அளிக்கும்'' என்று முருகப்பெருமான் உரைத்தருளினார். எவரும் தமக்கு ஒப்பாகாதவராக விளங்கும் சிவபெருமானின் திருமைந்தர் இவ்வாறு உரைக்கவும், அதைக் கேட்ட சூரபன்மன் என்ற அசுரத் தலைவன், திடீரென்று சீறி மேருமலையை போன்ற ஒரு வில்லை எடுத்து வானத்தினின்று ஒழுகிய கங்கையைப் போன்ற நாணியை எடுத்து வில்லில் பூட்டினான்.

இயல்பாகச் சற்றே வளைந்துள்ள பெரிய மலை போன்ற வில்லைச் சூரபன்மன் வன்மையினால் வளைத்த தன்மையைக் கண்டு, முருகப் பெருமானின் படையினர்களாகிய பூதர்கள், தேவர்கள் முன்நாளில் அமிர்தம் கடைதற் பொருட்டு வளைந்து, திருப்பாற்கடலில் உண்டான ஆலகால நஞ்சுடனே போர் செய்வதற்கு அந்த நஞ்சை சூழ்ந்து கொண்ட தன்மையைப் போல, அசுரர்க்குத் தலைவனான சூரபன்மனை வளைத்துக் கொண்டார்கள். எதிர்த்தவர் கெடும்படி தும்பி, முதலியவற்றை வீசிப் போர் செய்கின்ற மும்மதத்தையுடைய யானையை வலை வீசிப் பிடிப்பதற்கு எண்ணுவாரைப் போல் பூதர்கள் சூரபன்மன் மீது கற்களை எடுத்து வீசினர். கொடு மரங்களை வீசினர். சூலங்களை வீசினர். மற்றுமுள்ள எறியத்தக்க ஆயுதங்களை எறிந்தனர். அசுரர்களின் தலைவனான சூரபன்மன் அந்தச் செயலைப் பார்த்து

தன் வில்லான மேகம் சொரிகின்ற அம்பான நுண்ணிய துளிகளைச் சிதறிப் பூதகணங்களின் கூட்டத்தை அழித்து, வானம் அளாவிய அரக்கால் ஆன மலையைக் கொடிய தீ உடைப்பதைப் போல அந்தப் பூத வியூகத்தை அழித்தான்.

நூறுகோடி அம்புகளை ஒரு தொடுப்பில் செலுத்திச் சூறைக்காற்றைப் போல் சுழற்சியாகச் சுழன்று திரிந்து வரும் சூரபன்மன், தன்னைச் சூழ்ந்த பகைவர் தனக்குப் பகையாக விடும் அம்புகளை அழித்து அவர்கள் ஏறியுள்ள தேர்களுடன் அவர்கள் கைகளில் பிடித்துள்ள விற்களையும் அறுத்து அகற்றினான். தேர்களும் விற்களும் அழிந்தவுடனே எண்மர் இலட்சர் என்னும் அவர்கள் வேறு தேர்களில் ஏறி வேறு வில் பிடித்து போர் செய்ய முயல்வதற்கு முன்னம் அவர்களுடைய தோள்களிலும், மார்புகளிலும், தலைகளிலும், கைகளிலும், சென்று பாயும்படி சூரபன்மன் ஆயிரம் அம்புகளைக் கொடிய தீ மழையைப் பொழிவது போல இரத்த வெள்ளம் பெருகுமறு விட்டான். உடலில் செறிந்து ஒழுகும் இரத்தத்தை உடையவர்களும் வருத்தம் கொண்ட மனத்தை உடையவர்களும், வலிமை இழந்தவர்களும் அப்போது அவனுடன் விற்போர் செய்வதற்கு ஆற்றல் இல்லாதவர்களும் ஆகி இலட்சம் வீரருடன் எட்டு வீரர்களும் ஒரே காலத்தில் புறமுதுகிட்டனர். உடனே சினத்தால் வீரவாகுதேவர் பகைவனான சூரபன்மனின் தேர்மீது பாய்ந்தார்.

மிக்க ஆற்றலையுடைய வீரவாகுதேவர் சூரபன்மனின் தேர்மீது பாய்ந்து தனக்கு முன்நாளில் சிவபெருமான் அளித்திருந்த வாளை உறையினின்று எடுத்துப் பகைவர்க்கு மன்னனான சூரபன்மன் கையில் எடுத்திருந்த வில்லைத் துண்டித்தார். துண்டிக்கவும், அச் சூரபன்மன் தீப்போல் சினம் கொண்டு வீரவாகுவின் மார்பில் தன் கையால் அடித்தான். சூரபன்மன் கையால் மார்பில் அடிக்கவும், மார்பில் பொங்கும் இரத்தம் ஒழுக வாகை மலர் மாலையைச் சூடிய தோள்களையுடைய வீரவாகு என்னும் சிங்கம் வீழ்ந்து தளர்ந்து அயர்ச்சி அடைய, அதைப் பார்த்து, இங்கு எனக்குத் தூதனைக் கொல்வது இயலாத செயல் என்று கையால் எடுத்து மேலே போகும்படி வீசினான்.

பிறகு சூரபன்மன் ஒரு வில்லை எடுத்தான். அந்த வில் மேற் பக்கத்தில் உள்ள அத்தமன மலையும் கீழ்ப்புறத்தில் உள்ள உதயமலையுமான

இரண்டின் அளவாக வளர்ந்து அகன்று, நாள்தோறும் மற்றவர்க்குத் துன்பத்தைச் செய்து மேருமலையைவிட நீண்ட கொத்தான பல வடுகளை யுடையதாகக் குமரப் பெருமான் தம் வேற்படையினால் அழிக்கும்படி நின்ற கிரவுஞ்ச மலை போல் விளங்கியது. எப்படிப்பட்டவரும் நடுக்கம் அடையுமாறு, வில்லில் நாண் ஓசை எழுப்பினான். அவனது அச்செயலைத் தேவர்களைக் காத்தருளிய முருகப்பெருமான் கண்டார். மேகம் போன்ற கரிய நிறம் உடைய திருமால் இந்த உலகத்தை உண்ட காலத்திலும், நான்முகன் கண் உறங்குகின்ற அவனது மாலைப் பொழுதான பிரளய காலத்திலும், அவனது இறப்புக் காலமான பெரும் பிரளய காலத்திலும், அழியாமல் நிற்கும் அண்டத்தின் அடியையும் முடியையும் கடந்து நின்று விளங்கும் கயிலையை ஒத்த ஒரு பெரிய வில்லை முருகப்பெருமான் கைக் கொண்டார்.

உலகம் அழிகின்ற காலத்தில் அருகில் உள்ள மேரு முதலான மலைகளும், மற்ற மலைகளும், வானில் உலா வருகின்ற மேகங்களும், மேலே உள்ள உலகங்களும், தேவர்களும், கயிலாய மலைச் சாரலை அடைந்து நிற்பது போல் தோன்றியது அந்த வில். மிக்க நீளமான அந்த வில்லை இறைவன் தனது இரண்டு தோள்களால் வளைத்து ஏழு வகையாகப் பிறக்கின்ற நெருக்கம் மிக்க பல உயிர்களும் வானில் உள்ள இடியின் கூட்டங்களாகி ஆரவாரம் செய்தாற் போல நாண் ஓசை எழுப்பினார். நாணியில் பொருந்திய ஓசையை ஆறுமுகப் பெருமான் எழுப்பவும், சூரன் தனது விற்படையை வளைத்து, இருபது இலட்சம் என்ற கூட்டமான கொடிய அம்புகளை எய்தான்.

ஆறுமுகப் பெருமான் அதனைக் கண்டு, கொடிய தீமை முற்படத் தள்ளுகின்ற காற்றைப் போல் சில அம்புகளை விடுத்து, அந்தச் சூரபன்மன் எய்த அம்புகளை யெல்லாம் அழித்தார். அசுர மன்னனான சூரபன்மனால் விடப்பட்ட கொடிய அம்புகள் எல்லா விடங்களிலும் செறிய, அதனைத் தேவர்கள் பார்த்து திருமாலிடம் போய் கைகளை விரித்து, "ஐயனே! இன்று சூரபன்மனின் அம்பிற்குத் தப்பிப் பிழைப்பதற்கு நமக்கு இடம் உண்டோ?" என்று வினவினர்.

எய்கின்ற அம்புகள் தம்மிடம் வருவதற்கு முன்னமேயே, தமக்கு அருகில் வந்தாற்போல நினைத்து, ஆறுமுகப்பெருமான் நூறு அம்புகளை விடுத்து, வரும் சூரபன்மனின் அம்புகளை அங்கேயே பொடியாயிடுமாறு செய்தார்.

மிகுதியான போர் இவ்வாறாக நடக்கும் சமயத்தில் சிவபெருமானின் மைந்தர் முருகப்பெருமான் விடுத்தருளிய அம்புகளை எல்லாம் சமமான அம்புகளை விடுத்து அகற்றி, அக்குமரப்பெருமான் ஏறிவந்த குதிரைகள் பூட்டிய தேரில் அசையும் கொடியை விரைவாக அறுத்துச் சூரபன்மன் ஆரவாரம் செய்தான். ஆரவாரம் செய்து வெண்மையான நிறம் கொண்ட சங்கை, பவளம் போன்ற வாயில் வைத்து முழக்கினான். பின்பு ஒரு முகூர்த்த நேரம்கூடத் தாமதம் செய்யாது சினம் கொண்டு பின்னரும் அம்புகளை விடுத்து முருகப் பெருமானின் தோற்றத்தை மறைத்தான்.

மறைக்கபட்ட அம்புக் கூட்டங்களை அம்பு மழையினால் அகற்றி சூரபன்மன் ஏறி நடத்துகின்ற கொடிஞ்சியையுடையதும் குதிரைகளால் இழுக்கப்பட்டதுமான தேரில் கட்டப் பட்டிருந்ததுமாகிய வெற்றிக் கொடியை முருகப்பெருமான் கொடிய ஏழு அம்புகளால் அறுத்து, அதை, அகன்றதும் ஆழமானதுமான கடலிலே சேர்த்தார். அவுணர் தலைவனான சூரபன்மனின் ஒப்பற்ற வெற்றிக் கொடியானது அறுபட்டு மீன்களையுடைய கடலில் விழுந்ததைப் பூதகணத் தலைவருள் ஒருவரான பானு கம்பன் என்பவர் பார்த்தார்.

கொடி அறுபட்டுக் கடலில் விழுந்ததனைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து பெருமை அடைந்து குதித்துப் பாடி ஆடிப் பானு கம்பன், தேவர்கள் துதிக்குமாறு, தன் ஆயிரம் வாய்களாலும் விரைவாக ஒண்மையான திரண்ட சங்குகளை வைத்து ஊதினார். பானுகம்பன் ஆயிரம் சங்குகளை வாய் வைத்து ஊதவும், அதன் ஓசை முருகப்பெருமானின் வெற்றியை உணர்த்த, திருமாலின் தூய சங்கும் முழங்கியது. இத்தகைய சங்கு ஒலிகள் எழுந்தபோது தேவர்கள் அனைவரும் அக்கினி தேவனைப் பார்த்து "ஓ அக்கினியே! ஒளியுடைய வேலை ஏந்திய முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் தேரின் மீது கொடி இல்லை; ஆதலால் நீ அப்பெருமானுக்குக் கொடியாய் இருப்பாயாக!" என்று சொல்லி அவனை அனுப்பி வைத்தனர்.

எரிகின்ற தீ வடிவினனான அத்தேவனும் தாவும் கோழிக் கொடியாகித் தேவதேவனான முருகப்பெருமானின் அழகான தேரின் மீது சென்று நின்று அண்டம் வெடிக்குமாறு கூவினான். ஒப்பில்லாது விளங்குகின்ற முருகப்பெருமானின் அழகான தேர்மீது நின்று கொண்ட கோழியின் வடிவம் கொண்ட அக்கினி, கொடிய அசுரர்களின் இரவுக்கு அழிவைத் தருகின்ற

விடியற்கால வைகறைப் பொழுதைக் காட்டுவதைப் போல அமைந்தனன். வன்மையில் மிக்க அசுரனான சூரபன்மன் அதைப் பார்த்து சினப் புன்னகையும் பெருமூச்சும் உண்டாக, எம்பெருமானின் தோள்களில் படுமாறு இரண்டாயிரம் அம்புகளை எடுத்து மன வேகத்தைவிட மிக்க வேகமாகச் செல்லும்படி விடுத்துத் தேவர்களும் மயங்குமாறு ஆரவாரம் செய்தான். உள்ளத்தில் தெளிவு உடையவர் காண்கின்ற ஒப்பற்ற மூல முதல்வனான முருகக் கடவுளின் திருத்தோள்கள் மீது படும்படி சூரபன்மன் விட்ட அம்புகள் அனைத்தும் மேலான முழுமுதற்பொருளான சிவபெருமானின் நெற்றிக்கண் தீயால் இறந்துபட்ட மன்மதனின் உடலைப் போல, எரிந்து தூள் தூளாகித் திசை எங்கும் பரந்தன.

இவ்வுலகத்தில் நின்று போர் செய்த சூரபன்மன் திடீர் என அச்சம் கொண்டு வான வெளியில் சென்று நிற்க, அவனது செயலைப் பார்த்து ஆறுமுகப் பெருமான் தாமும் வானத்திலே போய், அவனுடன் போரிட்டார். அவன், முருகப்பெருமானுடன் ஓரிமைப் போது நின்று போர் செய்து, பின் அப்பெருமானுடன் போர் செய்வதற்குச் சொல்வதற்கரிய மாயைச் செய்வானாயினன். வானத்தில் நின்று சூரபன்மன் விரைவாக மறைந்து சென்று பின்னும் பூமியில் வர, அவன் நின்ற அந்தப் பூமியில் குமரக் கடவுள் விரைவாக வந்து கொடிய போர் செய்யவும், அவன் அந்த இடத்தினின்று மறைந்து இடம் அகன்ற தூய்மையான தண்ணீர்க்கடல் நடுவில் காணப்பட்டான். அந்த இடத்துக்கும் முருகவேள் சென்று வீரப் போர் செய்யும் போது, பின்னும் சூரபன்மன் மாயையால் மறைந்து திக்கின் எல்லையில் சென்று வெளிப்பட்டு நின்றான். அந்த இடத்துக்கும் முருகப்பெருமான் 'ஏ' என்று உரைக்கும் கால அளவுக்குள் சென்று பெரும் போர் செய்தார். செய்யவும், சுடும் தீப்பொறிகளைச் சிந்தும் வேலையுடைய சூரபன்மன் பின்னும் மறைந்து பாதலவுலகத்தில் சென்றான்.

இவ்வாறு பலவிடங்களுக்கும் போய்ப் போர் செய்கின்ற காலத்தில், அசுர மன்னனான சூரபன்மன் அண்டகோளத்தின் மீது விளங்கும் வாசலுக்குள் சென்றான். குமரவேளும் அந்த இடத்துக்குச் சென்று எதிர்த்துப் போர் செய்து, அவன் ஏறியிருந்த குதிரைகள் பூட்டப்பட்ட தேரை எமனைப் போன்ற அம்பால் அழித்து வெற்றி அடைந்தார். குதிரைகள் பூட்டப்பட்ட தேர் அழியவும், சூரபன்மன், 'இந்திர ஞாலம்' என்னும் வன்மையுடன் மணிகள் பொருந்திய பெரிய தேரை நினைத்தான். நினைத்த அளவிலே அது வானில்

வரவும், அச்சூரபன்மன் அத்தேர்மீது ஏறிப் போர் செய்தான். நெருங்கி நின்று போர் செய்கின்ற காலத்தில் முருகவேள் தன் அம்பினால் அண்டத்தில் உள்ள வழியை அடைத்தார். அதனால் அடுத்த அண்டத்தில் உள்ள படை வராமல் நின்றது. இவ்விரண்டையும் சூரபன்மன் கண்டு, சினந்து, சீறி, தான் பிடித்துள்ள வில்லை வளைத்து திறமையுடனே செம்மையான அளவில்லாத அம்புகளைச் செலுத்தி, அண்டத்தில் உள்ள வழியைத் துளைத்து நெடிய கணைகளான கதவுகள் முழுமையும் அறுத்து, நுண்ணிய பொடியாக்கி வானத்தில் சுழலுமாறு செய்தான்.

உடனே அண்டத்திற்கு அப்பால் உள்ள தேர்க் கூட்டங்களும் யானைக் கூட்டங்களும், வலிமை பெற்று விளங்கும் குதிரைப் பந்திகளும், அச்சம் பொருந்திய அசுர வெள்ளங்களும், திடீர் என்று அந்த இடத்துக்கு வந்து போர்த் தொழிலில் முயன்று குமரவேளைச் சுற்றி சூழ்ந்தன. பரந்து நெருங்கிய படைக்கடலைப் பார்த்து நம் முருகப்பெருமான் தீயை உமிழ்ந்த தன்மையைப் போல நெடுமூச்சான வாயுவை விட்டு சற்றே அதட்டினார். அந்த அதட்டலால் வான் அளாவ உயர்ந்து குவிந்து கிடந்த இலவம் பஞ்சு மலையில் தீப்பிடித்தது போல் அப்படை முழுவதும் புழுதியாகி உலகத்தை மூடிக் கொண்டது.

முழுமுதற் கடவுளான முருகப்பெருமான் விட்டருளிய படைக்கலங்கள் எல்லாம் பலகோடி ஒளி பொருந்திய சூரியர்களும் அக்கினிகளும் பாம்புகளும் போல் வடிவுகொண்டு பகைவனின் படையாக இங்கு வந்தவனவற்றை அரை நொடிப் பொழுதிற்குள் கொன்று குவித்தன. அப்பெருமானால் அனுப்பப்பட்டுச் சென்ற ஐந்து வகையான ஆயுதங்களும் இந்த இடம் நீங்கலாக உள்ள ஆயிரத்தெட்டு அண்டத்தின் பரப்புகளிலும் போய், அங்கு அழியாமல் இருந்த படைகள் எல்லாவற்றையும் கொன்று உலாவின.

மழு, சூலம், தண்டம், எழு போன்ற ஐந்து வகையான படைக்கலங்களும் மற்ற அண்டங்களிலும் உள்ள படைகளைக் கொன்று விரைவுடனே உலவவும், பகைவனான சூரபன்மன் சினம் கொண்டு இச்செயலைப் பார்த்து, "இப்போது ஒரு கணப் போதிற்குள் இவனது உயிரை அழிப்பேன்" என்று சொன்னான். சூரபன்மன் இவ்வாறு சொல்லி, முன் நாளில் எமனது உயிரைக் குடித்த வன்மையுடைய அடியையுடைய சிவபெருமானால் அருளப்பெற்ற,

மாற்றுவதற்குக் கூடாத சக்கரத்தை எடுத்து வணங்கி துதித்துக், காற்றைவிட விரைவாக செல்லுமாறு முருகப்பெருமான் மீது ஏவினான். சூரபன்மன் எய்த சக்கரப் படையானது எல்லாரும் அஞ்சுமாறு விரைவாகக் போய் நெருங்கியவுடனே முருகப்பெருமான், விளங்கும் தன் கையை நீட்டி, வட்டணை செய்து கொண்டு வரும் சக்கரப் படையை 'வருக' என்று பிடிக்க, சூரபன்மன் இதுகண்டு வியந்து வெட்கி நின்றான்.

தேவர்கள் மலர் மழை பொழிந்தனர். சூரபன்மன் தேரும் தானுமாக விரைவாக மறைந்து, திறந்து வைக்கப்பட்ட அண்டகூடத்தின் சுவர் வாயில் வழியாக ஆரவாரம் செய்து கொண்டு அறைகூவல் விடுத்தவனாகப் புகுந்து அப்பால் உள்ள அண்டத்துக்குச் செல்ல, அதை அழிவற்ற முருகவேளும் பார்த்தருளி அக்கொடியவனைத் தொடர்ந்து போனார். ஆறுமுகப் பெருமான், தன் மனம் போல் செல்லும்படியான பெரிய தேருடன் காசிப முனிவரின் மைந்தனான சூரபன்மன் நின்ற இடத்தில் செல்லவும், உடனே அவன், எம் முருகப்பெருமானுடன் பெரும் போர் செய்து அழிக்கத் தக்க ஆற்றலையுடைய மாயையின் தன்மையினால் அப்பால் உள்ள அண்டத்துக்குப் போனான்.

சூரபன்மன் இவ்வாறு பூமியின் அண்டங்கள் முழுவதும் மின்னலைப் போல் சென்று தோன்றி அவ்வவ்விடங்களிலும் நின்று கொடிய போர் செய்து பின்னும் மறைந்து செல்ல, நம் இறைவனும் அந்த அண்டங்கள் தோறும் பகைவரை விடாது சென்று போர் செய்து கொண்டே போனார். சூரபன்மன் திரும்பவும் அந்த அண்டத்தில் உள்ள மகேந்திர நகரின் எல்லைக்குள் வந்தான். முன்னே செல்கின்ற நிழலைத் தொடர்ந்து செல்பவர்களைப் போன்ற எம்பெருமானும் சினத்துடன் விரைவாக அவனுடனே அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்.

முருகப்பெருமான் தலைவனைத் தொடர்ந்து வந்துள்ளான் என்று அறிந்த அசுரப் படைகள், சுடுகின்ற தீயைப் போல் பொங்கிச் செவ்விய கைகளில் இருந்த படைக்கலங்களை எய்தபடி முருகப்பெருமானின் அருகில் சூழ்ந்து ஆரவாரம் செய்தனர். முருகபெருமானும் அந்த அசுரப் படையினது செயலைப் பார்த்துச் சிரித்தார். அவ்வளவில் பகைவரின் படைகள் முன்காலத்தில் திரிபுரங்கள் போல் சாம்பலாகி வெந்து அழிந்தன. தந்தையின் செயலை மைந்தனும் செய்வது தானே பொருத்தம்!.

மணம் வீசும் மலர் மாலை சூடிய முருகப்பெருமானின் சிரிப்பால் படைகள் முழுமையும் விரைவாக நுண்ணிய துகளாகி விழவும், சூரபன்மன் ஒருவன் மட்டுமே தனியனாய் நின்றான்.

அப்போது தன் எதிரில் தோன்றிய முருகப்பெருமான் புன்னகை செய்த தன்மையும், தன் படைகள் எல்லாம் அழிந்த தன்மையும், தான் தனியனாக நிற்கும் தன்மையும், வன்மை பெற்ற வீரர்களுடனே பூதப் படைகள் ஆரவாரம் செய்யும் தன்மையும், துன்பம் உடைய சூரபன்மன் பார்த்துத் தன்மனத்துக்குள் இவ்வாறு நினைக்கலானான். "எனக்குப் பின் தோன்றிய தம்பியரும், மைந்தரும், பெரிய தன்மையுடைய அமைச்சரும், மற்றவரும் முன்னமேயே மடிந்து விட்டனர். அழியாது இருந்த படைகள் அனைத்தையும் இன்று பன்னிருகைகளையுடைய இச்சிறுவன் அழித்துவிட்டான். நான் தனியன் ஆனேன். இனி இங்கு நான் செய்ய வேண்டியது யாது?" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான். பின்னர் தன் தாயான மாயை என்பவளை நினைத்தான். நினைத்ததும் அம்மாயை அந்த இடத்துக்கு வந்து, அவன் எதிரே நின்று, "பெறுவதற்கு அரிய பேராற்றல் உடைய மகனே! நீ தனியனாக நின்று மனம் தளர்ந்து அழைத்தாய்! நீ எண்ணியது யாது?" என்று வினவினாள்.

நடந்தவற்றையெல்லாம் அறிந்திருக்கும் மாயை இவ்வாறு வினவவும், அவளுடைய மைந்தனான சூரபன்மன், "தாயே! தக்க வீரத்தையுடைய தம்பியரும், மைந்தரும், அமைச்சரும், படைகளும் எல்லாம் அழிய, நான் ஒருவன் மட்டும் அழியாது இருக்கின்றேன். இனி இறந்தவர் அனைவரும் எழுதற்கு ஏற்ற வழியினை உரைப்பாயாக!" என்றான். அதைக் கேட்ட மாயை நகைத்து, "மைந்தா! நீ உனக்குள்ள படைகள், சுற்றத்தினர் என்ற எல்லாரும் இறக்கத் தனித்தவனாகியும் தேவரைச் சிறை விடுப்பதைப் பற்றி நினைத்தாயில்லை. இன்னும் ஆறுமுகப்பெருமானுடன் போர் செய்ய எண்ணுவாயானால் பெற்ற பெரிய செல்வத்தை இழந்தவன் போல் ஆகி விடுவாய். "பெரிய பன்னிரண்டு திருத்தோள்களை உடைய பகவானைச் சிறுவன் என்று நினைக்காதே. அவனது கையில் உள்ள வேலால் விரைவாக நீ இறப்பாய்; இழக்கின்ற உயிரை உடைய நீ என் சொல்லைக் கேட்க மாட்டாய். தலை விதியை யாரேனும் வென்றது உண்டோ? என்றாலும் உன் உள்ளம் மகிழ ஒன்று சொல்கிறேன் கேள்! இறந்தவர் உயிர் பெற்று எழவேண்டுமானால் பெரும் புறக்கடலுக்கு ஒருபுறமாக மங்கலம் பொருந்திய

'அமுதசீத மந்தர கூடம்' என்ற ஒரு மலை உள்ளது. அந்த மலையை இந்த இடத்துக்கு கொண்டுவா. உன் எண்ணம் நிறைவேறும்'' என்று கூறி மாயை மறைந்தாள்.

இவ்வாறு மாயை சொல்லிவிட்டு செல்லவும், அவளது சொல்லை நீலமலை போன்று நின்ற சூரபன்மன் கேட்டு ''நம் தாய் உரைத்தது நன்று. போர்க் களத்தில் இறந்த எல்லாரும் உயிர் பிழைக்கும் வழி இதுவே ஆகும்'' என்று நினைத்து மகிழ்ச்சி மிக்கவன் ஆகி அமுத மந்தர மலையைக் கொண்டு வருவதற்கு யாரை அனுப்புவது என்று மாயை சூழ்ச்சி வெல்ல சூரபன்மன் எண்ணி தேரினின்றும் இறங்கி தெய்வத் தன்மையுடைய சிங்க வெற்றினுடைய முதுகின் மேலே ஏறினான். 'இந்திர ஞாலம்' என்ற தேரை நோக்கிச் சூரபன்மன் , ''நீ என் எண்ணத்தைப் போல விரைந்து சென்று, பெரும்புறக் கடலின் பக்கத்தை அடைந்து பொருத்தி, இறந்தவர்க்கு திரும்ப உயிரை அளிக்கின்ற அமுதம் கொண்ட மந்தர மலையை - அமுதசீத மந்தரகூட மலையைப் பெயர்த்து எடுத்துக் கொண்டு இங்கு வருவாயாக!'' என்று சொன்னான்.

சிறந்த மாயத்தையுடைய பெரிய இந்திர ஞாலம் என்ற தேரானது சூரபன்மன் உரைத்ததைக் கேட்டது. ஒரு கணப் பொழுதிற்குள் ஏழுகடல்களுக்கும் அப்பால் உள்ள பெரும்புறக் கடலுக்கு அருகில் சென்று, அழிவில்லாது அங்கு நிற்கின்ற அமுத சீத மந்திரகூட மலையைப் பெயர்த்துத் தன்னிடம் வைத்துக்கொண்டு, சென்ற வழியே திரும்ப விரைவாக மகேந்திர நகரத்தை அடைந்தது. அப்போது இந்திர ஞாலத் தேரானது கொணர்ந்த ஒப்பில்லாத மந்தர மலையின் உருவில் வந்த அமுதுசீத மந்தர மலைக் காற்றானது வீச, அந்தநாள் வரைக்கும் கொடிய போரைச் செய்து, கரிய காலன் உயிரை உண்ண இறந்து விழுந்த படைகள் யாவும் விரைவாய் ஆலகால நஞ்சு தோன்றினாற் போல் எழுந்தன.

அமுத மந்தரமலையின் மெய்க்காற்று உடலில் பட்டதால் குதிரைக் கூட்டங்கள் முழுமையும் உயிர்பெற்று எழுந்தன. பனைமரம் போன்ற நீண்ட துதிக்கையையுடைய யானைக் கூட்டம் முழுவதும் உயிர் பெற்றெழுந்தன. வேகத்தையுடைய தேர்கள் இழுத்துச் செல்லும் சிங்கக் கூட்டங்கள் எல்லாம் உயிர் பெற்றன. உடலில் உண்டான புண்கள் எல்லாம் நீங்க அசுரப் படைகள் அனைத்தும் உயிர் பெற்றெழுந்தன. உருவம் இல்லாமல் உடல்கள் அழிந்த உயிர்களும், மார்பு, கால்கள், கைகள், தலைகள், தோள்கள், முதலிய

உறுப்புகள் குறைந்து அழிந்த உயிர்களும், தீயால் உண்ணப்பட்டுச் சாம்பலான உயிர்களும் கூட உயிர் பெற்றெழுந்தன.

எழுந்து பெரிய தண்டுகளையும், எழுக்களையும், தோமரங்களையும், வச்சிரங்களையும், வாள்களையும், அம்புகளையும், விற்களையும் இன்னும் பல வகையான படைக்கலங்களையும் தாங்கிக் கொண்டு நிற்கின்ற அசுரப் படைகளும், மலையைப்போன்ற வான் அளாவிய யானைகளும் குதிரைக் கூட்டங்களுமாக ஒன்று சேர்ந்து, பெரிய அண்டம் வெடிக்குமாறு ஆரவாரம் செய்தன. சிறந்த சிங்கமுகாசுரன் எழுந்தான். சூரியனின் பகைவனான பானுகோபன் எழுந்தான். அக்கினிமுகனான கொடியவன் எழுந்தான். இளங்குமரனான வச்சிரவாகுவும் எழுந்தான். தரும தேவனின் இரண்டு மைந்தரும் எழுந்தனர். மூவாயிரம் வீரர்களும் எழுந்தனர். மற்றவர்கள் எழுந்தனர். இவர்கள் எல்லாம் இவ்வாறு உயிர்பெற்று எழுந்து அளவில்லாத படைகளுடன் ஆரவாரம் செய்து கொண்டிருந்த சமயத்தில், குதிரைகள் பூட்டப்பட்ட இந்திர ஞாலம் என்ற தேர் சூரபன்மன் எதிரில் வந்தது.

இச்செயலைப் பார்த்ததால் அவன் மகிழ்ந்தான். ஆரவாரம் செய்தான்; இந்திரன் முதலான தேவர்களை இகழ்ந்தான்; வியப்புக் கொண்டான்; தன்னைப் பெற்ற தாயைப் புகழ்ந்தான்; புளகாங்கிதம் எய்தினான்; மனமகிழ்ச்சி அடைந்தான்; சிரித்தான்.

தேவர்கள் இறந்து எழுந்த அசுரப் படைகளுக்கு அஞ்சி, கிளிகள், புறாக்கள், மயில்கள், நிறம் விளங்கும் அன்னங்கள், காக்கைகள், கரிய குயில்கள், பேரோசையுடைய ஆந்தைகள், தேன் உண்ணும் வண்டுகள், நீர்க் காக்கைகள் முதலிய பல பறவைகளின் உருவங்களைக் கொண்டு பறந்து மறைந்தனர்.

வெற்றி வேலேந்திய குமரக்கடவுள், நிகழ்ந்த நிகழ்வு அனைத்தையும் கண்டு, எதிரே நின்ற பகைவனான சூரபன்மனின் கருத்தையும், வல்லவளான மாயை கூறிய வழியையும், அவள் கூறிய வழியால் வந்த அமுத மந்தரத்தின் இயல்பையும், அதனால் பிழைத்தெழுந்த பரிவாரக் கூட்டங்களையும் பார்த்து, 'நல்லது, நல்லது' என்று நகைத்தபடி இருந்தார்.

அப்போது சிங்கமுகன், பானுகோபன், மற்ற வச்சிரவாகு முதலான மைந்தரும் தருமகோபன், படைத் தலைவர் முதலான அனைவரும் சூரபன்மன் எதிரில் போய் வணங்கி ''எம் அரச பெருமானே! நீ இங்கு

நிற்பாயாக! நாங்கள் அனைவரும் போய்க் கந்தவேளான சிறுவனுடன் அவனுடைய படை வீரர்கள் எல்லாரையும் கொன்று குறுகிய வடிவுடைய பூதர் கூட்டத்தையும் அழித்து, அதிக விரைவாக வந்து, உன் அடிகளை வணங்குவோம்!'' என்று வீரர்கள் இவ்வாறு சொல்லவும், சூரபன்மன் அவர்களைப் பார்த்து, ''நீவீர் உரைத்தது நல்லதே! என்னை வணங்கிய நீங்கள் பகைவனின் வன்மையையும் வீரத்தையும் அழித்து வெற்றியை எனக்கு அளிப்பீராக!'' என்று சொல்லி அனுப்பினான்.

பலவகையான படைகளும் அப்படைகளுக்குத் தலைவரான அசுரர் கூட்டத்தவரும் வேகமான நடையுடன் வந்து தன்னைச் சூழ்ந்து கொண்டதை ஆறுமுகப்பெருமான் பார்த்து, உயிர்க் கூட்டம் எல்லாவற்றையும் அழிக்கின்ற உருத்திர மூர்த்தியின் கணையை எடுத்துத், திருக்கைகளில் வைத்துக் கொண்டு அதற்குச் செய்ய வேண்டிய பூசை முதலியவற்றை மனத்தால் செய்து முடித்து, ''சிறந்த சிங்கமுகன் முதலான அசுரர் கூட்டத்தையும் அச்சமின்றி எதிர் வந்து நிற்கும் படைகளையும் விரைவாக நீ கொல்வாயாக!'' என்று திருவாய் மலர்ந்தருளி விடுத்தார்.

கந்தவேள் விடுத்தருளிய கணை பாம்புக் கூட்டமும், நஞ்சும், இடிக் கூட்டங்களும், உருத்திரரின் உருவங்களும், அக்கினியும் கடல் போலும் பெரிய பூதங்களும் அளவற்றனவாயுள்ள தேவர் ஆயுதங்களுமாக விரிவடைந்தது. இவ்வாறு சிவக்கணையானது பெரிய அண்டப்பரப்பின் எல்லா இடங்களிலும் நெருங்கி ஆரவாரித்து எழுந்து, திடீர் என்று சேர்ந்து சூழ்ந்துகொண்டு, முன்பு அமுத மந்திரத்தால் பிழைத்தெழுந்த அசுரப்படைகள் எல்லாவற்றையும் அழித்துப் பகைவனான சூரபன்மனின் உடன் பிறந்தவரான சிங்கமுகன் முதலிய உறவினர் அனைவரையும் ஒருசேரக் கொன்றது. சிவக் கணையானது முற்பட்ட கொடிய சூரபன்மனின் பரிவாரங்கள் எல்லாவற்றையும் அழித்து, பெரிய இந்திர ஞாலம் என்னும் தேரின் மீதிருந்த பெரிய அமுது மந்திரம் என்ற மலையையும் தூளாகுமாறு அழித்துக் கந்தவேளிடம் திரும்பி வந்தது.

சிங்கமுகன், முன்நாளில் கதிரவனைச் சினந்த பானுகோபன், அக்கினிமுகன், வச்சிரவாகு, நூற்றிருவர், மிக்க வன்மையுடைய மூவாயிரவர், தருமகோபன் முதலியவர், அகன்ற கடல் போன்ற படைகளுடன் தம் அனைவரையும் எழுப்பிய மந்தர மலையுடனே அழிந்து அந்த இடத்திலேயே

விழுந்தனர். வேறு துணையில்லாத சூரபன்மன் நடந்த அவை எல்லாவற்றையும் பார்த்து மனம் தளர்ந்து, வன்மை இழந்து, கவலை அடைந்து, துன்பம் கொண்டு, உடல் மறந்து, இழிவை அடைந்து பெருமூச்சு விட்டுச் சினம் கொண்டு தனியவன் ஆகி நின்றான். அவ்வாறு நின்ற சூரபன்மன், மிகவும் சினம் கொண்டு, ''நான் என் படைகளை அழித்த சிறுவனையும் என்னைப் போல தனித்தவனாகச் செய்து வெற்றி பெறுவேன்!'' என்று தன் மனத்தில் எண்ணிக் கொண்டு அக்கினிக் கண்ணையுடைய சிவபெருமான் அளித்த இந்திர ஞாலத் தேரைப் பார்த்து, ''கொச்சுக் தன்மை கொண்ட மழலை சொல் பொருந்திய இச்சிறுவனின் அருகில் சூழ்ந்துள்ள வச்சிரம் போன்ற பற்களையுடைய கொடிய பூதர்களையும், அருகில் சூழ்ந்துள்ள வன்மை பொருந்திய கையில் வில் படைகளையுடைய வீரர்களையும், வாரிச்சென்று அண்ட முகட்டில் கொண்டு வைத்து அங்கே காவல் இருப்பாயாக!'' என்று சொன்னான்.

சூரபன்மன் அவ்வாறு சொன்னவுடன், ஓடிச்சென்று தகுந்த திறமையுடைய வீரவாகு முதலியவரையும் பெரிய பூதப் படைகளையும் கிளையுடனே வாரி அவர்களின் மனத்தை மிக்க மயக்கத்துக்கு உள்ளாக்கியது. அந்தத் தேர் கடல் போன்ற படைகளை வாரிக் கொண்டு, அவர்களின் மனத்துக்கு மயக்கத்தை உண்டாக்கித் தன்னிடம் சுமந்து கொண்டு விரைவாகப் போய் அண்டகோளத்தை அடைந்து கொடிய சூரபன் மனின் ஆணை பிறழாமல் அவனது ஆணையின் படி அங்கேயே காவலாக இருந்தது.

முருகப்பெருமான் பெரிய படைக் கடல் நீங்கித் தனித்தவராக நின்றார். அதைச் சூரபன்மன் பார்த்து 'நம் தேரின் வன்மை நன்றாக இருக்கின்றது' என்று எண்ணி நகைத்தான். அதைத் தேவர்கள் பார்த்துப் பெரிய தளர்ச்சி அடைந்தனர். தனித்தவராக நிற்கும் எம்பெருமான், சூரபன்மனிடம் உள்ள ஆலோசனையையும், மாயத் திறத்தால் பூதக்கூட்டங்களையும், துணைவராக உள்ளவர்களையும், வாரி எடுத்துக் கொண்டு மேல் எழுந்து சென்ற தேரின் இயல்பையும் உணர்ந்தார்.

உலகம் முழுவதும் பரந்து நின்ற ஆறு திருமுகங்களையுடைய முருகப்பெருமான், தாவுகின்ற இயல்புடைய இந்திர ஞாலம் என்ற தேரைப் பார்த்துத் தேவர்கள் துதிக்க: முருகப்பெருமான், ''வளமும் செல்வ வளமும்

உடைய மாயத்தேரே! நீ இங்கு நில்; முன் நாளில் வரம் பெற்றுள்ள சூரபன்ம னிடத்துக்குச் செல்லாதே! அவன் இறப்பது நிச்சயம்!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பாண்டிலை உடைய அந்தத் தேரானது, அந்த இடத்தில் அதனைக் கேட்டுச் சூரபன்மனிடம் சொல்வதற்கு அஞ்சி, முன் இருந்த வன்மை இழந்து, இறப்பு பிறப்பு அற்ற சிவபெருமானின் மகனான குமரப்பெருமானின் அருகில், அவரது ஆணைப்படி நின்றது.

இதைக் கண்ட சூரபன்மன் அவ்விடத்தில் கொடிய வலிய ஒரு வில்லை வளைத்து விரைவாகப் பன்னிரு கைகளையுடைய குமரப் பெருமான் மீது மின்னல் போன்ற அம்புகளை எய்தான். கங்கையின் மைந்தனான முருகப்பெருமான், அப்போது மிகுந்த சினம் கொண்டு ஒரு வில்லை வளைத்து அம்புகளை எய்து, சூரபன்மன் எய்த அம்புகளை யெல்லாம் அழித்தார்.

சூரபன்மனும் சினம் கொண்டு பெருமானின் தேரை ஓட்டுகின்ற வாயுதேவனின் உடல் முழுவதையும் வெளியிடம் இல்லாதபடி செம்மையான அம்புகளை விடுத்தான். சூரபன்மனின் அம்புகள் பட, அதனால் வாயுதேவன் புலம்பி வருந்தி, மயங்கித் தேரில் உள்ள குதிரைகளை ஓட்டாமல் இருந்தான். அத்தன்மையை அருளே வடிவமான முருகப்பெருமான் கண்டு ஆயிரம் அம்புகளை வான் வழியாகச் செல்லுமாறு விடுத்து, கொடிய சூரபன்மன் கையில் பிடித்திருந்த வில்லை ஒடித்துப் பல பெரிய துண்டுகளாக்கிட, அதைத் தேவர்கள் பார்த்து மகிழ்ச்சியால் கூத்தாடுமாறு செய்தருளினார்.

கையிலே கொண்டிருந்த வில் முரிந்திடவும், சூரபன்மன் தமக்கு நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் அளித்திருந்த மூன்று உச்சிகளை உடைய சூலத்தை எடுத்துக் கொண்டு வளைந்த புறமயிரையுடைய சிங்க வாகனத்தில் அமர்ந்து, முருகப்பெருமானின் பெரிய தேரின் அருகில் சென்றான். தான் ஏறிச் சென்ற ஆண் சிங்கமானது சூரபன்மனின் மனத்தைப்போல விரைந்து சென்று, மாண்புடைய தன் கொடிய கூரிய நகத்தால் எம்பெருமானின் வட்டமான தேரை இழுக்கின்ற குதிரைக் கூட்டங்கள் துடிக்கும் வண்ணம் அடித்து அங்கு அருகில் நின்ற பூதங்கள் அதிர்ச்சி அடையுமாறு ஆரவாரம் செய்தது. இதைக் கண்ட எம்பெருமான் சினந்து ஓர் அம்பெய்து அச் சிங்கத்தைக் கொன்றார்.

தன் ஊர்தியான ஆண் சிங்கமானது இறந்து விழவும், அதை சூரபன்மன் கண்டு, தரையிலே குதித்து, முருகப்பெருமானின் கையிலே தான் விடுத்த சூலம் சென்றிருப்பதை உணர்ந்து, யுக முடிவு காலத்தில் உலகத்தை நோக்கி வருகின்ற வடவைத் தீயைப் போலச் சினந்து "என் தேரினுடன் சூலத்தையும் கவர்ந்து கொண்டு, ஆற்றல் பொருந்திய சிங்கத்தையும் கொன்று பகைவனான இவன் வன்மையுடையவன்போல் நின்றான். அவனையும் பூதக் கூட்டத்தையும் மற்றுமுள்ள தலைவர்களை யெல்லாம் நானே ஓர் உருவம் கொண்டு விழுங்குவேன்'' என்று மனத்தில் நினைத்து ஒப்பற்ற மாயத் தன்மையினால் பூமியில் நின்ற சூரபன்மன், சிம்புள் பறவையைப் போல ஓர் உருவம் கொண்டு, ஒலியையும் அலையையும் உடைய கடலைப்போல, ஆரவாரத்துடன், இரண்டு இறகுகளையும் கொண்ட பெரிய மலைபோல் நின்றான்.

உரல் போன்ற கால்களையுடைய யானைகளை அழிக்கும் சினத்தை யுடைய சிங்கத்தின் மீதேறி வரும் தாமரை மலர்களைப் போன்ற கால்களை உடைய வீர இலக்குமியானவள், போர்க்களம் என்ற நாடக அரங்கில் வீர நடனம் ஆடுவதற்கேற்ற பறையை முழக்கியதைப்போல் பூமாதேவியின் உடல் பிளக்குமாறு இறகுகளை அடித்துக்கொண்டு கொடிய சூரபன்மன் வானத்தில் பறந்து சென்றான்.

அப்போது கந்தவேளின் திருமுன்பு மயில் உருவம் கொண்டு வந்து நின்ற இந்திரன், பெரிய பூமி பிளவுபடவும் மேருமலையும் அதன் அருகே உள்ள மற்ற மலைகளும் நிலைகுலையவும், திக்கு யானைகள் சோர்ந்து விழவும், வலிய அலைகளையுடைய கடல் வற்றவும், பாம்புகள் அஞ்சவும், தன் இரண்டு இறகுகளையும் அடித்துக்கொண்டு பின்வரும் இவற்றைச் சொல்லலானான்.

''எம் மக்களையெல்லாம் வருத்தி அரிய சிறையிலே அடைத்துக் கெடுத்து, பலவகையான உலகங்களை ஆண்ட சூரபன்மன் சிம்புள் பறவை உருவம் செல்லும் இடம் எல்லாம் போய் போர் செய்து வெல்வதற்கு, விரைவாக அடியேன் மீது ஏறியருளுக!'' மயில் பறவையாக வந்த இந்திரன் உரைத்ததும், மனவேகத்தைப் போல ஓடுகின்ற குதிரை பூட்டிய தேரினின்றும் இறங்கி பன்னிரண்டு கண்களையுடைய முருகப்பெருமான், அகன்ற இறகுகளையுடைய மயிலாக எதிரில் வந்து நின்ற இந்திரன் மீது ஏறி, வான வீதியில் மயிலைச் செலுத்தினார்.

சிம்புள் பறவை வடிவம் கொண்ட சூரபன்மன், மயில் வடிவமான இந்திரனின் பசிய தலையில் உள்ள தூவிகளை எல்லாம் பறித்து, முகம் முழுவதும் குத்திக் கொடிய இரத்தத்தை இறைத்து கரிய தொகையை இழுத்துத் துன்பத்தை உண்டாக்கினான். கந்தவேள் விடுத்தருளிய அம்புகள் கொடிய சூரபன்மனின் உடல் எங்கும் பட்டவுடன் பதை பதைத்து உதறிச் சிதறி எட்டாக உள்ள எல்லாத் திசைகளிலும், வானத்திலும், பெரிய கடல் சூழ்ந்த உலகத்தின் எவ்விடங்களிலும், தீப்பொறிகளைக் கண்கள் சிந்த, காற்றாடி போல் அலைந்து உலவினான். முருகப்பெருமான் திருக்கையில் தாங்கியுள்ள வேலைக் கவ்வி முறிக்க நினைத்து வேகமாக நெருங்கி வந்தான்.

சூரபன்மன் தனது வில்லைக் கடித்து எறிய எண்ணி வருதலை முருகவேள் பார்த்துத், தாமரை மலர் போன்ற ஒரு திருக்கையில் இருந்த ஒப்பில்லாத ஒள்ளிய வாளை வீசிப் பகைவனின் பறவையுடலை இரு துண்டாக்கிக் கீழே விழுமாறு வெட்டியருளினார். திருமால் நான்முகன் முதலான தேவர்கள் எல்லாம் அதைப் பார்த்து மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்து ஆடலாயினர்.

வாகை மலர் மாலை சூடிய வேலையுடைய முருகப்பெருமானின் திருக்கையில் இருந்த கூரிய வாளால் சிம்புள் பறவையின் உருவத்தை வெட்டவும், உடனே கொடியவனான சூரபன்மன், தேவர்கள் எல்லாம் துன்பம் அடைய அண்ட முகட்டைத் தொடுமாறு உயர்ந்து, பூமியாய் நின்றான்.

பூமியின் வடிவமாக நின்ற சூரபன்மன் ஏழ் என்னும் எண் கொண்டவையும், ஆழமானவையுமான கடல்களை இடையே தூர்த்து, தன் உயர்வுக்குக் கீழாகச் செல்கின்ற சூரியர்களின் தேர்களைக் தடை செய்து, வாயுக்கள் ஆகாயத்தில் போகின்ற மார்க்கத்தைத் தடுத்து, அகன்ற திசைகளை மூடி நின்றான்.

சூரபன்மன் பூமி வடிவமாக நிற்பதை, கங்கையாற்றை அணிந்த சிவபெருமானின் மைந்தரான ஆறுமுகப் பெருமான் கண்டு சினம்கொண்டு, சூரபன்மனால் இயற்றப்பட்ட மாயை நன்றாகவுள்ளது என்று சொல்லி, அழகிய இருக்கையிலே இருந்த வில்லை வளைத்துக் கொடிய அம்புகள் ஏழைத் தொடுத்து அவற்றை நோக்கி, "நீண்ட வானம் வரை எழுந்து நிமிர்ந்து கொடிய சூரபன்மன் என் முன்பு மண் வடிவமாக நின்றான். ஆதலால் நீங்கள் எழு கடல்கள் எண்ணுமாறு நீர் வடிவத்துடன் விரைந்து

போய் அவனை அழியுங்கள்'' என்று எவராலும் அறிதற்கு அரிய முருகப்பெருமான் விடுத்தருளினார்.

ஒப்பற்ற வேலை ஏந்திய முருகப்பெருமான் விடுத்தருளிய அம்புகள் உலகம் அனைத்தையும் ஊழிக் காலத்தில வந்து வளைத்து உண்கின்ற கடல்களின் கூட்டம் போல் நீரின் வடிவத்துடன் சீற்றத்துடனும் ஆரவாரத்துடனும் போய் அலை வீசிக் கொண்டு சூரபன்மன் கொண்டிருந்த வடிவத்தைச் சூழ்ந்து கொண்டன. எவர்க்கும் வணங்காத இயல்பு கொண்ட கொடிய சூரபன்மன் கொண்ட மண் வடிவத்தை உண்டு இல்லாமையாகச் செய்து, அந்த எழு அம்புகளும் நீரின் பழைய வடிவத்தை விட்டுப் போர்க்களத்தில் நின்று போர் செய்கின்ற திருவிளையாடலையுடைய எம்பெருமானிடத்துத் திரும்பி வந்தன.

அதனைச் சூரபன்மன் பார்த்து மண் வடிவத்தை விட்டு, கடல்கள் யாவும் உளவாக உலகத்தையும் வானத்தையும் உண்பதற்கு எழுந்து வந்ததுபோல், வன்மை பொருந்திய நீரின் வடிவத்தை அடைந்து, நம் இறைவன் எதிரே நீண்ட வானம் வரை எழுந்து உயர்ந்து நின்றான். பகைவனான சூரபன்மனின் பெரிய மாய வடிவத்தின் நிலையைப் பார்த்துக் கூர்மையான நூறு அம்புகளை வில்லில் தொடுத்து, ''நீங்கள் கொடிய சூரபன்மனிடத்துக்கு ஊழித்தீயின் வடிவமாக நெருங்கிச் சென்று தவறாது அழித்துத் திரும்பி வாருங்கள்'' என்று எம்பெருமான் உரைத்தருளினார்.

அந்த நூறு அம்புகளும் இறைவனின் ஆணைப்படியே கொல்லும் தன்மை கொண்ட தீயின் வடிவமாகச் சென்று, ஓர் இமைப்போதுக்குள், பகைவன் சூரன் கொண்டு நின்ற நீர் வடிவம் அழிய எப்பக்கங்களிலும் போய்க் குடித்தன. விடாமல் ஆரவாரம் செய்கின்ற நீர் வடிவம் எல்லாவற்றையும் உண்டு மகிழ்ந்து, அம்புகள் திரும்ப வரும்போது அவற்றின் செயல்களைச் சூரபன்மன் பார்த்துத் தீயின் வடிவத்தை எடுத்து அண்டகோளகை வரை உயர்ந்து நின்றான்.

சூரபன்மன் தீயின் வடிவமாக நின்றபோது, அதனைப் பரம்பொருளான கந்தவேள் பார்த்துச் சிரித்து, எமனைப் போலத் தொழிலால் ஒளிர்கின்ற செவ்விய அம்புகளை எடுத்து, ''நீங்கள் நீண்ட ஊழிக் காலத்தில் சுழன்று வீசுகின்ற சூறைக்காற்றைப் போல் சென்று சூரபன்மனின் பல மாயங்களையும் அழித்து வாருங்கள்!'' என்று திருவாய் மலர்ந்தருளி

விடுத்தார். விடுத்தவுடனே அந்த அம்புகள் விரைந்து போய் உலகம் முழுவதிலும் திக்குகளிலும் வானத்திலும் சூழ்ந்துள்ள வாயுக்களின் உருவங்களை அடைந்து கரிய புகை வடிவினனான சூரபன்மனின் உடலில் உள்ள தீ வடிவம் முழுவதையும் பொய்யாகுமாறு அழித்தன.

இவ்வாறு நான்கு நாட்கள் வரை பகைவன் விடாமல் போர் செய்து, பின்னரும் வேறு வகையான மாயத் தன்மைகளை உள்ளத்தில் எண்ணிப் பல வடிவங்களைக் கொண்டு வந்தனன். அவனுடைய மாய உருவங்கள், மூன்று தொழில்களையுடைய திரிமூர்த்திகளின் உருவங்களுடன் ஒரு பக்கத்தில் வரும்; அவர்களே அல்லாத மற்றத் தேவர், அசுரர், பிறர் என்று சொல்லும் இத்தகைய வடிவங்களுடன் ஒரு பக்கத்தில் வரும்; இந்திரனைப் போல ஒரு பக்கத்தில் வரும்; பூதம் போல் ஒரு பக்கத்தில் வரும்; ஆ! ஆ!. என்று சொல்லிக் கொண்டு எமனைப் போல் ஒரு பக்கத்தில் வரும்.

அவன் பேய் போல ஒரு பக்கத்தில் வருவான்; பிறழ்கின்ற கொடிய புகைப் படலங்களையுடைய தீயைப் போல் ஒரு பக்கத்தில் வருவான் எத்திசையிலும் விடாது உலாவுகின்ற வாயுக்களின் கூட்டங்களைப் போல் ஒரு பக்கத்தில் வருவான்; அகன்ற உலகத்தை நோக்கித் தாவுகின்ற அலைகளையுடைய கடலைப்போல் ஒரு பக்கத்தில் வருவான். நஞ்சினைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; பாம்பைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; இருளைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; இடியைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; மலையைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; தனது உருவத்துடன் ஒரு பக்கத்தில் வருவான்; சூரியனைப் போல ஒரு பக்கத்தில் வருவான்.

பல வகையினவான படைகளைப்போல ஒரு பக்கத்தில் வருவான்; உலகத்தைச் சூழ்ந்துள்ள திக்குகளில் பொருந்திய ஐராவதம் முதலான யானைகளைப்போல ஒரு பக்கத்தில் வருவான். நகைத்துக் கொண்டு வருகின்ற ஆண் சிங்கத்தைப் போல் ஒரு பக்கதில் வருவான். சிம்புள் பறவைபோல ஒரு பக்கத்தில் வருவான். அவன் தம் தம்பியான தாரகனைப் போல ஒரு பக்கத்தில் வருவான்; சினம் கொண்ட பார்வையுடைய கண்களை உடைய சிங்கமுகனைப்போல ஒரு பக்கத்தில் வருவான்; கடலின் பெண் குதிரையின் வடிவத்துடன் இருக்கும் வடவைத் தீயினையும் அழிக்கும் ஆற்றல் கொண்ட அக்கினிமுகன் என்னும் தன் மைந்தனைப் போல ஒரு பக்கத்தில் வருவான்.

இவ்வாறாக அவுணர் தலைவன் எங்கும் நெருங்கியதும் நம் தந்தையான முருகவேளைச் சூழ்ந்து கொள்ள அவற்றைக் கண்ட தேவர்கள் மனம் தளர்ந்து ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகமானது அழியும் காலத்தில், அதில் உள்ள உயிர்கள் துன்பம் அடைவதைப் போல அஞ்சி ஓடினர். தேவர்கள் அடைந்துஉள்ள பெரிய சிறையை அகற்றுவதற்காகவே அவதாரம் செய்து, நான்முகனைச் சிறையில் இட்ட முருகப்பெருமான் அந்த மாய விசித்திரத்தின் நிலைமையைப் பார்த்துத் தம் சிவந்த திருக்கையினால் ஆயிரங்கோடி அம்புகளை எடுத்து அவற்றைப் பார்த்து இதைச் சொல்லலானார்: "பகையை அழிக்கின்ற அம்பு என்ற தேவர்களே! நீங்கள் போய் உடல் வன்மை பொருந்தி நின்ற பகைவனான சூரபன்மன் எடுத்துள்ள பல உருவங்களையும் அடைந்து, அவனது மாயை முழுவதையும் அழித்து விலக்குவீராக!" என்று சொல்லி விடுத்தருளினார். முருகப்பெருமான் விடுத்தருளிய அம்புகள் விரைவாகச் சென்று, பகை கொண்டுள்ள ஒவ்வொரு வடிவுக்கு ஏழு ஏழு ஆகி எட்டாக உள்ள திக்குகளிலும் வானத்திலும் பெரிய பூமியிடத்திலும் நெருங்கி அவனுடைய மாயங்களை அழித்தன.

சூரபன்மன் சினத்துடன் அந்தப் போர்க்களத்தில் நின்றான். அப்போது கொலைத் தொழிலில் வன்மைமிக்க அவனது அம்புகள், வான் வழியாகத் திரும்பி அருகில் உண்டான அம்புக் கூட்டிற்குள் புகுந்தன. உடனே ஒளியுடன் கூடிய நீண்ட வேலை ஏந்திய செவ்வேள், சூரபன்மனைப் பார்த்துக் கூறலானார்: "சூரபன்ம! விருப்பத்தை அளிக்கின்ற மேகத்தின் நடுவில் தோன்றும் மின்னலைப் போல இவ்விடத்தில் எமது எதிரில் அளவில்லாத உருவங்களைக் கொண்டாய். நாம் அவை அனைத்தையும் அழித்தோம். இனி அழிவற்ற நம் விசுவரூபத்தினை (பெருவடித்தை)க் காண்பாயாக!" என்று சொல்லி, ஒலிக்கும் கடல், உலகம், திக்குகள், மாறுபாடற்ற புவனம், அண்டம், தேவர்கள், உயிர்கள் முதலான அனைத்துமாகியவை யாவும் ஆறு திருமுகங்களையுடைய எம்பெருமானின் திருமேனியில் அமைந்தவையே; வேறொன்றும் இல்லை என்று கூறும் வண்ணம் ஒரு பெரிய வடிவை எம்பெருமான் கொண்டருளினார்.

அப்பெரு வடிவின் உள்ளடிகளில் மலைகள் அனைத்தும், புற அடிகளில் நீர் நிலைகள் முழுமையும், கூர்மையான நகங்களையுடைய விரல்கள் முழுவதும் வானத்தில் உள்ள இடியேறுகளும், நாள்களும், கோள்களும் ஆகவும், இகழ்ச்சியில்லாத பரடுகளில் பெரிய நீர்க்கு இறைவனான

## 4. காங்கேய சுப்ரமணியர்

ஏகவக்த்ரம் த்ரிநயனம் தாடிமீகுஸுமப்ரபம்

கரண்ட மகுடோபேதம் குக்குடத்வஜ தாரிணம்

நீலோத்பலதரம் வந்தே மகராரூடமவ்யயம்

பரசும் பூர்ணகும்பம் ச ஸவ்யஹஸ்தேது தாரிணம்

அரணிம் குக்குடம் வாமே காங்கேய ஸ்வரூபகம்

பாடல வர்ணம்

ஒரு முகம், மூன்று கண்கள், மாதுளம்பூ, நிகர் ஒளி,

அடர்ந்த மகுடம், கோழிக்கொடி தரித்தல், நீலோற்பலம்

தரித்தல், அழிவில்லாதல்; வலது இரு கரங்களில் கோடலி,,

பூர்ணகும்பம், இடது கரங்களில் அரணிக் கட்டை, கோழி;

பொன்மய உரு (பாதிரிப் பூவர்ணம்).

வருணனும், சோமனும், நடுநிசி போன்ற கரிய உடலினனான நிருதியுடன் அரக்கர்களும் பொருந்தி நிற்க, அந்தப் பெரு வடிவத்தின் திரண்ட கணைக் கால்களில் சிறந்த முனிவர்களும் சிந்தாமணி முதலியவையும், வடிவு அமைந்த முழங்கால்களில் வித்தியாதரர் முதலியவரும், தொடைகளில் இந்திரனும் அவனுடைய மகன் சயந்தனும், தொடைகளின் அடிப் பகுதியிகளில் எமனும் காலனும், கடிதடத்தில் அசுரர்களும், விலாப் பக்கங்களில் மற்ற தேவர்களும் மூலாதாரத்தில் நாகர்களும், கோசப் பகுதியில் அமிர்தமும், கொப்பூழில் கருவில் பொருந்தும் உயிர்களும், மார்பில் பல கலைகளும், சிறிதாகப் பொருந்திய உரோமங்களில் அண்டங்களும், உள்ளங்கையில் சகல போகங்களும், மிக்க செல்வத்தையுடைய அகன்ற தோள்களில் சிவந்த கண்களையுடைய திருமாலும் நான்முகனும் மென்மையான பூவிதழ் போன்ற செவ்விய கை விரல்களில் தேவ மங்கையரும், கண்டத்தில் ஒல் என்று ஒலிக்கின்ற ஒலியும் அக்கினியும், அழகிய வாயில் வேதமும், பற்களில் எழுத்துகளும், நாவில் சிறந்த ஆகம பேதங்களும், நல்ல உதட்டில் மனுவின் வித்தைகளும், மூக்கில் வாயுதேவனும் (மனுவின் விஞ்சை - ஸ்மிருதி) அருள் பொருந்திய கண்களில் சந்திர சூரியரும், செவியில் திக்குகளும், அழகான நெற்றிப் பகுதியில் பிரணவமும், தலையில் பரமான்மாவும், முறையாகப் பொருந்திக் காணப்பட, மாறுபாடின்றி விளங்கும் தம் ஒப்பற்ற வடிவத்தைக் காணும் வண்ணமாகச் செய்து கொண்டு எம் முருகப்பெருமான் நின்றருளினார். அப்பெருமானின் அத்தன்மையைத் தேவர்கள் கண்டனர்.

தேவர்கள், சிறந்த சுடரையுடைய பலகோடி சூரியர்கள் நெருங்கி ஒன்றாக உதித்தாற் போல ஒளிவீசும் சிறந்த பெரிய திருவுருவத்தினைப் பார்த்து மனம் கலங்கி நின்றனர். அப்போது நின்மலனான முருகப்பெருமான் அபயக் கையுடையவராய் ''அஞ்சாதீர்கள்'' என்று கூறியருளினார்.

அந்தமும் ஆதியும் இல்லாத இந்தப் பெரிய உருவத்தை, களங்கமான நஞ்சைப் போன்ற சூரபன்மன் பார்த்து, வியப்புடன் நிற்க, ஞானியராலும் உணர்தற்கு ஒண்ணாத சிறந்த ஆறுமுக வள்ளல் அச்சூரபன்மனுக்குச் சற்று நல்ல அறிவை அளித்தருளினார். அளிக்கவும், அவன் இப்படி நினைத்தான்.

பெரும் போரைச் செய்து, என்னிடம் பொருந்தியிருந்தவர்கள் எல்லாரையும் பெயரே இல்லாமல் கொன்றழித்து, அழகிய என் குதிரை பூண்ட இந்திர ஞாலத் தேரையும் திரும்பி என்னிடம் வாராத வண்ணம்

செய்து "மிக்க வன்மையுடைய என்னால் எய்யப்பட்ட வெற்றியையுடைய எல்லாப் படைக்கலங்களையும் அழித்து விலக்கி, பின்பு, யான் செய்த மாய உருவங்களைக் கொடிய அம்புகளால் அழித்து, அண்டமும் எல்லாப் புவனங்களும் தேவர்களும் இன்னும் உள்ளவர்களும் தன்னிடத்தில் காணத்தக்க வடிவத்தினை இப்போது காட்டி என் கண் எதிரில் நிற்கின்ற சிறந்த அழகிய மயிலில் வீற்றிருக்கும் இந்த முருகப் பெருமானை அந்தக் காலத்தில் சிறுவர் என நினைத்திருந்தேன். இத்தகைய இவரது தன்மையை நான் அறியேன். ஆராயுமிடத்துத் தேவரில் சிறந்த திருமால் நான்முகன் என்பவர்கட்கும் மற்றத் தேவர்கட்கும் மற்றவர்க்கும் முதற்காரணமாக நின்றுள்ள முதல்வர் இம் முதல்வர் இவரே அல்லவா?

முன்னம் தூதனாக இங்கு வந்த வீரவாகு தேவன் ஒப்பில்லாத வேலையுடைய இவரை விருப்பு வெறுப்பு இல்லாத மேலான முழுமுதற் பொருள் எனக் கூறினான். அந்நாளில் அவன் உரைத்தவற்றையெல்லாம் உண்மையானவை என்று நான் நினைக்கவில்லை. இப்போது இப்பெருமானே முழுமுதற் பொருளான ஈசன் என்பதை அறிந்து கொண்டேன். மிகவும் உயர்ந்த உருவம் கொண்ட எம்மிடத்துக்கு வந்த தூதனாய் உரைத்த உண்மை மொழிகள் வாய்மையானவையே! நான் தவம் செய்து பெற்றுக் கொண்ட அண்டங்கள் முதலிய யாவும் ஆறு திருமுகங்களையுடைய தலைவரின் அழகிய திருவடிகளில் உள்ள மயிர்க்கால்களில் உண்டாகி நிற்கும்.

இங்கு எனது உயிர் போன்றிருந்த தம்பியான சிங்கமுகனும், இளைய மகனான இரணியனும், செவ்விய கையில் வேலை ஏந்திய இப்பெருமானைச் சிறுவர் என்று கருதாதே. இவர் நான்முகன் முதலியவரும் அறியாத பரமனே ஆகும் என்று உரைத்தனர். அவர்கள் அவ்வாறு உரைத்தவை உண்மையே யாயின. இப்பெருமானை வலமாக என் கால்கள் சுற்றி வர வேண்டும். அக் கைகள் தொழுதல் வேண்டும். தலை வணங்க வேண்டும். நாக்குத் துதிக்க வேண்டும். தீமையினின்று அகன்று வாழவேண்டும் என்று எண்ணும் நான், இவர்க்கு அடிமையாக வேண்டும் அவ்வாறு செய்வதற்கு எழுந்த என் உள்ளத்தைத் தடுத்தது மானம் ஒன்றே யாகும்.

குற்றம் இல்லாத தேவர்களை நான் சிறைப்படுத்தியது எல்லாம் தீயதாகும் என்று பலர் கூறினர், என்றாலும் அச்செயல் காரணமாகவே வேதமும், நான்முகனும், பல தேவர்களும் காணாத இறைவன் என் எதிரே வரும் பேறு

பெற்றேன். இதுவும் ஒருவகையில் நல்லதாகவே ஆயிற்று. ஏக முதல்வனாக எழுந்தருளியிருக்கின்ற முருகப்பெருமானின் எதிரில் நான் இன்று போர் செய்தேன். அதற்காக நான் மனத்தளர்ச்சி அடைய வேண்டியதில்லை. இதனால் நான் மிக உயர்ந்த பெருமையைப் பெற்றேன். இதனால் நான் அடைந்த இந்தப் புகழே நிலைத்து நிற்கும். இந்த உடலும் அந்த புகழைப் போல நிற்குமோ? நிற்காது.

சூரபன்மன் இவ்வாறு நினைத்துக் கொண்டிருக்க, எவர்க்கும் முதல்வனான முருகவேள் நினைத்தற்கு அரியதாக நின்ற தமது ஒப்பில்லாத வடிவத்தை அகற்றி, ஒளி பொருந்திய மயில் ஏறிய திருவுருவத்துடன் எழுந்தருளிப் பகைவன் சூரபன்மனிடம் ஏற்பட்டிருந்த ஞான உணர்ச்சியை அகற்றி, முன் இருத்ததைப் போலவே இருக்கச் செய்தார்.

இளைய சந்திரன் வானத்தில் செல்லத் திசைகள் தோறும் அகலும் இருளானது, அச்சந்திரன் அகன்றவுடன் மீண்டும் உலகில் பரவுவது போல, அப்போது சூரபன்மன் அறிவு நீங்க, அவனது மனத்தில் மீண்டும் சினமும் பகையும் தோன்றின. எனவே தொடர்ந்து போர் செய்ய எண்ணிய சூரபன்மன் வானத்தில் எழவும், தேவர்கள் தம்மிடத்தில் பொருந்திய ஞானத்தினாலும் குறிப்பாலும் அதை அறிந்து கொண்டு, 'இவன் நம்மைக் கொல்ல வருவான்' என்று இடங்கள்தோறும் சிதறி நிற்காது ஓடியவராய், எமனால் எதிர்க்கப்பட்ட உயிரைப்போல வருந்தினர். ''இறைவ! தாங்கள் சற்றும் இதை எண்ணிப் பார்க்கவில்லை போலும்! சிறிது காலம் தாழ்ப்பீரேல் தன் ஆற்றலால் அச்சூரபன்மன் மறைந்து நிறைந்து எல்லாவற்றையும் உண்டு விடுவான். ஆதலால், பகைவன் உயிரை விரைவில் வாங்குவீராக!'' என்று முதல்வனான முருகப் பெருமானை மயிலாக நின்று சுமக்கும் இந்திரனும் வேண்டினன்.

அப்போது, அத்தேவர்கள் உரைத்த உரையையும், அக்கொடிய சூரபன்மனின் சூழ்ச்சியையும் உணர்ந்து, முருகப்பெருமான் சிறந்த தம் திருக்கையில் இருக்கின்ற அழகான நீண்ட வேலைப் பார்த்து ''நீ இங்கு அவனது உடலை பிளந்து விரைந்து திரும்பி வருவாயாக!'' என்று வேலை சூரபன்மன் மீது செல்லுமாறு ஆணையிட்டு விடுத்தருளினார். முருகக் கடவுள் விடுத்தருளிய வேலானது, ஆயிரங்கோடி என்ற எண்ணுடைய சூரியர்களைப் போல விளங்கித் தோன்றிச் சுடுகின்ற தீமயமான அம்புகளை உண்டாக்கிக் கொண்டு செல்லவும், அச்சூரபன்மன் கொண்டிருந்த இருள் வடிவம் முற்றும் அழிந்து அகன்றது.

அவன் தன் மாயம் அழிந்ததையும் இறைவனின் வேல் எதிர்த்து வருவதையும் பார்தது, "அழிவற்ற வரத்தை உடைய என்னை, அவன் விடுத்த வேற்படை இங்கு என்ன செய்யும்?" என்று எண்ணிச் சிரித்து மிக்க சினம் கொண்டு நின்றான்.

அப்படி நின்றவன், "கடல் நிலவரப்பையும், திசைகளின் எல்லைகளையும், மேலும் கீழுமாகப் பொருந்திய மற்றச் சுவர்க்க பாதலங்களையும், நான்முகன் முதலான அரிய உயிர்களுடனே சேர்த்து அழித்துப் பின்னர் இதனை அழிப்பேன்" என்று கூறியபடி கடலின் நடுவில் தீயைப் போன்ற தளிர்களை ஈன்று, உயர்ந்த தழையினைப் புகையினைப் போல அமைத்து, பொன்னைப் போலப் பூங்கொத்துகளை உண்டாக்கி, மரகத மணிபோலக் காய் காய்த்து, செந்நிறமான மணிகளைப் போல இனிய பழங்களைக் கொண்டு, மேகம் போல நெருங்கிய பல கிளைகளைப் பெற்ற ஒரு அழகிய மா மரமாக நின்றான்.

ஒரு நூறாயிரம் அளவுடையதாக அகன்ற பெரிய அரையையுடைய மாமர வடிவமாய்ப் பலவாக உள்ள கிளைகளுடன் கூடிக் கொம்புகள் கலந்து நின்றால், கடல் முழுவதும் வானமும் பூமியும் என்ற இவ்விடங்களில் எல்லாம் குளிர்ந்த நிழலைப் பரப்பிக் கொண்டு சூரபன்மன் நின்றான். உயர்ந்த கருடனும், அன்னமும், மேல் பொருந்திய எகினப் பறவையான திருமாலும், கரிய குயிலும், சேவலும், மயிலும், ஆன வலியனான இந்திரனும், புகுந்த போரை விளங்கச் செய்கின்ற வீரத்திருவும், கொடையாக உள்ள குக்குடம் முதலான அக்கினியும் அஞ்சுமாறு கொக்கு என்னும் மாமர வடிவம் கொண்டு சூரபன்மன் நின்றான்.

உலகத்தில் இத்தகைய ஒரு பெரிய மா மரமாகிக் கிளைகளின் நெருக்கத்தினால் வானத்திலும் திக்குகளிலும் மோதித் தலை முதல் அடிவரைக்கும் மிகவும் தளர்ந்து தள்ளப்பட்டு அசைபவர்களைப் போல, அசைவற்ற சூரபன்மன் தானாகவே அசைந்தான்.

தெளிவான அலைகளையுடைய கடலின் நடுவில் நின்ற கொடியவனின் செய்கையும், அவன் கொண்டுள்ள வடிவமும், அவன் மனக்கிடக்கையும் வன்மையும் என்னும் இவற்றையெல்லாம் எல்லாத் தேவரிலும் உயர்ந்த ஆதிபகவனான முருகப்பெருமான் விடுத்தருளிய ஒப்பில்லாத வேல் பார்த்து மிக்க சினம் கொண்டது.

தேயு பூதத்தில் (அக்கினி) உள்ளவனாகச் சொல்லப்படுகின்ற அண்ட கோடிகளும், விளங்கும் பிருதுவி அண்டத்தில் உள்ள ஆயிரங்கோடி அண்டத்தில் உள்ள அக்கினிகளும் ஒன்றாகக் கூடியது போல, மிகவும் உயர்ந்து, நீண்டு, உயர்ந்தவர்கள் அஞ்சத்தக்க உருவத்தை அடைந்து, நம் குமரக் கடவுளின் தெய்வத்தன்மையுடைய வேலானது சென்று, மண்டலமாக அமைந்துள்ள பூமியின் இடமும், எழு கடல்களும், மற்றும் தெளிவான கடல்களும், வானமும், வானத்தில் உயர்ந்த எல்லா மலைகளும், எட்டுத் திசைப் புறமும் அண்ட ஏணிகளின் பரப்பும், நெருங்கும் வண்ணம் ஒள்ளிய தீச்சிகையின் கற்றைகளை ஒன்றாக அத்தெய்வவேல் அருகில் உமிழ்ந்தது.

சிவபெருமான் தம் திருக்கண்டத்தில் உள்ள நஞ்சில் தோய்த்துச், செவ்விய நெற்றியில் உள்ள கண் தீயில் வைத்து, இடக்கையில் பிடித்துள்ள தீயில் தோய்த்து, முன்னே சென்றாற் போல, வேல் என்னும் தெய்வமானது இவ்வாறு அஞ்சத்தக்க தோற்றத்துடன் போய் அறியாமையுடைய சூரபன்மன் கொண்ட மாமர வடிவத்தை வெட்டி அழித்தது.

கிளியின் முகம் போன்ற நிறம் விளங்குகின்ற பசுமையான காய்கள் தொங்கித் தள்ளுவதற்கரிய நிலைமையுடையதாக நின்ற அந்த மாமர வடிவம் சாய்ந்தவுடன், உள்ளே உள்ள சினம் மிக, சூரபன்மன் விரைவாகப் பழைய வடிவத்தை அடைந்து, கூர்மையான உடைவாளை உறையினின்றும் எடுத்து வீசிப் போர் செய்வதைக் கருதி ஆரவாரம் செய்தான். அந்நிலையில் செவ்விய ஒளியையும், கூர்மையையும் உடைய வாளைக் கொண்டு போர் செய்யத் தொடங்கி இடி போன்று கர்ச்சித்து, வன்மையுடனே எதிர்த்துச் சீறுகின்ற சூரபன்மனின் மார்பைப் பிளந்து, அவன் உடலை இரண்டு பகுதியாகச் செய்து, அலை கடலில் அழித்து, வேதங்கள் ஒலிக்க வேலானது வானத்தில் சென்றது.

வானவர்கள் துதித்துப் பொழிகின்ற மலர் மழையினிடையே சென்று தீயின் வடிவத்தை ஒழித்து, அருள் வடிவம் கொண்டு, வானத்தில் பொருந்திய கங்கையில் முழுகித் திரும்பி, தேவர்களின் துன்பத்தை ஒழித்த எங்கள் முருகப் பெருமானின் செவ்விய திருக்கையை அடைந்து அத்தெய்வ வேல் தங்கியிருந்தது.

போர் செய்த நீண்ட வேலானது திரும்பி வந்துவிட, சிவபெருமான் அளித்த வரத்தால் அழியாத பகைவன் எழுந்து, பின்னும் தனது உடல் பிளந்து, இரு பிளவும் கோழியும் மயிலுமாக வடிவம் கொண்டு சினத்துடன் தேவப்படைத் தலைவரைக் குறித்துப் போர்த் தொழில் செய்ய வந்தான். ஒளிவிடும் ஒரு மாணிக்க மலையும் மரகத மலையும் இரு பக்கங்களிலும் இறகுகளைப் பெற்றுக் கருவையுடைய மேகம் அழியும்படி ஆரவாரம் செய்து, திண்ணிய நிலத்திலும், வானத்திலும் சென்றாற்போலக் கோழியும் மயில் வடிவம் கொண்டு வந்து சூரபன்மன் பெருந்தகுதியுடைய இறைவனின் எதிரே வந்து நின்றான்.

அப்போழ்து எம் செவ்வேளின் திருவருளால் அறிவு மிகுந்த கோழியின் வடிவத்தைப் பார்த்து, 'நீ விரைவாகக் கொடியின் வடிவமாகி மிகவும் உயர்ந்த நம் தேரில் பொருந்தி ஆரவாரம் செய்வாயாக!' என்று உரைத்தருளினார். உடனே சூரபன்மனின் கோழி வடிவம் வானத்தில் எழுந்தது. செந்நிறம் பொருந்திய உச்சிக் கொண்டையை உடைய ஒரு கோழியின் வடிவமாகி முற்பட்ட மனத்திலும் அதிக வேமாகச் செல்கின்ற வன்மை மிக்க பெரிய தேரின்மீது போய் இந்தப் பிருதுவி அண்டம் இடிபடவும் இடியேறு அஞ்சவும் அக்கினி அஞ்சவும் ஆரவாரம் செய்த வண்ணம் அங்கே இருந்தது. (அதன் முன் கோழி வடிவமாக இருந்தவன் அக்கினி. அவன் இப்போது நீங்கிச் செல்கின்றான்.)

சிறப்புப் பொருந்தி விளங்கும் குமரப்பெருமான் நெருக்கமான கண்களையுடைய இந்திரனான பழைய மயிலினின்றும் இறங்கி, வழிபட்டு நின்ற சூரபன்மனான பிரகாசிக்கின்ற மயிலின் மீது ஏறிக்கொண்டு, எம்மைச் சுமந்திடுக என்று பூமி, திக்குகள், வானம் என்ற எல்லா இடங்களிலும் பரியைப் போல் (குதிரையைப் போல்) உலவினார். பெருங்கடல் உடைந்திடவும், அகன்ற மேரு மலை இடிந்திடவும், மற்றப் பூமி வெடித்திடவும், செந்நிறமான தீயானது துடிதுடித்து ஒடுங்கவும், சூறைக் காற்றானது துடிக்கவும், அண்டகூடம் நடுங்கவும், இறகை வீசி இடிக் கூட்டங்கள் புரளும்படி ஆரவாரம் செய்து கொண்டு தோகையையுடைய அம்மயிலானது சென்றது.

போர்க்களத்தின் எல்லையில் புகுந்த முருகப் பெருமான், புள்ளிகளையுடைய மயிலின் வடிவமாகியும் கோழியின் வடிவமாகியும் நின்ற தேவர்களை (அக்கினியையும் இந்திரனையும்) உற்றுப் பார்த்து, "நீவிர், விரைவாக உங்கள் பழைய உருவங்களை அடைந்து நில்லுங்கள்!" என்று திருவாய் மலர்ந்தருளவும், அப்போதே அவர்களும் தம் முன்னைய வடிவங்களை உடையவர்களாகித் திருவடிகளில் விழுந்து வணங்கினர்.

சுடர் விடுகின்ற நெடிய வேல் படையையுடைய இறைவன், கொடிய சூரபன்மனான முதல்வனை அழித்து ஒளியுடைய மயில் மீது ஏறி வந்ததை யுணர்ந்து, போர் செய்கின்ற இடத்தில் நின்ற பூதகணங்களும், வீரர்களும், பெருமான் தம்பியான வீரவாகு தேவரும் ஆகிய எல்லாருமாகச் சென்று பெருமான் திருவடிகளை வணங்கி சூழ்ந்து நின்றனர்.

## 14. தேவர்கள் போற்றல்

தமக்கு ஒப்புவமை சிறிதும் இல்லாத, முருகப்பெருமான் தம் வேலால் சூரபன்மனின் உடலைப் பிளந்து அழகிய மயிலில் எழுந்தருளியவுடனே, பூவுலகத்தை உண்ட திருமாலும் நான்முகனும் தேவர்களுமாகிய இவர்கள் எல்லாம் அரிய அமுது கிடைத்தாற்போல அற்புத காட்சியைக் கண்டு ஆரவாரம் செய்தனர்.

## 15. இரணியன் புலம்புறு படலம்

இவ்வாறு சூரபன்மன் இறந்ததும் இடம் அகன்ற மகேந்திர நகரத்தில் உள்ள அசுரர்கள் விரைந்துசென்று, "நம் மன்னன் முருகப்பெருமானால் விடப்பட்ட கூரிய வேலால் இறந்தான்" என்பதை உரைத்தனர். அவர்கள் கூறியதைப் பல பெண்களிடமிருந்து இறந்த சூரபன்மனின் பட்டத்து அரசியான பதுமகோமளை என்பவள் கேட்டாள். பிருதுவி அண்டத்துள் ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆண்ட சூரபன்மன் இறந்தான் என்ற சொல் செவியுள் சென்று படும்போது, அவன் மனைவியான பதுமகோமளை இடியேறுண்ட கொடிய பாம்பைப் போல் உயிரை விட்டாள்.

எத்தகையவர்க்கும் மேலானவனாக இருந்த அசுரத் தலைவனுக்கு

மனைவியராய் அந்த இடத்தில் இருந்த அவன் மனைவியர் வயிறுகளில் அடித்துக் கொண்டு, பெரிய ஒரு தீக்குண்டத்தை உண்டாக்கி, இறந்து விட்ட தேவதச்சன் மகளான பதுமகோமளையின் உடலை முதலில் கொண்டு வந்து இட்டனர். பின் மான் பிறழ்ந்தாற் போன்ற செவ்வரி பரந்த மதர்த்த நீர்த் துளிகளையுடைய கண்ணினரான பெண்கள் எல்லாரும், வானை நோக்கி எழுகின்ற ஒப்பில்லாத பெருந்தீயில், மணம் கமழுமாறு விரிதிரை தாமரைக் காட்டில் வண்டுகள் ஆரவாரம செய்து கொண்டு தம்இனத்தோடு புகுந்தததைப்போல் குதித்தனர். இவ்வாறு இவர்கள் தீயில் விழுந்து இறந்தனர். இது நிற்க, பிதாவான சூரபன்மன் இறந்ததும் ஆண் கோழியும் மயிலுமாகத் தானே ஆகிக் கந்தபெருமான் அருகில் வந்ததும் பார்த்துக் கலங்கி உள்ளம் வருந்தி, வான வீதியில் நின்று இரணியன் என்பவன் புலம்பினான்.

கெடாத பழைய வடிவத்தை இழந்து வேற்று வடிவமான பறவையின் வடிவமாக ஆயினாய் (இறக்கவில்லை)! அதனால் நீ இறந்து விட்டாய் என்று ஒரு தந்தைக்கு மகன் செய்யக் கூடிய ஈமக்கடனைச் செய்வதற்கும் நான் புண்ணியம் செய்யவில்லை. இந்த உயிரை வீணாகச் சுமந்து நிற்கிறேன் என்று இவ்வாறு இரணியன் நெடிய வானத்தில் நின்று தளர்ந்து பெருமூச்சு விட்டு ''என்னைப் பூதர்கள் கண்டால் தின்று சினம் தணியப் பெறுவர். ஆதலால் நான் வெளியிடத்தில் பிறர் காண நிற்றலாகாது'' என்று எண்ணி, முன்போல் நெருங்கிய அலைகளையுடைய கடலில் புகுந்தான்.

அங்ஙனம் கடல் நீருக்குள் முழுகிய இரணியன் பின்னும் வருந்தி, ஆசாரியனான சுக்கிராசாரியாரிடம் அப்போதே போய், இறந்து போன தாரகன் முதலான தந்தையர்களுக்கும், தக்க பானுகோபன் முதலான சகோதரர்களுக்கும், மற்றுமுள்ளவர்களுக்கும் செய்ய வேண்டிய சிறந்த கடன்களை விதிப்படியே செய்தான். இரணியன் பின்னர், போர் செய்து இறந்த அசுரர்களுக்குச் செய்ய வேண்டியவற்றைச் செய்ய வேண்டிய முறைப்படியே செய்து, செல்வம் என்பது துன்பம் என்ற முள் மரத்தைத் தோற்றுவித்தற்குரிய வித்தாகும் என்று கருதி, அதை வேண்டாம் என்று வெறுத்து, நற்கதி அடையும் பொருட்டு ஆதிமுதல்வனான சிவபெருமானைக் குறித்து ஒரு பக்கத்தில் இருந்து அரிய தவத்தைச் செய்து கொண்டிருந்தான்.

## 16. தேவர் சிறை மீட்டல்

அச்சமயத்தில் மணி தங்கிய பசுமையான பொன் மலை போன்ற புள்ளிகளையுடைய மயிலின் மீது எழுந்தருளியிருக்கும் வெற்றியுடைய நீண்ட வேல் ஏந்திய முருகப்பெருமான், வீரவாகுதேவரை விருப்புடன் பார்த்து இவற்றைத் திருவாய் மலர்ந்தருளினார்:

''வீரவாகுவே! இதைக் கேட்பாயாக! அழிந்த கொடிய சூரபன்மனால் ஈட்டப்பட்ட செல்வத்தைப் போல பெரிய சிறையிலே முன்னமே வைக்க, வருந்திய சயந்தனையும் தேவர்கள் எல்லாரையும் மீட்டு வருவாயாக!'' எனக் கூறியருளினார். கிரவுஞ்ச மலையைப் பிளந்த குமரப் பெருமான் இதைக் கூறவும், வெற்றி பொருந்திய வீரவாகு தேவர், 'நல்லது' என்று வணங்கி விடை பெற்றுப் போர்க்களத்தை விட்டு விலகிச் சூரபன்மனின் பெரிய நகரத்துக்குள் சென்றார்.

மேலே எழுந்த திண்மையான தோள்களையுடைய வீரவாகுதேவர், அறநெறியினின்று தவறிய குற்றம் பொருந்திய அசுரர் இருந்த நகரத்துக்குள் புகுந்து, மகரந்தம் பொருந்திய, குளிர்ந்த, மாலையணிந்த, சயந்தன் தேவர்களுடன் வருந்திக் கிடக்கின்ற கொடிய சிறைக்குச் சென்றார். ''தேவர்களே எல்லாரும் வாருங்கள்! வாருங்கள்! உங்களை வருத்திய வேகம் பொருந்திய குதிரை பூட்டிய தேரையுடைய கொடிய சூரபன்மனை அவன் படைகளுடன் எம் இறைவன் விரைந்த வேற்படையினால் இப்போது அழித்தருளினார்'' என்று வீரவாகுதேவர் சொன்னார். தேவர்கள் அதனைக் கேட்டு இறவாது வீடுபேறு அடைந்தவர்களைப் போல மகிழ்ச்சி அடைந்து, வலிய கால்களில் பூட்டப்பட்ட விலங்குளின் பூட்டினை அறுத்து எறிந்து, அசுரனான சூரபன்மனின் அழகிய நகரத்தை நீங்கிச் சென்றனர்.

வீரவாகு தேவர் முன்னால் செல்ல, விரைவாகத் தேவமங்கையருடன் சயந்தனும் தேவர்களும் அந்த இடத்தை விடுத்துப் பேய்கள் நெருங்கிய போர்க்களத்தில் சென்று, குமரப் பெருமானின் திருவடிகளை மூன்று முறை வணங்கிப் புகழ்ந்து மகிழ்ந்தனர்.

இந்திரன் தன்னை வணங்கிய சயந்தனை பார்த்து அணைத்து மகிழ்ந்து முதுகினை தடவிப் ''பல காலம் நீ கொடிய சூரபன்மன் அமைத்த ஒள்ளிய சிறைச் சாலையுள் புகுந்து வருந்தினை அல்லையோ!'' என்று சொல்லி, மற்றத் தேவர்களையும் முறை முறையே தழுவினான். மிக்க சினம் கொண்ட

அவுணரின் மன்னன் செய்த போரில் அந்நாள் வரைக்கும் இறந்துள்ள பூதர்களின் படைகள் முழுவதும் அந்த இடத்துக்கு வரும்படி முருகப்பெருமான் தம் திருவுள்ளத்தில் நினைத்தார். அப்பெருமான் நினைத்த அப்போதே இறந்த பூதங்கள் எல்லாம் உயிர் பெற்றெழுந்தன.

கருணைக் கடலான குமரக்கடவுள் அலையுடைய கடலுக்குத் தலைவனான வருணனின் சிறந்த முகத்தைப் பார்த்து, ''கொடிய சூரபன்மன் இருந்த வன்மையும் திறமும் உடைய மகேந்திரபுரியினை ஊழிக்காலத்துப் பூமியைப் போல விரைவில் அழித்துவிட்டு வருவாயாக!'' என்று உரைத்த அளவில் கடல் மன்னனான வருணன், 'நல்லது' என்று இசைந்து, நெருங்கிய பல வகையான உயிர்களுடனே பழைய மகேந்திரபுரியை அந்நாளில் திருமால் பாதலத்தில் நின்று மத்திய உலகத்தை உண்ணும் தன்மைப் போல வன்மை பொருந்திய கடலுள் அழுந்துமாறு செய்தான்.

அப்போது ஆறுமுகப்பெருமான், திருமாலும், நான்முகனும் தேவர்களும் இந்திரனும் வணங்கியபடி பக்கத்தில் வரவும், மற்ற வீரர்கள் எல்லாம் அருகிலே சூழ்ந்து வரவும், வன்மையையுடைய பூதப்படைகள் ஆரவாரம் செய்து கொண்டு உடன் வரவும் போர்க் களத்தினின்று நீங்கியருளினார். கலங்கிய கடல் நீரால் மூடிக் கொள்ளப் பெற்று வீரமகேந்திரபுரியின் எல்லையைக் கடந்து பின்பு, அதற்குத் தெற்கில் இருந்த சிறந்த இலங்கையையும் கடந்து, கடலையும் நீங்கிப் போய், நன்மை பொருந்திய சிறப்புடைய திருச்செந்தூரை அடைந்து, அசைகின்ற அழகான சுடரையுடைய மயிலினின்றும் வேலை ஏந்திய முருகப்பெருமான் இறங்கியருளினார்.

மயிலினின்றும் இறங்கித் தம் பழைய ஆலயத்தை அடைந்து, இந்திரன் முதலான தேவர்கள் வணங்கித் துதிக்க, வெற்றியுடைய அரியணையின் மீது வணங்கித் துதிக்க, வெற்றியுடைய அரியணையின் மீது ஆறு திருமுகங்களையுடைய முருகப்பெருமான் என்ற முழுமுதற்கடவுள் உலகைக் காத்தலான அருள் காரியமாக இனிதே எழுந்தருளியிருந்தார்.

அப்பொழுது அகன்ற பன்னிரு தோள்களையுடைய முதல்வரான செவ்வேளை நான்முகன் முதலான தேவர்கள் தலையால் வணங்கி, ''இறைவனே! நாங்கள் உம் பொன் போன்ற அடிகளை இங்குப் பூசை செய்கின்றோம்,'' என்று தேவர்கள் சொன்ன போது எம்மை ஆளாகவுடைய இறைவன், 'நல்லது, அவ்வாறே செய்யுங்கள்!' என்று உரைக்கவும், அவர்கள் அப்போது ஓர் இமைப்போதில் மணமுடைய நீர், சந்தனம், மலர், தீபம், அவி,

தூபம் முதலிய பொருள்கள் அனைத்தையும் கொணரச் செய்தனர். எம்பெருமான் உமையம்மையார் உணரும்படி, கூறியருளிய குமார தந்திர நூற்படி தவறுதல் இல்லாமல் ஆறுமுகப்பெருமானுக்கு முறப்பட்ட கும்பம், அக்கினி, உருவம் என்ற மூவகையான இடங்களிலும் பூசை செய்தனர். மிக்க அருளைச் செய்த பெருந் தகுதியுடைய அம்முருகப்பெருமான், அவர்களைப் பார்த்து, ''உங்கட்கு ஏதேனும் குறையிருந்தால் அதைத் தெரிவியுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். அதற்கு அவர்கள், ''எம் இறைவ, கொடுமையை உடைய சூரனான முதல்வனை அழித்து எம்மவர்களைக் காத்தீர்! அன்றியும் இப்போது இங்கு உம் அருளைப் பெற்றோம்! ஆதலால் எங்கட்கு என்ன குறையுள்ளது? எம் கடவுளே! நீவிர் எங்களுக்கு அளிக்கத் தக்க வரம் ஒன்று உண்டு. அது யாது என்றால் உம் அடியவரான எங்களின் உடல் இருக்கும் வரை உம் திருவடிகளில் சிறந்த அன்பு இருக்குமாறு வரம் தந்தருள வேண்டும்!'' என வேண்டினர். உடனே எம் இறைவன் ''அவ்வாறே ஆகுக!'' என்றருள் செய்தார்.

அங்கு அச்சமயத்தில் தேவதச்சன் இயற்றிய வேலைப்பாட்டினால் ஒரு கோயிலை முருகப்பெருமான் அமைப்பித்து, அதில் சிவபெருமானை நிலை நிறுத்தப்பட்ட லிங்க வடிவமாகத் தாபித்தனர். கோமயம் முதலான பஞ்ச கவ்வியங்களையும், மணப் பொருள்களையும் சிறந்த மலர்களையும், திருமஞ்சனத்தையும், அழிழ்தத்தையும், உயர்ந்த ஆடைகளையும், தூய்மையான மணியினையும், தீப தூபங்களையும், கண்ணாடி வெண்சாமரம் முதலியவற்றையும் தேவர்கள் கொண்டு வந்து தர முருகப்பெருமான் யாவராலும் தொழத்தக்க சைவாகம முறையை ஆராய்ந்து உயர்ந்த மூன்று விழிகளையுடைய சிவபெருமானின் திருவடி மலர்களை, மனத்தில் பொருந்திய அன்பால் பூசை செய்தார்.

## 17. திருப்பரங்குன்று சேர்தல்

இவ்வாறாகச் சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, அந்த இடத்தை நீங்கித் தேவர்களும், முனிவர்களும், தன் படை வீரர்களும் பக்கத்தே சூழ்ந்து வரப் பொன்மயமான மயிலின் மீது வீற்றிருந்த முருகப்பெருமான், தம் அருகில் இருந்த திருமால், நான்முகன், இந்திரன் முதலியவர்களையும், ஒப்பில்லாத படை வீரர்களையும் பார்த்து, ''நீங்கள்

அனைவரும் நம் அருகில் உங்களுக்குரிய ஊர்திகளில் அமர்ந்தவராக வருவீராக!'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

முருகப்பெருமான் அவ்வாறு ஆணையிட்ட போது வளமையான துளசிமாலை அணிந்த முடியையுடைய திருமால் முதலான தேவர்களும், வெற்றி பொருந்திய வீரர்களும் வெவ்வேறாகத் தங்கள், தங்கள் ஊர்திகளில் ஏறிச் சென்றனர். கதிரவன் ஒளி காற்றாடியைப் போலச் சூழல்கின்ற பொன் சிகரத்தையுடைய கோயிலின் பக்கத்தில், கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து இரண்டாயிரம் வெள்ளம் என்று உரைக்கும் தொகை கொண்ட பூதர்களும் திடீர் என்று பயணம் ஆயினர்.

இத்தகைய நிகழ்வு நிகழப் பயணமான படைகள் தன் இடத்திலும் அயல் இடத்திலும் பின் இடத்திலும் நெருங்கிச் செல்ல, பன்னிரு திருக்கைகளை யுடைய முருகதேவர் இந்தத் திருச்செந்தில் நகரத்தை விட்டு விலகி அகன்ற குறிஞ்சி நிலத்தின் வழியே, சென்ற வேலை ஏந்திய செவ்வேள், தூய்மையான மதுரையின் மேற்குப் பக்கத்தில் இருந்த திருப்பரங்குன்றத்தை அடைந்தார். பெருமான் திருப்பரங்குன்றத்தில் எழுந்த ருளியவுடன் முற்காலத்தில் அந்த இடத்தில் வாழ்ந்திருந்த பராசர முனிவரின் மைந்தரான ஆறு முனிவர்களும் நான்முகன், முதலான மற்றவரும் எம் இறைவனை வணங்கி, ''இம்மலையானது சிறந்தது. அதனால் இங்கு எழுந்தருளி வீற்றிருப்பீராக'' என வேண்டினர். குமரப் பெருமான், ''நாமும் இம்மலைக்கு வர எண்ணினோம். நீங்களும் அதனையே சொன்னீர்கள். எம் உள்ளமும் உம் எண்ணப்படியே ஒத்துள்ளது'' என்று திருவுள்ளம் மகிழ்ந்து கூறினார். இவ்வாறாக எம் பெருமான் எழுந்தருளியவுடனே, தேவதச்சன் வளம் வாய்ந்த அந்த மலையின் கண் அளவற்ற தெருக்களையும், அழகிய நல்ல தேவகோட்டங்களையும், ஆறுமுகப் பெருமான் கோயிலையும் சோலைகளையும், பொய்கைகளையும், உண்டாக்கினான்.

முருகப்பெருமான் தாம் ஏறியருளிய மயிலினின்றும் இறங்கி, நான்முகன், இந்திரன், திருமால், நவவீரர், இலட்சம் வீரர் முதலியவர்கள் ஆகிய யாவரும் அருகில் சூழ்ந்து நிற்பச் சபையில் எழுந்தருளிச் சிங்கம் சுமக்கும் மென்மையான இருக்கையில் சிறப்புடன் வீற்றிருந்தருளினார்.

## 18. தெய்வயானையம்மை திருமணம்

இந்திரன், தன்னை வருத்திய அசுரனான பகைவரை வென்று சொர்க்கவுலக வாழ்வை தனக்கு அளித்த வேலையுடைய திருக்கையை யுடைய முருகப்பெருமானுக்குப், பின்னால் தாழ்ந்த கூந்தலையுடைய தெய்வயானை அம்மையை மணமகளாகத் தர உள்ளத்தில் எண்ணினான்.

புதியதாகத் தோன்றிய இந்த விருப்பத்தை இந்திரன், தகுதியுடைய திருமாலும் நான்முகனும் தேவர்களும் அறியும்படி சொல்லி, ''இவ்வாறு செய்தால் கூடுமா?'' என்று வினவியவுடன், அவர்கள் மகிழ்ச்சி கொண்டவராய் 'உன் எண்ணம் தக்கதே' என்று கூறினர். 'அகன்ற கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேலை ஏந்திய திருக்கையையுடைய முருகப் பெருமானுக்குச், சேல், மீன், போன்ற கண்ணையுடைய தெய்வயானை அம்மையைத் திருமண முறைப்படி அளிப்பதற்குரிய முயற்சிகளை விரைந்து செய்து முடிப்பாயாக!'' என்றனர்.

தேவர்கள் இவ்வாறு உரைத்தவுடன், வேள்வித் தலைவனான இந்திரன் ஒரு தூதனைப் பார்த்து, ''நீ விரைவாக மேருமலைக்குச் சென்று அங்குள்ள என் மனைவியை, என் மகளான தெய்வயானையுடன் இன்றே அழைத்து வருக!'' என்று சொன்னான். இந்திரன் இப்படிச் சொன்னவுடன், அதற்கு இசைந்த தூதன் மேரு மலைக்குச் சென்று இந்திராணியின் எதிரே போய் வணங்கி நின்று, ''அம்மையே, நின் எண்ணத்தின் வண்ணம் எல்லாம் முடிந்தன'' எனச் சொல்லி இந்திரன் இட்ட கட்டளையைக் கூறினர். இது கேட்டு இந்திராணி மகிழ்ந்தவளாய்த் தன் மகளான தெய்வயானையுடன் வெண்மையான ஐராவதம் என்ற யானை மீது ஏறி, வான்வழியாய்த் திருப்பரங்குன்றம் நோக்கிச் சென்றாள். இந்திராணி மலைகளுள் உயர்ந்ததாக உலகத்தில் புகழ்பெற்ற திருப்பரங்குன்றத்தில் போய் இந்திரன் இருக்கும் ஒப்பற்ற மாளிகையை அடைந்தாள்.

இந்திரன் பின் தேவர் கூட்டத்துடன் போய், தெய்வயானை அம்மையாரின் திருமணத்தை உரைக்க நினைத்து, முருகப்பெருமானின் திருவடிகளில், கைகளில் வைத்திருந்த மலர்களை அருச்சித்து வணங்கித் துதித்து ''எம் இறைவ! தாங்கள் மலை போன்ற தோள்களையுடைய அவுணர்கள் என்ற பகையை அழித்து எதிரே நிற்கின்ற இத்தேவரின் சிறையும் ஒழித்து

அடியேனுக்கு முன் இருந்த இந்திர செல்வத்தை அளித்தீர். இவற்றை யெல்லாம் எண்ணித் தங்கட்குக் கைமாறாகச் செய்யத்தக்கது உள்ளதோ? நாங்கள் உய்ந்து, பிறந்த பிறப்பினால் ஆன பயனை எய்தி உயர்வை அடையுமாறு, முன்னரே இம் மலையில் யான் பெற்ற மகளான தெய்வயானை வந்திருக்கின்றாள். அவளைத் திருமணம் செய்து அருள்வீராக!'' இங்ஙனம் இந்திரன் கூறும் சமயத்தில் எம் முருகப்பெருமான் அந்த இந்திரனைப் பார்த்து, ''அம் மங்கையும் என்னை மணப்பதற்கு மிக்க தவம் செய்தாள். ஆதலால் நீ கருதிய வண்ணமே நாளை மணம் செய்து கொள்வோம்'' என்று திருவாய் மலர்ந்தருளவும், இந்திரன் மிக்க மகிழ்ச்சியடைந்து முன்னே நின்ற பல தூதர்களின் முகங்களை இந்திரன் பார்த்தான். அவ்வளவில் அவர்கள் அனைவரும் அவனுடைய அடிகளை வணங்கித் தொழுது ''எம்பெருமானே அடியவர்களான எங்களால் ஆக வேண்டியது என்ன?'' என்றனர். உடனே சுவர்க்கத்துக்குத் தலைவனான இந்திரன் இத்தகைய ஒன்றைச் சொல்லலானான்: ''மும்மூர்த்திகளுள் சிறந்தவரான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலையை அடைந்துள்ள முகுந்தன் முதலான தெய்வீகம் பொருந்திய காவலர்த் தலைவரான அரசர்களுக்கும் வான் உலகில் வாழ்கின்ற தேவர்கட்கும் மற்றத் திக்குப் பாலகர்களுக்கும் முனிவராக உள்ள அனைவருக்கும் எம் முருகப்பெருமானின் திருமணம் நாளை நடைபெறும் என்று அறிவியுங்கள்!'' என்று கூறினான்.

தூதர் சென்றவுடனே இந்திரன் அறிவில் மிக்க தேவர் தச்சனை விரைவாக அழைத்து, ''மணம் பொருந்திய கடம்ப மலர் மாலையைச் சூடிய முருகப்பெருமானின் திருமணத்துக்கு வேண்டுவனவற்றை இப்போது செய்வீராக!'' என்று உரைத்தான். தெய்வத்தச்சன் அந்தச் சொல்லை உள்ளத்தில் கொண்டு, அந்த மலையின் ஒரு பக்கத்தில், அள்வில்லாத பொன்னால் இடம் அமைத்துச் சிறந்த மணிகளால் வேலைப்பாடு பொருந்தச் செய்து, அழகுபடுத்தி, வெற்றியின் மிக்க சிறப்புடைய ஒரு திருமண மண்டபம் இயற்றினான்.

மேல் பகுதி முழுவதும் பட்டு விதானங்கள் அமைத்து, பூமாலைகள், பலவகை சாமரங்கள், உயர்ந்த ஓவிய ஆடைகள் ஆகியவற்றைத் தொங்கவிட்டு, அந்த மண மண்டபத்தில், நடுவில் ஆறுமுகப் பெருமான் எழுந்தருளி இருப்பதற்குச் சிற்பநூல் முறையை ஆராய்ந்து ஒரு பெரிய இருக்கை ஒன்றைத் தேவர்தச்சன் அமைத்தான். பிறகு வேதநெறியை

உலகத்தில் உண்டாக்கிய முருகப்பெருமானுடன் வந்திருக்கும் திருமகளின் கணவரான திருமால், நான்முகன் முதலான தேவர்கள் அனைவரும் மற்றவரும் இருப்பதற்குத் தக்க இடங்கள் தோறும் அளவில்லாத இருக்கைகளை அமைத்தான்

திருமணத்துக்காக மண்டபம் முதலியவற்றை முயன்று அமைத்த இந்திரன் செயல் இவ்வாறு இருக்க, தூதர் சென்று சொன்னதும், அத்திருமணத்தைக் காண்பதற்காக உலகில் அரசு செய்யும் ஆணைச் சக்கரத்தை உடைய முசுகுந்தன் என்ற மன்னன் வரும் தன்மையை உரைப்போமாக. மணத்தைப் பார்க்கச் செல்பவர் வழிகள், கொடிய யானையின் நெற்றியில் பூசியுள்ள இங்குலிகக் குழம்பு செவ்வொளி காட்டவும், மங்கையரும் ஆடவரும் அணிந்த அணிகளும் படைகளும் விளங்கவும், பக்கங்களில் பீலிக் குடைகளும் வெள்ளைக் குடைகளும் கொடிகளும் இருளை உண்டாக்கவும் இரவும் பகலும் மாலையும் போல் விளங்கின. சங்குகள், படகங்கள், பேரிகைகள், குடமுழாக்கள், கொம்புகள், எக்காளங்கள், தக்கைகள், தண்ணுமைகள், தடாரிகள், சல்லரிகள், தாளங்கள், குழல்கள், துடிகள், பம்பைகள் முதலியவையும் மற்றவையும் கருங்கடலானது ஒலிப்பதைப் போல அளவில்லாதவர்கள் முழக்கிக் கொண்டு சென்றனர்.

நூல் உணர்ச்சியையும் கல்வியையும் ஆராய்ந்து தக்க பொருளை யார்க்கும் அளிக்கின்ற கொடையாளரைப் போல, விற்பனைக்காக முத்தும் பவழமும் பொன்னும் முற்றிலும் மணியிட்டு இழைத்த அணிகளும் சந்தனமும் ஓவியம் தீட்டப்பட்ட துணிகளும் இவற்றுடன் மற்றப் பொருள்களும் என்ற இவற்றைத் திண்ணை மீது வரிசையாய் வைத்துக் கொண்டு சிறப்புடைய வணிகர் இருந்தனர். மங்கையர், இளம் பெண் யானைகளையும் குதிரை பூட்டப்பட்ட தேர்களையும் விடுத்துப், பூமியில் மேகத்தினின்றும் சிதறி மண்ணில் கொடிக் கூட்டம் படர்ந்து சென்றது போல் நடந்து சென்று, சோலையில் தங்கி, மயில் ஆடுகின்ற மாடங்களில் வந்து தங்கினர்.

ஆடவர், அம்பும் வில்லும் வாளும் வேலும் விளங்கும், காலணியும் கழலும் ஆரவாரம் செய்ய, பொன்மணி மாலைகள் தொங்கச், சோலையில் உலவியும், தாழ்வரையில் உள்ள அருவிகளையும் சுனைகளையும் பார்த்தும், பெரிய யானைகள் போர் செய்வதைப் பார்த்தும் சிங்கம் போல் உலவினர்.

வந்தவர் அனைவரும் மலைமேல் ஏறிச் சிற்ப நூல் உணர்ந்த கம்மியனால் சிந்தித்துச் செய்யப்பட்ட நிகர் இல்லாது விளங்கும் அழகிய நகரங்களின் வளங்களைப் பார்த்து, இந்திரன் விழவு கொண்டாடும் திருமணச் சாலையைப் போய் அடைந்தனர்.

பொய்கையில் மலர்ந்த கருங்குவளை மலர்களைப்போல மிக்க பல கண்களையுடையவனாய் நின்ற இந்திரன், அருகில் வணங்கி நின்ற மன்னர்க்கு அருள் புரிந்து, அவர்களின் செயல்முறைகளைக் கேட்டுச் சிறப்பான பல நயமான சொற்களைச் சொன்னான். மிக்க வேகத்தை உடையவராய் வானத்தில் உலவுகின்ற சூரியன் முதலான தேவர் எல்லாரும் திக்குப் பாலகர்களும் மிக்க தவமுடைய முனிவரும் பாதாலத்தில் உள்ள நரகரும் திருப்பரங்குன்றத்தை அடைந்தனர்.

வானத்தை அளாவிய திருப்பரங்குன்றத்து மலைமீது ஏறிச்சென்று தேவரும் மற்றவரும் இந்திரனைக் கண்டு வணங்கிக் களிப்படைந்தனர். தவத்தையுடைய முனிவர் வாழ்த்துக் கூறினர்.

வெற்றி பொருந்திய வரையர மகளிரும், தேவமங்கையரும், நீர் உலகத்தில் வாழும் மங்கையரும், எட்டுத் திக்குகளில் வாழ்கின்ற மங்கையரும் குற்றம் நீங்கிய இந்திராணியிடம் வந்து, ''தெய்வ யானையே! நீ கேட்பாயாக! கொடிய சூரபன்மன் உயிரைப் பறித்த வேலையுடைய மனைவியாய் நீ ஆகின்றாய். ஆதலால் நீயே எங்கட்கெல்லாம் இறைவியாவாய்!'' என்று சொல்லி அவரவர்களும் அந்த அன்னையின் அடிகளை அன்புடன் துதித்தனர்.

பொன்மலையான மாமேரு மலையில் சிவபெருமானின் மகனான முருகப்பெருமானைத் தன் உள்ளத்தில் கொண்டு தவம் செய்த தெய்வயானை அம்மையின் பின்னலையுடைய மயிர் முடியினை மென்மையான நகத்தினையுடைய விரல்களால் மெல்ல நீக்கினார். மயிர்ச்சாந்து பொருந்திய மணமுடைய கூந்தலில் புனுகு நெய்யில் தோய்ந்த சாந்தைப் பூசினர்; குற்றம் இல்லாத கற்பூரமும் மணம் பொருந்திய பொருள்களையும் பூசினர்; பின்பு விருப்பத்துடன் ஒள்ளிய பனிநீரைக் கொண்டு நீராட்டினர்.

மாந்தளிரைப் போன்ற அழகும் மென்மையும், ஒளியும் பொருத்தித் தெய்வத் தன்மையால் எந்த நிறத்திலும் தேயாதிருந்தும் பவள வண்ணமாக

விளங்கும் அழகிய ஒரு சேலையை உடுத்தினர். பன்னிரண்டு கதிரவர்களும் இங்குச் சேர்ந்திருந்ததால் அரிய இருள் முழுவதும் அச்சம் அடைந்து தெய்வயானையின் நீண்டு தழைத்த கூந்தலிடம் அடைக்கலமாக அடைந்தாற் போலக் கரிய அகிலின் நல்ல மணப்புகையை மணம் கமழுமாறு ஊட்டினர்.

அழகைத் தருகின்ற 'உத்தி' என்ற அணியும் 'எதிர்முக மஞ்ஞை' என்ற தலைக்கோலமும், 'வலம்புரி' என்ற அணியும் 'மகரப்பகுவாய்' என்ற அணியும் முறையாகத் தேவகுலத்தவர் செய்த தவம்போல விளங்கும் பூங்கொம்பு போன்ற தெய்வயானை அம்மையின் கூந்தலில் பொருந்துமாறு அணிவித்து, விரிந்த கொத்தையுடைய கோங்கு மலரும் வெட்சி மலரும் அணிந்து மணம் பொருந்திய பூக்களை இடை இடையே வைத்துக் கட்டிய மணம் பொருந்திய தெரியல் என்னும் மாலைகளும் தொடையல் என்னும் மாலைகளும் ஆகிய இவற்றை நெருங்கச் சூட்டிச் சூழியக் கொண்டையாகக் கூந்தலை முடித்தனர்.

ஒரு முயல் களங்கம் முழுமதியுள் புகுந்ததைப் போல, இரண்டு புருவம் என்ற இவற்றுடன் கருநிறம் காணுமாறு அழகிய கரிய சாந்தினால் அழகிய நெற்றியில் திலகம் தீட்டினர். ஊட்டப்பட்ட நல்ல புகையானது கூந்தலினின்றும் விலகி எழுதப் பெற்ற நெற்றித் திலகத்துடன் பொருந்த, ஒரு பாம்பு நாவினை நீட்டி நஞ்சினை உமிழ்ந்தது போல் நெற்றிச் சுட்டியை அணிவித்து, அழகிய வளையல் அணிந்த மங்கையர் தெய்வயானையின் செவியில் 'வல்லிகை' என்னும் பெயர் வாய்ந்த காதணிகளையும், கருத்தங்கிய சங்கைப் போன்ற கண்டத்தில் மாலையாகப் பின்னப்பட்ட முத்து அணிகளையும், தாள் வளைந்த தாமரை மலர் போன்ற கைளிலும் தோள்களிலும் வெண்மையான வளையல்களையும் விளங்கும்படி அணிவித்து, கொங்கைகளின் மேல் கலவையான சந்தனக் குழம்பை பூசினர். தேன் ததும்பும் மின்னல் மாலைகளையும், மணி மாலைகளையும், அணிந்தனர். சிறிய இடைக்கு வருத்தம் உண்டாகும் என்று இரக்கம் கொள்ளாத மங்கையர் ஓர் ஆடையையும் அந்தக் கொங்கைகள் மீது அணிவித்து முறுக்காணிகளைக் கொண்ட வீணையின் ஓசை போன்ற மதலைச் சொல்லையுடைய தெய்வயானை அம்மையின் பொன்னால் ஆன மணமுடைய மலர் போன்ற திருவடிகளில் பாடகம், பரிபுரம், பாதசாலம் முதலியவற்றைச் சூடகம் என்னும் அணி அணிந்த முன்கையையுடைய பெண்கள் வணங்கி அணிவித்தனர். தெய்வ மங்கையர் திருமகளின் மகளான

தெய்வ யானைக்கு இந்த அலங்காரத்தைச் செய்து வணங்கினர். இனிக் கருமை மிகுந்த குவளை மலர் போன்ற கண்களையுடைய இந்திரன் அங்குச் செய்த சிறப்புகளை உரைக்கின்றோம். சுவர்க்கத்தில் உள்ள தேவர்க்கு மன்னனான இந்திரன் நான்முகனைப் பார்த்து திருமண மண்டபம் முடிந்தது. எல்லாத் தேவர்களும் வந்துள்ளனர். மலர் மாலை தொங்கும் திருமுடியை யுடைய எம் முதல்வரான முருகப்பெருமானுக்குத் திருமணம் நடத்துதற்கு ஏற்ற சமயத்தை ஆராய்ந்து 'இது சமயம் என்று உரைப்பாயாக' என்று சொன்னான். இந்திரனின் சொல்லைக் கேட்டு நான்முகன், ''ஆறுமுகப் பெருமான் திருமணம் செய்வதற்கு எந்த நாளும் இனிதே யாகும். எனினும் இந்த நேரம் ஒப்பில்லாத முகூர்த்த நேரமே ஆகும்'' என்றார்.

அதுகேட்ட இந்திரன், ''படைப்பதை முறையாகக் கொண்டவரே! இந்த நாளே நல்ல நாள் என்று கூறினீர். ஆதலால் நான் பெற்ற மகளை இவ்விடத்தில் மணம் செய்து அளிக்கத் தேவர்க்குத் தேவரான ஆறுமுகக் கடவுளை அழைத்து வருவதற்குச் செல்வதே எமக்குக் கடமையாகும்'' என்றான். அச்சமயத்தில் திருமாலும், நான்முகனும் 'நன்று, செல்வோம்' என்று இந்திரனுடன் எழுந்து எல்லா முனிவரும் எல்லாத் தேவரும் சூழ்ந்து முன்னால் செல்ல, நின்மல வடிவினரான முருகப்பெருமானின் ஆலயத்தை நோக்கிச் சென்றனர்.

அத்தேவர் முதலிய எல்லாரும் பொன்னும் மணியும் இட்டு இழைத்துள்ள கோயிலுள் சென்று 'சேந்தன்' என்ற திருப்பெயரையுடைய முருகப்பெருமானின் திருவடிகளைத் தலையால் வணங்கி ''எம்பெருமானே! காந்தள் மலர் போன்ற மென்மையான விரல்களையுடைய தெய்வயானையைத் திருமணம் செய்தற்கு தாங்கள் எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர். பன்னிரு தோள்களையுடைய முருகப் பெருமான் இந்தச் சொற்களைக் கேட்டவுடன் 'அங்ஙனமே செய்வோம்' என்று அருள் செய்து, அருகில் நெருங்கியுள்ள பூத வீரரும் பிறரும் துதிக்கும் வண்ணம் சிங்கங்களால், சுமக்கப்படுகின்ற பொன்னும், சிறந்த மணிகளும் கொண்டு செய்யப்பட்டுள்ள ஆசனத்திலிருந்து விரைவாக எழுந்தருளினார். எதிரே நின்ற மயில் ஊர்தியான சூரபன்மன் மீது அமர்ந்து செழுமை வாய்ந்த ஒப்பில்லாத தாமரை இருக்கையுடைய நான்முகன் முதலிய தேவர் எதிரில் விழுந்து துதித்து மணம் உடைய மலர்களைச் சொரிந்து அருகில் வரத் தெருவிடத்துக்கு வந்தார். அவ்வாறு, அவர் எழுந்தருளியவுடனே இந்திரன்,

சூரியன், வாயு, வருணன், எமன் என்பவர் முறையே வெண்கொற்றக் குடை பிடித்தும், குளிர்ச்சியைத் தருகின்ற கவரிகளை வீசியும் ஆலவட்டங்களால் காற்றை உண்டாக்கியும், ஒற்றை வாள் ஏந்தியும் உடன் வந்தனர்.

சக்கரப் படையையுடைய திருமாலின் கருடக் கொடியும், நான்முகனின் அன்னக் கொடியும் (என்ற இவற்றுடனே) அழியாத ஊழி நாயகனின் ஊர்தியின் ஒலியோ என்று அஞ்சும்படி, நிறத்துடன் பொருந்திய முருக்க மலரைப் போன்று விளங்கும் உச்சிப் பூவுடனே விளங்கிய கோழிக் கொடியானது அண்டமும் குலுங்கிட ஆரவாரம் செய்தது. நான்முகர்கள் ஆரவாரம் செய்தனர். மறைகள் முழங்கின. தேவ மங்கையர் ஆரவாரம் செய்தனர். வெற்றியும் வீரமும் உடைய பூதத் தலைவர் ஆரவாரம் செய்தனர். ஐந்து பூதங்களும் ஆரவாரம் செய்தன. பூமி காவலர் ஆரவாரம் செய்தனர். இவற்றால் அந்த மலை பேரோசை மிக்க எதிரொலியுடையதாக விளங்கியது.

திண்டி, பேரிகை, தண்ணுமை, சல்லரி, திமிலை, வண்டிகளில் இழுத்துச் செல்லும் குட முழா, எக்காளம், படகம், தொண்டகம், துடி, துந்துபி, வலம்புரிச் சங்கின் கூட்டம் முதலிய இன்னிசைக் கருவிகளை அண்டம் அதிருமாறு முழக்கினர். அழகிய இலகுவான கூந்தலையுடைய இனிய மேனகை, ஊர்வசி, அரம்பை, முருக்க மலர் போன்ற சிவந்த வாயையுடைய திலோத்தமை முதலான நடன மங்கையர் நெருங்கி மஞ்சங்களிலும் விமானங்களிலும் நின்று வாள் போன்ற கண்கள் மோகத்தை உமிழ அமுதம் போல பாடினர்.

ஒப்பில்லாத போர் வீரர்களும் இந்திரன் முதலிய தேவர்களும் சிறந்த தவத்தவர் அனைவரும் பிறருமாக நெருங்கி ஒருவர் உடம்பை மற்றவர் நெருங்கச் செய்வதால் தெருக்களும் முற்றமும் சிறிது இடம் பெறாது ஆயின. இத்தகைய செயல்கள் நிகழ, அளவில்லாத பொன்மயமான தெருவழியே போய், இந்திரன் இயற்றியுள்ள திருமணச் சாலையின் எதிரே அழிவற்ற முதல்வரான முருகப்பெருமான் எழுந்தருளினார். அங்ஙனம் எழுந்தருளிய முருகப்பெருமான் மீது பூரண கும்பங்களில் வைக்கப்பட்டுள்ள தருப்பையால் தோய்க்கப்பட்ட நீரைத் தெளித்து, வாழ்த்துச் சொல்லி, துறவிகள், அனைவரும் ஒன்றாகக் கூடி எதிர் கொண்டு துதித்தனர்.

சிவந்த கைகளில் தேவ மாதர்களும் முனிவர் மாதர்களும் என்ற அனைவரும் அட்டமங்கலங்களை முறைப்படி தாங்கினவராய் எம் தலைவர்

முருகப்பெருமான் எதிரே சென்று வணங்கினர். பஞ்சியும், தூய நெய்யும், கருப்பூரமும், புனுகு நெய்யும் கலந்து உயர்ந்து விளங்கும் தீபங்கள் ஒளிர்கின்ற பொன் தட்டுகளை, அழகிய கூந்தலையுடைய மாதர் உள்ளங்கையில் ஏந்திச் செவ்விய குமரவேளின் எதிரே போய்ச் சிறப்பித்தனர். உதய காலத்தில் இளங்கதிரவன், மேலே உள்ள மேகத்தை விட்டு அகன்றாற் போல, வடிவு செவ்வையாக உள்ள நம் முருகப்பெருமான் நீல நிறமான மயிலினின்று இறங்கியருளினார்.

தாம் ஏறி நடத்தும் மயிலினின்று இறங்கித் திருமணம் நடைபெற வேண்டிய மண்டபத்தின் தலை வாசலில் குமரக் கடவுள் எழுந்தருளவும், அப்போது அரம்பை மாதர்களுடன் தூய்மை வாய்ந்த இந்திராணி வணக்கத்துடனே வந்து பசுவான காமதேனு புதியதாகப் பொழிந்த பாலை மாணிக்கக் கலத்துள் நிரப்பி வந்து முருகப்பெருமானின் திருவடிகளில் வார்த்து அபிடேகம் செய்தாள். இந்திராணி காமதேனு என்ற பசுவின் பாலால் எம்பெருமானின் திருவடிகளை முழுக்காட்டி வணங்கிப் பல தீபங்களை அமைத்து வைத்த பாத்திரங்களை எடுத்து மூன்று முறை ஆராதனை செய்தாள்.

அழகிய சிறந்த மணிகளால் அமைக்கப் பெற்றுப் பொன் மாலைகளைத் தொங்கவிட்டு அலங்காரம் செய்த மண்டபத்துள், சிவபெருமானின் மைந்தரான முருகப்பெருமான் புகுந்தருளினார். இந்திரன் முதலான தேவர்கள் நெருங்கி நிற்கப் பழைய மணிகளால் அமைக்கப்பட்ட மண்டபத்துள் புகுந்து இந்திரனால் இடப்பட்ட உயர்ந்த இருக்கையில் முருகப்பெருமான் எழுந்தருளியிருந்தார். முருகப்பெருமான் இவ்வாறு எழுந்தருளி இருந்தவுடனே நான்முகனும் திருமாலும் வேதங்களில் தேர்ச்சி மிக்க முனிவர்களும் வன்மை வாய்ந்த நவ வீரர் முதலியவரும் குமரப்பெருமானின் ஆணையால் தக்க தக்க இடங்கள் தோறும் அமர்ந்திருந்தனர்.

மண்ணுலகில் வாழ்கின்ற முசுகுந்தன் முதலான மன்னர் அனைவரும் வந்து அப்போது வணங்கித் துதிக்க, எம் இறைவனான கந்தவேள் அவர்களுக்கு அருள் செய்தார். அப்போது நான்முகன் திருமால் என்பவர்களால் அறிவதற்கு அரிய ஞான மூர்த்தியான சிவபெருமான் உமையம்மையாருடன் ஒரு பெரிய விமானத்தில் மிகப்பெரிய படைகள் சூழ்ந்து வர வானில் எழுந்தருளினார்.

குமரக்கடவுள் தம் தாயும் தந்தையுமான உமையம்மையும் சிவபெருமானும் வானத்தில் எழுந்தருளியதைப் பார்த்து மிக்க மகிழ்ச்சி அடைந்து மிகவுயர்ந்த அன்பினால் விரைவாக எழுந்தார். திருமால் முதலான தேவர்கள் எல்லாரும் அளவில்லாத கூட்டமும் 'எம்பெருமனார் எழுந்தருளினார் அதனால் உய்ந்தோம்' எனக் கை கூப்பி வணங்கியவாறு விரைவாக எழுந்தனர்.

அப்பொழுது முழுமுதற் கடவுளான சிவபெருமான் விமானத்தினின்றும் செவ்வனே இறங்கிப் பூதகணங்களுடன் புனிதமான உயர்ந்த பொன்னும் மணியும் கொண்டு செய்த திருமணச் சாலையுள் உமையம்மையாருடன் எழுந்தருளவும், சூரியனும் தாமரை மலரும் ஒன்றுபட்டதைப் போல அவர்கள் திருவடிகளை தம் திருமுடியில் முருகப்பெருமான் சூடியருளினார். வணங்கிய கந்தக் கடவுளை அந்த இருவரும் தம் திருக்கைகளால் எடுத்துத் தம்தம் மார்பில் பொருந்த அணைத்து அன்பால் உச்சியை முகர்ந்தனர்.

தேவர்களும், எல்லா முனிவர்களும், திருமாலும், தாமரை இருக்கையை யுடைய நான்முகனும், நூறு வேள்வியை இயற்றிய இந்திரனும், உலகத்தை ஈன்றருளிய உமையம்மையார், சிவபெருமான் இருவரின் திருவடிகளில் விழுந்து வணங்கினர். அப்போது செவ்வேளான இறைவனின் கட்டளையால் வான்வழியாக ஒரு மணியாசனம் அங்கு வந்து நின்றது. பீலியையுடைய மயிலைப் போன்ற சாயல் கொண்ட உமையம்மையார் ஒரு பக்கத்தில் எழுந்தருளி இருப்ப, அந்த ஆசனத்தில் மேலான பரம்பொருளான சிவபெருமான் எழுந்தருளினார். உமையம்மையாரும் சிவபெருமானும் முருகவேளைப் பார்த்து, 'இங்கு வருக' எனச் சொல்லி அருகில் வரவழைத்து பின் அணைத்துக் கொண்டு, தம் அருகில் அமரச் செய்து, அருள் செய்தனர். அப்போது நான்முகன் அவர்களைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார். "முன்னம் ஒரு நாளில் ஆறுமுகப்பெருமானை அசுரப் படைகள் அழித்தருள விடுத்தருளினீர்கள். அங்ஙனமே அசுரப் படைகளை அழித்து நேற்றுத் தேவர்களை சிறை நீக்கியருள் செய்தார்."

இந்த உதவியை குறித்து நாங்கள் செய்யும் கைமாறு ஏதும் இல்லை என்னும் உள்ளத்தில் உண்டான விருப்பத்தால் வெற்றியுடன் இருந்த அசுரக் கூட்டத்தை அழித்தருளிய முருகப் பெருமானுக்கு இந்திரன் தன் மகளைத் திருமணம் செய்துதர நினைத்தான். அருளுடன் உயிர்கள் எல்லாவற்றையும்

காத்தருளும் உமையம்மையாரும் எம்பெருமானும் அத்தகைய திருமண விழாவான இந்நாளில் இங்கு எழுந்தருள்வீரானால் எங்கள் செயல்கள் யாவும் சிறப்புடையன அல்லவோ?'' என்று நான்முகன் உரைக்கவும், சிவபெருமான் மகிழ்ந்து ''நாமும் இத் திருமணத்தைக் காண்பதற்கு உமையுடன் வந்தோம். இனி இதற்கு வேண்டியவற்றைச் செய்யுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சிவபெருமான் இங்ஙனம் சொல்லியருளிய உடனே, மகிழ்ந்து திருமகளின் கணவனான திருமாலும் நான்முகனும் இந்திரனைப் பார்த்து முறைவிதிப்படி முருகப்பெருமான் திருமணம் செய்து கொள்வதற்கு உன் மகளை அன்புடன் அழைத்துக் கொண்டு வருக'' என்று உரைத்தனர். இந்திரன் அவர்கள் கூற்றுக்கு இசைந்து பசுமையான வளையலை அணிந்த மங்கையர் இருக்கும் இடத்துக்குச் சென்று, தம்மைக் காத்தருளும் தெய்வ யானையை வருக!'' என்று அழைக்க தெய்வயானை அம்மையும் எழுந்தார்.

ஐராவத யானையினால் வளர்க்கும்படி வந்த தெய்வயானை அம்மை மிகவும் மேன்மையான சிவந்த தளிர்கள் தோற்குமாறு விளங்குனின்ற சிறிய திருவடிகளால் நடந்து திருமகளும் கலைகளும் துதிக்க, உள்ளம் மகிழ்ந்து நிற்கின்ற இந்திரன் எதிரே வந்தவுடன், இந்திரன் அந்தக் தேவ மங்கையைத் திருமண மண்டபத்தின் எதிரே அழைத்துக் கொண்டு சென்றான். அப்போது முனிவர்களும் தேவர்களும் 'தாயே வாழ்க' எனச்சொல்லி திருவடிகளை வணங்கினர்.

கூட்டமாக உள்ள அந்தச் சபையானது வணங்க, சபையில் எழுந்தருளியுள்ள உமையம்மையாருடன் சிவபெருமானை வணங்கி வேலையுடைய முருகவேளைக் கண்டு நாணம் கொண்டு எல்லாப் பொருள்களையும் ஈன்றருளிய உமையம்மையார் முருகப்பெருமானையும் தெய்வயானை அம்மையையும் பெரிய பொன் மணிப்பீடத்தில் எழுந்தருளச் செய்தார்.

ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த சிவபெருமானுடன் உமையம்மையார் எழுந்தருளி இருந்தாற் போலவும் எதிர் எதிரே பிரதிபிம்பம் விளங்கியதைப் போலவும், திருமணக் கோலம் கொண்டுள்ள முருகப்பெருமானும் தெய்வயானை அம்மையும் ஒளிவாய்ந்த மணிகள் பதித்த மன்றில்

அமர்ந்தனர். இந்திரன் முருகப்பெருமானின் திருவடியைச் செழுமையுடைய நீரால் முழுக்காட்டி நிறைய கையிலிருந்த சந்தனக் குழம்பைப் பூசி அழகான மலர் சாத்தி அகில் புகை காட்டி நெய்யின் அழகிய தீபத்தால் ஆராதனை செய்தான். இவ்வாறு முருகப்பெருமானின் திருவடிகளுக்குப் பூசை செய்தவுடனே, அந்த இந்திராணியானவள் அப்பெருமானின் திருவடிகளுக்கு அபிடேகம் செய்த நீரினை எடுத்து ஒரு கலத்தில் வைத்தாள்.

இந்திரன் அச்சமயத்தில் முருகப்பெருமானின் ஒரு கையில் தெய்வயானையை அளித்து 'உம் அடியேன் இவளை அளித்தேன்' என்று சொல்லிக் கரகத்தில் உள்ள மணம் கமழும் நீரைத் தாரையாக விடுத்தான். இந்திரன் சிறந்த மறை மந்திர முறையாய் தெய்வயானை அம்மையின் பொருட்டு ஒள்ளிய நீரால் தாரை வார்க்கத் தம் திருவடி மலர்களை அடைந்தவர்களுக்கு விருப்பத்தை தரும் மோட்சத்தையும் செல்வத்தையும் அளிக்கின்ற முருகப்பெருமான் தம் திருக்கையில் ஏற்றருளினார்.

செந்தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட நான்முகன் உள்ளத்தில் உண்டாக்கி அழகிய திருக்கைகளில் அளிக்க, முருகப்பெருமானால் ஏற்றருளப் பெற்ற மங்கல நாணை - தாலியை - அழகிய தெய்வயானை அம்மையார் கழுத்தில் அணிந்து திருமுடியில் நல்ல மலர் மாலையையும் சூட்டியருளினார். இந்திரன் அப்போது மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், இனிய கரும்பு, நல்ல தேன் காமதேனுவின் பால் என்ற இவற்றைச் சிறந்த ஆறுமுகப்பெருமானுக்கு நைவேத்தியமாக்கினான். அப்போது வார்கள் இட்டுக் கட்டப்பட்ட மத்தளங்கள், தக்கைகள், வலம்புரிச் சங்குகள், பேரிகைகள், முதலிய வாத்தியங்கள் ஒலித்தன. ஒன்பது வீரர்களும் பூதகணத் தலைவரும் ஆரவாரம் செய்து கொண்டு முருகப்பெருமானை வணங்கி மகிழ்ச்சியை அடைந்தனர்.

குளிர்ந்த துளசி மாலையை சூடிய திருமால், தாமரையில் வீற்றிருக்கின்ற நான்முகன், எட்டுத் திக்குப் பாலகர், இந்திரன், மற்றத் தேவர்கள் மற்றுமுள்ள அனைவரும் அந்த இடத்தில் அந்த இருவரின் கோலத்தைக் கண்டு தம் கண்ணாகிய புலன் இந்த அரிய காட்சியைப் பார்த்து சிறந்தது என்று உரைத்தனர்.

தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன், எரியும் தீயையும் மற்றும் உள்ளவற்றையும் கொணரச் செய்து, முருகப்பெருமானைக் கொண்டு

தூய்மையான திருமணம் செய்து கொள்ளும் பழைய முறைப்படி வேள்வியைச் செவ்வையாகச் செய்தான். குமரக் கடவுள் தெய்வயானையுடன் தீயை வலமாக வந்து, நான்முகன் தலையில் திருவடியைச் சூட்டிய அப்பெருமான் அம்மியின் மீது அந்த தெய்வயானைப் பெருமாட்டியின் சிறிய திருவடிகளை எடுத்து வைத்தருளினார். மாலினிகள், காளிகள், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி, பால் போன்ற நிறமுடைய கலைமகள் முதலியோர் வணங்கிச் சூழ்ந்து நிற்ப வேலினால் சூரபன்மனான மா மரத்தை இரண்டு பிளவாக வீழ்த்தருளிய முருகப்பெருமான் அருந்ததியைத் தெய்வயானையுடன் பார்த்தருளினார்.

இங்ஙனம் திருமணம் நிகழ்ந்து முடிந்தது. அதன் பின்பு தெய்வயானை அம்மையாருடன் சிவந்த ஒளியையுடைய வேல் படை ஏந்திய முருகப்பெருமான் அன்னை தந்தையாரான உமையம்மையாரையும் சிவபெருமானையும் அன்புடனே வணங்கி வலம் வந்து முறையாய் மூன்று முறை திருவடிகளை வணங்கினர். சிவபெருமானும் உமையம்மையாரும் தம் திருவடிகளில் விழுந்து வணங்கிய மகனும் மருமகளுமான இருவரையும் அன்புடன் எடுத்து அணைத்து, அருள் செய்து தம் அருகில் இருத்தி உச்சி மோந்து, 'உமக்கு எம் முதன்மையைத் தந்தோம்' என்று சிவபெருமான் கூறியருளினார்.

ஆறுமுகப் பெருமானையும் தெய்வயானை அம்மையாரையும் திருமண மண்டபத்தில் இருந்த அனைவரும் முறையாக வணங்க, அவர் அனைவர்க்கும் அருள் செய்து உடன் வந்த பரிவாரத்துடன் நீலகண்டரான சிவபெருமானும் உமையம்மையாரும் விரைவாக மறைந்தருளினார். சிவபெருமானும் உமையம்மையாரும் வரிசையாக வந்திருக்க முனிவர்களையும் கரைகளையுடைய ஆழமான கடலுள் அகப்பட்டு வருந்துபவர் கரையை அடைந்தாற்போல, தெய்வயானை அம்மையுடன் முருகப்பெருமானை வணங்கிக் கவலை நீங்கப் பெற்றனர்.

உமையம்மையும் சிவபெருமானும் வீற்றிருந்த பீடங்களின் மீது முருகப்பெருமான் தெய்வயானை அம்மையாருடன் வீற்றிருந்தனர். அச்செயலைக் கண்டு அந்த இருவரின் தாமரை மலர் போன்ற மேன்மையான அடிகளை அனைவரும் மகிழ்ச்சியால் வணங்கித் துதித்தனர். இங்ஙனம் அனைவரும் வணங்கித் துதித்தவுடனே அரியணையினின்று இறங்கி

எல்லாரும் வணங்கி உடன்வர, சிறந்த ஆறுமுகங்களையுடைய குற்றமற்ற முருகப் பெருமான் மங்கல வாத்தியங்களுடன் போய்த் தெய்வயானை அம்மையாருடன் தம் திருக்கோயிலை அடைந்தார்.

முருகப்பெருமான் அப்போது இந்திரனுக்கும், திருமால், நான்முகன் முதலான தேவர்க்கும் மற்றவர்க்கும் விடை தந்து, தம் பரிவாரங்களை ஆலயத்தின் வெளிப் பக்கத்தில் முறையே காவல் செய்யுமாறு திருவருள் செய்தார். அமிழ்தம் போன்ற மொழியையுடைய தெய்வயானை அம்மையாரும் முருகப்பெருமானும் கலந்திருந்த காலத்தில், நான்முகனும், திருமாலும் மற்றவரும் விரைந்து அவரவர்க்காக அமைந்த பழைய இருப்பிடங்களை அடைய, இந்திரன் பரிவாரங்களுடன் தன் மாளிகையை அடைந்தான்.

## 19. விண் குடியேற்று படலம்

இங்ஙனம் சில நாட்கள் சென்ற பின்னர், ஒரு நாள் தெய்வயானை அம்மையாரும் தாமும் எழுந்தருளிருந்த இடத்தை விடுத்து, இந்திரனின் வினையின் குறையைப் பூர்த்தியாக்குவதைத் தம் திருவுள்ளத்தில் எண்ணி, அரச நகரின் பெரிய கதவின் அருகில் முருகப்பெருமான் வந்தருளினார். அப்போது கொத்தாக மலர்ந்த மலர்களால் அமைக்கப்பெற்ற மாலையணிந்த திரண்ட தோளினரான முருகப்பெருமான், வாயுதேவன் வந்து வணங்க, வணங்கிய வாயுதேவனைப் பார்த்து, ''நம் ஒப்பற்ற தேரைக் கொண்டு வருக!'' என்று அருளி செய்ய, அவன் மன வேகத்தை விட விரைந்து செல்லும் தேரைக் கொணர்ந்து நிறுத்தினான்.

தெய்வத் தன்மையுடன் விரைந்து ஓடுகின்ற தேரின்மீது தெய்வயானை அம்மையாருடன் முருகப்பெருமான் எழுந்தருளினார். எழுந்தருள, தேவர்கள் எல்லாம் கடல் போல அகன்று நின்றவராய்ச் சிறந்த மலர்களை பலமுறை பொழிய, நான்முகன் முதலிய தேவர் யாவரையும் முருகப்பெருமான் பார்த்து, ''நீங்கள் அனைவரும் உங்களுக்குரிய ஊர்திகளில் ஏறி எம்முடன் சொர்க்கத்துக்கு வாருங்கள்!'' என்று அருள் செய்தார். முருகப்பெருமான் இதைச் சொல்லியருளியவுடன் 'நன்று' என்று நான்முகன் அன்னப்பறவை ஊர்தியிலும் அச்சுதனான திருமால் பாம்புக்கு பகையான கருடன் மீதும்

ஏறினர். மாறுபாடு இல்லாத வெள்ளி மலையில் உள்ள தெளிந்த நீர் நிலைகளில் ஊறுகின்ற நீர் ஒழுக்கைப்போல மும்மதமான ஆறு பாய்கின்ற வலிமையுடைய ஐராவதம் என்ற யானையின் மீது ஏறி இந்திரன் வந்தான்.

மேற் சொல்லப்பட்டவர்களே அல்லாமல் நின்றுள்ள தேவர்கள் எல்லாரும், முழுதும் உணர்ந்த முனிவர்களும், தமக்குள்ள ஊர்திகளில் ஏறி வந்து இறைவனை துதித்து 'வள்ளலான குமரப்பெருமான் இப்போது தேவர் உலகத்துக்கு செல்லப் போகின்றனர்' என்று கூட்டமாகப் பலர் சொன்னவுடனே பூதப் படைகள் முழுதும் எழுந்தன. குடமுழா, பணை, கொக்கரை, தண்ணுமை, படகம் முதலிய வாத்தியங்களை எடுத்துக் கொண்டு இடியானது இடித்தாற்போல் பக்கத்தில் சூழ்ந்துள்ள பூதர்கள் முழக்கினர்.

இவ்வாறு நெருங்கிய பரிவாரங்கள் அருகில் பொருந்திச் செல்லப், பாஞ்சுடர்த் தேவரான முருகப்பெருமான் திருப்பரங்குன்றத்தில் உள்ள ஒப்பில்லாத தம் திருநகரத்தை விட்டு புறப்பட்டு, ஒரு போதில் முருகப்பெருமான் வானத்தில் உள்ள தேவர் உலகத்தை கடந்து, மாமன் இந்திரனின் பழைய அமராவதி நகரத்தை அடைந்தார்.

முருகப்பெருமான் வானில் சூரபன்மனின் மகனான பானுகோபன் முன்பு அழித்த இந்திரனின் அமராவதி பட்டிணத்தை முன்போல் நினைத்து சிற்ப நூல் வல்ல தேவதச்சனைப் பார்த்தருளிப் பின்வருமாறு உரைத்தருளினார். "துன்பம் நீங்கப் பெற்ற இந்திரன் அளவில்லாத செல்வத்துடன் முன்பு இருந்தது போல் அமராவதி பட்டிணத்தை விரைவாக படைப்பாயாக!" எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

சிற்பநூல் முறையை உணர்ந்த தேவதச்சன், அமராவதி நகரத்தில் வானத்தில் உலவும் ஆற்றைப் போல உயர்ந்த மதிலை அமைத்தான். தேவதச்சன் ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை மலரை இடமாகக் கொண்ட நான்முகனின் நான்கு வாய்களையும் திறந்தாற் போன்ற உறுப்பினைக் கொண்ட பெரிய மதிலின் நடுவில் நான்கு வாயில்களை உருவாக்கினான். நான்கு திக்குகளில் உள்ள பூதகணத்தவராலும் சுமப்பதற்கு முடியாது என்று கூறும்படி ஏழு நிலைகளையுடைய கோபுரங்களை வரிசை வரிசையாக அமைத்தான். இந்திரன் இருக்கும் அரண்மனையும், சிறந்த ஆறுமுகப் பெருமான் எழுந்தருளியிருக்கும் கோயிலும், மாறுபாடில்லாத

திருமால், நான்முகன் என்பவர்க்குக் கோயில்களும், மற்றும் மற்றவர்க்குரிய இருப்பிடங்களும் ஆகியவற்றையும் தேவதச்சன் அழகுறப் படைத்தான்.

இவ்வாறு ஓர் இமைப் பொழுதுக்குள் தேவதச்சன் அந்நகரைப் படைத்த தன்மையைக் கண்டு, தேன் மலர்ந்த துளசி மாலை சூடிய முடியையுடைய திருமால், நான்முகன் என்பவர் தம் மனதில் மகிழ்வை அடைந்தனர். அந்த சமயத்தில் அரம்பை போன்ற தேவமகளிருடன் பொன் மயமான விமானத்தில் ஏறி இந்திராணி, மன்னன் இந்திரனின் மாளிகையை அடைந்தாள். இந்திராணி அங்ஙனம் செல்லும் போது ஆறுமுகப்பெருமான் இந்திரனின் மாளிகையின் முதல் வாயிலை அடைய நான்முகன் முதலியவர் தம்தம் ஊர்திகளினின்று இறங்க, மயில் போன்ற சாயலையுடைய தெய்வயானை அம்மையுடன் முருகப்பெருமான் மாணிக்க மயமான தேரினின்றும் இறங்கிப் பொன்னால் ஆன சபையில் போய் இருந்தனர்.

ஆறுமுகப் பெருமான் தாமரை மலரில் வீற்றிருப்பவரான நான்முகன் முதலியவரை முழுக்கருணையுடன் பார்த்து, "இந்த நகரத்தில் இருந்து அரசு செய்வதற்கு, இந்திரனுக்கு இப்போதே பொன்னால் ஆன அழகு செய்யப் பட்ட முடியை விரைவாகச் சூட்டுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். இங்ஙனம் ஆறுமுகப்பெருமான் ஆணையிட்டருளியவுடனே ஒரு கணப்போதில் அட்டமங்கலம் முதலானவற்றை வருவித்து மங்கலமான கவரி, ஒளியையுடைய வாள், மணிமுடி, வெண்கொற்றக்குடை முதலியவற்றுடன் இவையல்லாத மற்றவற்றையும் முறைப்படி கொண்டு வந்து சேர்த்தார்கள். அரசுக்கு உரிய அனைத்தையும் அந்த இடத்துக்கு அத்தே வரை அழைப்பித்து அலையையுடைய கங்கையாற்றின் தெளிந்த நீரால் முழுக்காட்டுச் செய்து செழுமை வாய்ந்த ஆடைகள், அணிகள், சந்தனங்கள், மணம் வாய்ந்த மலர் மாலைகள் முதலான அனைத்தும் அணிவித்து பெருமையுடைய அரியணையில் அமரச் செய்து முறைமையுடன் இந்திரனுக்கு முடியைச் சூட்டினர்.

**இந்திரன் அச்சமயத்தில் எம் முருகப்பெருமானின் எதிர் போய் வணங்கித் துதித்து, "எம்பெருமானே, வளமை மிக்க இச்சுவர்க்கத்தையும் பழைய அரசையும் மற்றச் சிறப்புகளையும் ஆகிய எல்லாவற்றையும் ஒன்றாக எனக்கு அளித்தீர். இதனால் நான் உய்ந்தேன். இதைவிட ஒருவருக்கு அடை யத் தக்க பயன் உண்டோ?" என்று இந்திரன் சொல்லவும், முருகப்பெருமான்**

அவனுக்கு அருள் செய்து, "இந்த நகரத்தை ஆண்டு நலமாக இருப்பாயாக!" என்று சொல்லி அவனை அருகில் இருத்தி மற்றத் தேவர்களை அவர்கள் நாள்தோறும் வாழ்கின்ற இருப்பிடங்களுக்குச் செல்லுமாறு அனுப்பி தம் துணைவியான தெய்வயானை அம்மையாரும் தாமும் பெரிய கோயிலை அடைந்தனர்.

## 20. கந்த வெற்பு

இவ்வாறு சில நாட்கள் சென்றன. பின்னர் முருகப்பெருமான் ஒருநாளில் ஒப்பில்லாத கந்தமாதன மலையில் வீற்றிருக்க எண்ணித் தெய்வயானை அம்மையுடன் கோயிலிலிருந்து எழுந்தருளவும், அதனை அறிந்து நான்முகன் முதலியவர் வந்து சேர்ந்தனர்.

முருகப்பெருமான் தேரில் ஏறியவுடனே அவரது ஆணையால் வீரவாகுதேவர் அகன்ற அந்தத் தேரில் ஏறித் தார்க்கோலை ஏந்தித் தேரை நடத்தினார். போரிடும் வில்லையுடைய வீரர் முதலியவரும் பூதகணங்களான கடலும் பக்கத்தில் சூழ்ந்து வர கரிய கண்டம் உடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கயிலாய மலையை கந்தவேள் சென்றடைந்தார். முருகப்பெருமான் அங்குச் சென்று தேரினின்றும் விரைவாக இறங்கி, மூன்று கண்களையுடைய சிவபெருமானை உலகத் தாயான உமையம்மையாருடன் வணங்கி, அவர்களிடம் விடை பெற்று கந்த மலையில் உள்ள தம் ஆலயத்தை அடைந்தார்.

கோயிலுள் சென்ற குமரக்கடவுள் போர் வீரர்கள் எல்லாரும் நெருங்கித் தம் அடித்தொண்டராய் நிற்கப், பழைய படையான பூதங்கள் துதிக்க, மை பூசப் பெற்ற குவளை மலர் போன்ற ஒள்ளிய கண்ணையுடைய தெய்வயானை அம்மையாருடன் கூடி, மிக உயர்ந்த மணிப்பீடத்தில் எழுந்தருளினார். தூய மறைகளாலும் துதிப்பதற்கு அரிய முருகப் பெருமானின் சிவந்த பேரடிகள் வாழ்க! அவர்க்குக் கொடியும் பரியுமாக உள்ள கோழியும், மயிலும் வாழ்க! கொடிய சூரபன்மனின் மார்பை பிளந்த வேல் வாழ்க! அப்பெருமானின் உண்மை அடியவர் வாழ்க! இவ்வுலகம் எல்லாம் வாழ்க!.

## 21. வள்ளியம்மை திருமணம்

பலவகை நன்மைகளையும் தன்னிடம் கொண்ட நல்ல தொண்டை நாட்டில், பலவற்றால் பெருமை கொண்டு விளங்கிய 'மேற்பாடி' என்ற ஊரை, நான்முகன் படைக்கும் அண்டமான உடலுக்கு ஆன்மாவாய் பயன் பொருந்திய பழைமையான ஊர் என்று உரைப்பர். அத்தகைய பழைமையான அழகுடைய 'மேற்பாடி' என்ற ஊரில், பரந்த தெளிந்த நீரையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியை அளந்த திருமாலின் வடிவம் போல நீண்டு உயர்ந்த ஒரு மலை நிலைபெற்று விளங்கியது.

மணம் கமழும் முல்லை மலர்கள் மலர்ந்திருந்த அழகிய காட்சியாலும், மூங்கில் எல்லாம் ஈன்ற தூய ஒளியுடைய முத்துகளின் ஒளியாலும், சோலைகளில் தேன்நிறைந்திருக்கும் தேன் அடைகள் தொங்கும் செய்கையாலும், பலவகை மீன்களும் பூரண சந்திரன்களும் உதயமான ஒரு வானம் போல அந்த வெள்ளிமலைச்சாரல் விளங்கியது. இத்தகைய பல வளங்கள் பொருந்திய அந்த வள்ளி மலையின் வேடுவர் செறிந்துள்ள ஒரு சிற்றூர் இருந்தது. ஆறு முகங்களையுடைய முருகப்பெருமான், முன்பு போலப் பின்னும் ஒரு முறை, தன்னிடம் எழுந்தருளுமாறு, சுவர்க்க நகரமானது பெருந்தவத்தைச் செய்து கொண்டு அங்கு இருந்ததைப் போலத் தூய்மையாக இருந்தது.

அத்தகைய அந்தச் சிற்றூரில் உள்ள வேடர் அனைவருக்கும் நாயகமான தலைமை பூண்டு அரசு செய்பவன், அச்சத்தைத் தரும் வேலையுடைய நம்பி என்று அழைக்கப்படுவன் ஆவான். அவன் முன் பிறவியில் மிகப் பெரிய தவத்தைச் செய்தவன். இப்பிறப்பில் சில மைந்தரைப் பெற்று, மகள் இல்லாத காரணத்தால், மகள் பேற்றை எண்ணி அதன் பொருட்டாக அந்நிலத்துக்குரிய முருகப்பெருமானை எண்ணி வழிபாடு செய்தான். நம்பியரசன் மகள் பேற்றை எண்ணி வழிபாடு செய்யும் அந்த மலையின் ஒரு பக்கத்தில், ஐந்து புலன்களும் ஒரு வழிப்பட்டுச் செல்லுமாறு, அவற்றைச் செவ்வனே நடத்தும் பழைமையை மறவாத சிவ முனிவர் என்கின்ற மேலோர், எவ்வகைப்பட்டவரும் அடைவதற்கு அரிய சிவபெருமானை மனத்துட்கொண்டு, நல்வழி நோன்புகளை மேற்கொண்டு தவத்தைச் செய்து கொண்டிருந்தார்.

மருளும் பெரிய பசிய கண்களையும், சிறிய தலையையும், ஒலிக்கும் புன்மையான வாயையும், வளைந்து நிமிர்ந்து அகன்ற செவியையும், சிறிய

வாலையும், புள்ளிகளையுடைய தூய உடலையும், புல்லிய மயிரையும், குளம்புடன் கூடிய மெல்லிய கால்களையும் உடைய மான் ஒன்று, தன்னைக் கண்டவர் மோகம்கொள்ளுமாறு, சிவமுனிவர் தவம் செய்து கொண்டிருந்த அந்த இடத்தில் வந்து உலவியது. போர்ச் செயலில் மேம்பட்ட கூர்மையான வேலையுடைய உயர்ந்தவரான முருகப்பெருமானது திருவருளால். அங்கு வந்து உலவிய சிறந்த அந்தப் பெண் மானைச் சிவமுனிவர் என்ற தூயவர் பார்த்த அளவில், காமத்தால் மனம் வருந்தலானார்.

தவ முனிவரின் காட்சியளவையால் அந்த மானிடத்தில் கரு உண்டாயிற்று. சிவந்த கண்களையுடைய திருமாலின் மகளாகிய சுந்தரவல்லி என்ற பெருமாட்டி அதை விரைவாய்த் தெளிவாக அறிந்து, கிரவுஞ்ச மலை பிளக்குமாறு வீசிய கூர்மையான வேலையுடைய முருகப்பெருமான், அமிழ்த வல்லியும் தாமும் முன்னம் தவம் செய்து கொண்டிருந்த காலத்தில், திருவாய் மலர்ந்த அருட் குறிப்பின் வழியே நடக்கும் தன்மையுடையவராகையால், அத்தெய்வீகக் கருப்பத்தில் புகுந்தார். (திருமாலின் புதல்வியர் சுந்தரவல்லி, அமிழ்தவல்லி. அவ்விருவரும் முருகனைக் கணவனாக அடைய வேண்டும் எனத் தவம் செய்தனர். அப்போது முருகன் அவர்களை விண்ணிலும் மண்ணிலும் பிறக்குமாறும் தாம் அவர்களை மணந்து கொள்வதாகவும் சொன்னார்; அதன்படி மண்ணுலகத்தில் பிறந்த சுந்தரவல்லி வள்ளியானார்.)

தம் மரபில் தோன்றியவனான 'விஷ்ணுயஜசு' என்னும் அந்தணனிடத்தில், இனிக் 'கற்கி' என்ற குதிரையாய்ப் பிறக்கும் திருமாலின் மகளான சுந்தரிப் பெருமாட்டியார், சிவபெருமானின் நெற்றிக் கண்ணின்றும் அவதரித்த முருகப்பெருமான், முன்னர்ச் சரவணப் பொய்கையில் தவம் செய்து கொண்டிருந்தபோது, "சுந்தரவல்லியே! நீ மானிடத்தின் பிறவி எடுத்து நம்மிடம் வருக!" என்றருளிய திருவருள் வாய்மையால், அந்த மானின் வயிற்றை அடைந்தார். (கலியுகத்தின் முடிவில் 'விஷ்ணு யஜசு' விடம், திருமால் 'கற்கி' என்னும் குதிரையாக அவதரிப்பார் என்பது நூல்கொள்கை. சுந்தரவல்லி மானின் கருவினை அடைந்தார்.)

அச்சமயத்தில் தூய்மையான அந்த மான் அந்த இடத்தை விட்டு நீங்கி, அம் மலைச்சாரலில் உள்ள தினைப் புனம் எங்கும் உலவி, அங்குள்ள சுனைகளின் நீரையுண்டு, ஒரு சிறிது மரச் செறிவில் தங்கி, பின்னர் இனியமலைச் சாரலில் ஏறி நடந்து சென்றது. நல்ல வளங்கள் பொருந்திய

அந்த மலையில் நடந்து சென்ற பெண்மான், அந்த மலையின் இடந்தோறும் நெருங்கியுள்ள தினைப் புனங்களில் எல்லாம், அங்கங்குக் காவல் செய்கின்ற வேட்டுவப் பெண்களின் செவ்வரியுடைய விழிகள் போல் சென்றது. கருக்கொண்ட மான், வேட்டுவச் சேரியில் உள்ள மகளிர்கள், உளியைத் தலையில் கொண்ட கோல் வடிவான, கிழங்குகளைத் தோண்டும் கருவியைக் கொண்டு, தரையின் உள்புகும் பெரிய வள்ளிக் கிழங்கைத் தோண்டி எடுத்துக் குழியாகச் செய்துள்ள புன்மையான தினைப் புனம் ஒன்றில் புகுந்த அந்தப் பெண்மான் பெருமையிற் சிறந்த முருகப் பெருமானுக்குத் துணைவியாக ஆக இருப்பவரை, தான் தன் கருவில் தாங்கி, நடை தளர்ந்து மெல்லச் சென்று மயங்கிப் பெருமூச்சு விட்டு, வயிறு வருந்தி, வள்ளிக் கிழங்கு தோண்டியெடுத்த அந்தக் குழியில் குழந்தையை ஈன்றது.

தனக்கு ஒப்பில்லாத சுந்தரவல்லியார் தம் பூர்வ ஞானம் நீங்கி, குழை என்ற காதணி, சிறுவளையல், திரண்டவளையல் முதலான பழைய அணிகள் பலவற்றை ஒருங்கு தரித்துத் தளிராலும் மலராலும் ஆன தழையுடை புனைந்து மானின் வயிற்றினின்று வெளிப்பட்டு அவதரித்தார். குழந்தையை ஈன்ற அந்தப் பெண்மான் திரண்ட வளையலை அணிந்த கைகளையுடைய அந்தக் குழந்தையை உற்றுப் பார்த்து, 'இது எம் மான் இனத்தைச் சேர்ந்ததன்று. வேற்று இன வடிவு கொண்டு என் வயிற்றில் பிறந்தது,' என்று எண்ணி, மிகவும் மருண்டு, அந்தக் குழந்தையை விட்டு அகன்றது.

மான் ஈன்ற பெண்குழந்தை அழுதிட பன்னிரண்டு தோள்களையுடைய எம் தந்தையான முருகப்பெருமானது திருவருள் தூண்ட, வேட்டுவர் குல மன்னனான நம்பியும் அவனுடைய மனைவியும் பரிவாரங்கள் பக்கத்திலே வர, செம்மையான தினைப் பயிர்கள் மிக்க புனத்தில் சென்றனர். தினைக் கொல்லையில் புகுந்த வேட்டுவமன்னனான நம்பி என்பவன் உடன் வந்த வேட்டுவ மனைவியுடன், இருளை ஒத்த கூந்தலையுடைய அக்குழந்தையினது மென்மையான அழுகுரலைக் கேட்டு, 'அழுவதால் எழும் அந்த ஒலி ஏது?' என்று விரைந்து, வெறுமையான அந்தத் தினைப் புனத்துக்கு வந்தான்.

புனத்தில் வந்த நம்பிராசன் வள்ளிக்கிழங்கைத் தோண்டியெடுத்த குழியில் தங்கிய தூண்டா மணி விளக்கைப் போன்ற பெண் குழந்தையான பெருமாட்டியைக் கண்டான்; 'இந்தா, இஃது ஓர் இளங்குழந்தை!, என்று தன்

## 5. குஹ சுப்ரமணிய

சதுர்புஜம் த்ரிநேத்ரம் ச ஹேமரத்ந கிரீடினம்

சூலம் வஜ்ரம் தரம் ஸவ்யே வரம் அபயகம் அன்யகே

ச்வேத வஸ்ர்ரதரம் தேவம் ஸர்வேஷாம் ரக்ஷண

உன்முகம்

ஜாயயா வாம பார்ச்வேது கல்யாணோத்ஹவ விக்ரஹம்

பாதாம்புஜம் ஹ்ருதி த்யாத்வா குஹரூபம் ஸமாச்ரயே

இரத்னங்க ளிழைத்த பொன் கிரீடம், மூன்று கண்கள்,

நான்குதிருக்கரங்கள், வலது இரு கைகளில் சூலம், வஜ்ரம்

இடது கரங்களில் வரம், அபயம், வெள்ளை வஸ்த்ரம்,

அனைத்தையும் ரக்ஷித்தலையே நோக்காகக்

கொண்டுள்ளவர்.

பத்நி இடது பக்கத்தில், கல்யாண உற்சவ விக்ரஹர்,

ச்யாம (சாம்வல்) நிறம்.

மனைவிக்குச் சொல்லி இருகை களாலும் எடுத்தான்; எடுத்து, தன் மனைவியான குறத்தியின் கையில், அவள் மனத்தில் கொண்ட துன்பம் நீங்கத் தந்தான்.

வேடுவ அரசியான நம்பியின் மனைவி, அக்குழந்தையைத் தன் கையில் வாங்கி, அப்போது தானே கருப்பமும் கருப்ப வேதனையுமாய் இருந்து குழந்தையைப் பெற்றெடுத்தவள் போலப் பேணி, மிகவும் மகிழ்ந்து அன்பு மிகுதியால் தன் கொங்கைகளில் சுரக்கும் அமிர்தமான பாலை ஊட்டினாள். அந்த வள்ளிமலைக் குறவனான நம்பியரசன், தினைப்புனத்தை விட்டு நீங்கி, மழலை பொருந்திய வாயுடைய பூங்கொம்பு போன்ற குழந்தையுடன், மனைவியான குறத்தியை அழைத்துக் கொண்டு, தன் சிறு குடிலைச் சேர்ந்தான்.

பின்னர் குழந்தை கிடைத்த மகிழ்ச்சியைக் குரவை ஆடி வெண்ணிற அரிசி, மஞ்சள், மலர் ஆகியவற்றைச் சிந்தி, ஆட்டை வெட்டி, அழகிய நீண்ட வேலையுடைய முருகனுக்கு விழாச் செய்து வேலனைக் கொண்டு வெறியாட்டைச் செய்தான். அப்போது அங்கு வந்த அவர்களினத்து முதியவர் ஒருவர் வந்து வள்ளிக்கிழங்கு தோண்டிய குழியில் தோன்றிய காரணத்தால் இப்பெண் குழந்தைக்கு "வள்ளி" என்ற பெயரைச் சூட்டினார். தம்குலத்தில் தோன்றிய சுற்றத்தவரான முதியவர் இப்படிச் சிந்தித்து 'வள்ளி' என்ற இயற்பெயரைச் சூட்டிட அதனைக் கேட்டு, திரண்ட கொங்கையையுடைய குறத்தியுடன் கூடிய வேட்டுவர் மன்னனான நம்பி, உலக அன்னையான வள்ளியை 'நம் மகள்' என்று அவனும் பெயரைச் சூட்டி அன்பு பாராட்டி வளர்த்து வந்தான்.

அழகான தொட்டில் பருவம் நீங்கி, நிலத்தில் தவழ்ந்து, தளர் நடையும் நடந்து, வேங்கை மர நிழலினையுடைய முற்றத்தில் நடந்து, சிறுமுறத்தால் முத்துகளையும் மணிகளையும் புடைத்து, சிறு வீடு கட்டி, அவ்வீட்டில் சிறு சோறு சமைத்து இங்ஙனம் பெண் குழந்தைகளுக்குரிய விளையாட்டுகளை வள்ளி நாயகியார் பழைய பிறவி உணர்வு சிறிதும் இல்லாது தவழ்தல் முதலான உள்ளம் மகிழ்தற்குரிய விளையாட்டுகளைச் செய்து வளர்ந்து வரும் காலத்தில், 'எம் தந்தையான முருகப்பெருமானின் தோள்களைத் தழுவுதற்கு இந்தப் பருவம் பொருந்தும்' என்று கூறும்படி, பசிய வளையலை அணிந்த வள்ளியம்மையாருக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. தாயும் அந்த இல்லத்துத் தலைவனான நம்பியும், மணத்துக்கு உரியதான

பருவத்தைத் தம் மகள் அடைந்ததைப் பார்த்துத் தம் குலத்தில் வழங்கி வரும் ஒரு முறையை ஆராய்ந்து, மானின் வயிற்றில் அவதாரம் செய்த வள்ளி நாயகியைப், பசிய தினைப் புனத்தில் தினையின் விளைவை நன்கு காவலிட செய்யும்படி செய்தனர்.

இழுத்துக் கட்டப்பட்ட வில்லையுடைய கரிய வேடர்கள் கைத்திறத்தால் அமைந்த பரண்மீது எம் வள்ளி நாயகியார் வீற்றிருந்து, 'தட்டை', 'குளிர்' 'தழல்' என்னும் கிளி கடிகருவிகளை கையில் கொண்டு, தினைப்புனத்தைக் கிளி முதலான பறவை அணுகாதவாறு காத்து வந்தார். இவ்வாறு இந்நாயகி தினைப் புனத்தைக் காவல் செய்து கொண்டிருந்தார். அவ்வாறான பரிபக்குவ நிலையில், அந்த வள்ளிக்கு அருள் செய்யுமாறு ஞானக் கதிர்களையுடைய வேலைக் கொண்ட முருகன், கயிலாய மலையைச் சார்ந்துள்ள கந்தமலையைவிட்டு நீங்கித் துணைவர்களையன்றித் தெய்வயானையையும் விட்டுப் பிரிந்து தனியாய் வந்து, திருத்தணிகை மலையில் தங்கினார். பிரப்பங் கொடிகள் தழைத்துப் படர்ந்த'தணிகை மலையில், சுடரையுடைய வேல் ஏந்திய வீரரான முருகப் பெருமான் வீற்றிருந்தார். அந்தச் சமயத்தில், இசை நூற்படி சுட்டுவிரல் செய் தொழிலான வார்தலைச் செய்தலும், சுட்டு விரலும் பெரு விரலும் கூட்டி நரம்பை அகமும் புறமும் வருடுதல் என்ற வடித்தலைச் செய்தலும், நரம்புகளை வலிவு காணத் தெறித்தலும், நரம்புகளை இடைவிட்டுத் தீண்டுதலான உரழ்தலைச் செய்தலும் இவ்வாறு யாழ் வாசித்தலில் வல்ல தேவ முனிவரான நாரதர் பூமிக்கு வந்தார். கரிய தினைப் புனத்தில் காவல் செய்கின்ற கன்னியான வள்ளி நாயகியைத் தரிசித்து, இவற்றைக் கூறித் துதி செய்து, அந்த இடத்தினின்று நீங்கி, ஒரு நாளில், மூன்று நீலமலர்கள் மலர்கின்ற தீர்த்தமான சுனையையுடைய தணிகை மலையை அடைந்தார். திருத்தணிகை மலையில் எழுந்தருளியிருந்த ஒப்பற்ற முருகனை அடைந்து அப்பெருமானின் அஞ்ஞானத்தைச் சீறும் இரு திருவடிகளைப் பல முறை வணங்கித் தாழ்ந்து நின்று மௌனமாக நல்ல தவத்தைச் செய்த சிவமுனிவரின் மகளார், மான் வயிற்றிலே பிறந்தவர், வள்ளி மலையில் வேடர் குலத்தில் கன்னிப் பருவத்தை அடைந்து தினைப் புனத்தைக் காவல் செய்து கொண்டு பரண்மீது உள்ளார்.

"ஐயனே! அந்தப் பெண் தெய்வத்தின் திருமேனியின் நலம் செந்தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமிக்கும் இல்லை! இது பொய்யன்று.

இந்தப் பூமியில் கண்டறியாத அதனைக் காணும் பேறு பெற்றுத் தங்களுக்கு விண்ணப்பம் செய்ய வந்தேன்; தாங்கள் அங்குச் சென்று அந்த அழகணங்கைக் காண்க! "உயிர்க்களுக்கெல்லாம் தாயாகும் அந்த அம்மையார் முற்பிறப்பில் திருமாலின் மகள். தங்களது திருத்தோள்களைத் தழுவ முன்னரே தவம் செய்தவர். நான் கூறிய இப்போதே போய் அந்த அம்மையாருக்கு அருள் செய்க," என்று வேண்டிக் கொண்டார்.

இவ்வாறு நாரத முனிவர் வேண்டிக் கொண்ட சமயத்தில் கூர்மையான வேலையுடைய முருகப்பெருமான், 'குற்றமற்ற காட்சியுடையவனே! நீ கூறிய இது நல்லது நல்லது! நீ செல்வாயாக' எனச் சொல்லி மனத்தை தூண்டிக் காம நோய் மிகும் விரகநோயான கவலையைத் தம் உள்ளத்தே கொண்டார். பேராற்றல் படைத்த முருகப்பெருமான் அம்புகளை எய்யும் நீண்ட வில்லை யுடைய வேடரின் மகளான வள்ளி நாயகியார் உய்யுமாறு நல்ல அருள் செய்து, தன் உண்மை வடிவத்தை நீத்து, மோகத்துக்குரிய மனித வடிவம் கொண்டு அடிகளில் கட்டியவீரக்கழலை உடையவராய் இடையில் கச்சினையுடையவராய், தோளில் மாலைகளை அணிந்தவராய், அம்பு தொடுத்து கட்டப்பட்ட வில்லை உடையவராய், இருண்ட தலைமுடியுடையவராய், நெடியவராய், மனித வேட்டுவக் கோலம் பூண்டு முருகப்பெருமான் காட்சி தந்தார்.

கிளியின் மழலைச் சொல் போன்ற மழலைச் சொல்லையுடைய வள்ளி நாயகியாரிடத்தில் தமக்குண்டான மோகமானது, தம் உள்ளத்தைப் பிடர் பிடித்து உந்த எம் பெருமானான முருகன், திருத்தணிகை மலையை விட்டு நீங்கி, இவ்வுலகத்தவரால் புகழப்படுகின்ற பழைமையான சிறப்புடைய அழகிய வள்ளி மலை சென்று நல்ல தினைப்பயிர் விளைந்துள்ள பெரிய தினைப்புனத்தில், முன் ஒருகால் வைத்து மறந்து விட்ட காலம் கடந்த பொருளை, பின் ஒரு கால் நினைத்த அப்போதே எதிரில் கண்டது போல, முருகப்பெருமான் பிரிந்திருந்த தலைவியான வள்ளி நாயகியைக்கண்டார்.

பொலிவுடைய மேகத்தில் தோன்றுகின்ற ஒரு மின்னல் எனக் கூறுமாறு வள்ளி மலைத் தினைப் புனத்தில் காவல் செய்கின்ற காமம் சான்ற இளமைப் பருவத்தை உடைய வள்ளி நாயகியாரை, கடப்பமலர் மாலையை விரும்பும் முருகப்பெருமான் பார்த்து, புகை மிகும் சிவந்த விரகத்தீ பற்றி எரியத் தளர்ந்து வாடி, கலக்கம் மிகும் உள்ளத்தை உடையவராய், வள்ளி வீற்றிருக்கும் பரணுக்கு அருகில் சென்றார்.

"நீண்ட கரிய கூந்தலையுடையவளே! அறிவுதளரும் எனக்கு உன் பெயரை நீ சொல்லாது போனாலும், உன் ஊரின் பெயரையாவது சொல்! ஊர்ப் பெயரையும் சொல்ல முடியாது என்றாலும் சிறந்த உனது ஊர்க்குப் போகும் வழியையேனும் சொல்வாயாக"! என முருகப்பெருமான் வினவினார். "மங்கையே! ஏதேனும் ஒரு சொல்லைச் சொல்! ஒரு சொல்லும் சொல்லாது போனால், ஒரு சிறு புன்முறுவலையேனும் செய். அதனையும் செய்யாயின், ஒரு முறை உன் கடைக்கண்ணால் கடைக் கணித்தலான அருளைச் செய். ஒரு சிறிதும் கடைக்கணியாது போயினும், காமம் மிக்கு உழல்பவனான நான் உயிர் உய்யும் வழி ஒன்றைக் காட்டு. அதுவும் செய்யாது போனால், மனம் சற்று உருகு; மனமும் உருகாயாயின், உன்னிடம் கொலைப்பழியானது வந்து சேரும்! ஆதலால் உன்னிடம் பாராமுகம் ஒழிக!" என்று முருகப்பெருமான் உரைத்தார்.

திருமகளின் மகளும் கன்னியுமான வள்ளியின் முன்பு, அழகிய நெடிய முருகப்பெருமான் நின்று, விருப்பமான மோகத்தின் மிகுதியைப் புலப்படுத்தி, இவ்வாறு சொல்லிக் கொண்டிருந்த போது, ஒப்பற்ற வள்ளிநாயகியின் தந்தையாம் நம்பி, வேடர் பக்கத்தில் சூழ்ந்துவர, கொம்புஊத, முள்ளம்பன்றியுடன் கரடிகளும் யானைகளும் அஞ்சி ஓட, விரைவாகத் தன் மகளிடம் வந்தான். அச்சமயத்தில் வேலையுடைய முருகன், தாம் ஓர் வேங்கை மரத்தின் வடிவமாய் மாறி, வேதங்கள் அந்த மரத்தில் வேராகவும், உயர்ந்த சைவாகமங்கள் எல்லாம் அந்த வேங்கை மரத்தின் மேலான ஒரு பகுதியாகவும், பல கலைகள் எல்லாம் பக்கங்களில் பொருந்திய கொம்புகளாகவும் நின்றருளினார். வேட்டுவ மன்னனான நம்பியரசன் அங்கு விரைந்து வந்து, தம் பெண்ணான வள்ளியைக் கண்டு, நல்லவள்ளிக் கிழங்கும் தினையும் தினைமாவும் தேனும் காட்டுப் பசுவினது பாலும் மற்ற உணவு வகைகளும் அளித்து அதன் பின்பு அழகிய அந்தத் தினைப் புனத்தில் நின்ற புதிய வேங்கை மரத்தைக் கண்டான்.

அந்த இடத்தில், அந்த நம்பியரசனுக்குப் பக்கத்தில் நின்ற கொல்லும் தொழிலில் வல்ல வேடர்கள், வேங்கை மரத்தின் புதுமையான நிலையைப் பார்த்து வியப்பு அடைந்தவராய், "இங்கு இந்த வேங்கை மரம் முன்பு இருந்தது அன்று. இப்போது திடீரென்று தோன்றியதால், நமக்குத் தீமை வருவது நிச்சயம்," என்று சொல்லி "இருளைப் போக்கும் கதிர்களை உள்ளே நுழைய விடாது தடுக்கும் பெரு நிழலைச் செய்கின்ற இந்த வேங்கை மரத்தை

இப்போதே முறித்து விடுங்கள்! வேருடன் விழுமாறு சுற்றிலும் மண்ணை பறித்து விடுங்கள்! சற்றும் தாமதிக்காதீர்கள்" என்று பலரும் பலவாறு கூற வேடர் தலைவன் நம்பி அவர்களைத் தடுத்து வள்ளியம்மையாரின் திருமுகத்தைப் பார்த்து "நல்ல மணமுடைய மலர்களைக் கொண்ட புதிய வேங்கை மரம் ஒன்று, செங்கதிர்களையுடைய தினைப் பயிர் செறிந்த இந்தப் புனத்தில் வந்து நின்றதென்ன! உண்மையைக் கூறுவாயாக!" என வினவினான்.

தந்தையானவன் அவ்வாறு உரைக்கவும் அதைக் கேட்டு வள்ளியம்மையாரும் அச்சம் கொண்டு, "தந்தையே! இந்த வேங்கைமரமானது இங்கு வந்த விதத்தை அறியேன். மாயாசாலம் போல் இந்த மரம் இங்குத் தோன்றியது. 'நேற்று இல்லாத ஒன்று .இன்று புதிதாய்த் தோன்றியது' என்று உள்ளத்தில் நடுக்கம் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தேன்!" என்று உரைத்தார். வள்ளிநாயகி இவ்வாறு சொன்ன பின்பு, "மகளே! அஞ்சாதே! புதிய மலர்களையுடைய இந்த வேங்கை மரம் உனக்கு ஒரு இனிய துணையாக இங்கு வந்தது! எனவே, இனிதாக இருப்பாயாக!" என்று சொல்லி, இந்த மலைக்கு அரசனான நம்பி, வேடர் குழுவுடன் சென்றான். நம்பி சென்றதைப் பார்த்து, முருகப் பெருமான் தினைப்புனத்தில் வேங்கை மரமாய் நின்ற தன்மையினின்று நீங்கி, குறவர் மகளான வள்ளியம்மையார் காணுமாறு, முன்பு தான் கொண்டிருந்த மனித வடிவத்தைக் கொண்டார்.

முன்பு கொண்டிருந்த வடிவத்தைக் கொண்டு முருகப் பெருமான், அளவில்லாத மோகம் கொண்டு இரங்குவாரைப் போல, இருள் போன்ற கூந்தலையுடைய வள்ளி நாயகியின் அருகில் நின்று, உயிர்கள் மீது வைத்த நல்ல திருவருளினால் பின்வரும் இவற்றை திருவாய் மலர்ந்தார். "கொடுமுடியுடைய மலையில் வாழும் குறவர் குலப் பெண்ணே! நீ நீராடுகின்ற சுனையில் நீராயும், நீ பூசிக் கொள்ளும் குழம்பாயும், சூடிய மலர்களாயும் நான் இருந்தும், நீ என்னைக் கலந்து தழுவப் பெறவில்லை. எனவே, வாட்டம் அடைந்தேன். இனி உன்னை ஆட்கொள்வதற்குச் செய்யும் விதந்தான் என்ன?" என்று இப்படிப் பலப் பல சொற்களான இவற்றை முருகப் பெருமான் கூறி, குறவர் பெற்ற பெண்ணான வள்ளி, வெட்கம் அடைந்து சொல்லத் தொடங்கினார்.

"நானோ இழிந்த குலமான வேடர் குலப்பெண். நீங்களோ உலகம் முழுவதற்கும் அருள் செய்யும் முதல்வர். இழிந்த குலத்தவளான என்னைத் தழுவுதலை எண்ணி, உம் பெருமைக்குத் தகாதவற்றைச் சொல்லுதல் பழியாகும். அதுவேயன்றி அது தகுதியுமாகாது!" என்று வள்ளி நாயகி சொல்லிய போது, அந்த நாயகியின் உள்ளம் அச்சம் கொள்ளுமாறு அம்மலைத் தலைவனான நம்பி, வெற்றியுடைய தொண்டகப் பறையும் பெரிய உடுக்கையும் ஒலிக்க, வேடர் கூட்டத்துடன் அங்கு வந்தான். இளமையுடைய மான் போன்ற வள்ளி நாயகி, போர்மேற்கொண்டு வருபவரைப் போல் தந்தை முதலியவர் வந்ததைக் கண்டு, உள்ளம் நடுங்கி அஞ்சி,கடவுளான முருகப்பெருமானின் முகத்தை நோக்கி, "வெம்மையான வலியுடைய இந்த வேடர்கள் கொடியவர்கள். தாங்கள் இங்கு நில்லாது, நான் உய்யும் பொருட்டு, நினைந்து இப்போதே விரைவாக அகன்று செல்வீராக" என்று வேண்டினார்.

அங்கு நின்ற முருகப்பெருமான், வள்ளி நாயகி 'இனி இங்கிருந்து விரைவாக ஓடும்'! என்று சொன்ன சொல்லைக் கேட்டு, மிக்க மகிழ்ச்சி அடைந்து, உலகம் புகழ்கின்ற சைவநெறி கைவந்த தவத்தவர் கோலத்தைமேற்கொண்டு, வள்ளி நாயகியாரை நோக்கி வருகின்ற வேடர்க்கு எதிரே சென்றார். அந்த வயது முதிர்ந்த சைவக் கோலம் கொண்டவர், வேடர் தலைவனான நம்பியின் எதிரே போய், அன்புடன் திருநீற்றை அளித்து, "உனக்கு வலிய ஆற்றல் மிகுவதாகுக!. இன்றியமையாத செல்வம் எய்துக!" என்று வாழ்த்துக் கூறினார். குறவர் தலைவனான நம்பி, தனக்குத் திருநீற்றை அன்புடனே அளித்த முதிர்ந்த தவத்தவரான அக்குரவரின் அடிகளை வணங்கி, "மேன்மையுடைய இந்த மலையிலே, தவத்தவராக வந்த தாங்கள் விரும்பியதை கூறுங்கள்!" என வேண்டிக் கொள்ள "நாண் பூட்டிய பெரிய வில்லைக் கொண்ட வேடரின் மகளே! என் நாவரண்டது. தெள்ளிய நீர் வேட்கையை உடையேன். நானோ முதியவன். இந்த மலையிலே ஏற்ற இழிவான வழிகளை நான் அறியேன். இரண்டு கால்களும் வருந்தும் என்று தாமதம் செய்யாது, விரைவாக உடன் வந்து, குறிப்பிட்ட சுனை நீரைக் காட்டுவாயாக!" என்று ஆறு முகங்களையும் மறைத்துக் கொண்ட முதிய தவத்தவரான முருகப்பெருமான் சொன்னார்.

நெருங்கிய கூந்தலையுடைய அந்த வள்ளி நாயகியார் முதிய தவத்தவரான முருகப்பெருமானின் சொல்லைக் கேட்டு, "எம் அடிகளே!

வருக! என்று அழைத்துக் கொண்டு முன்னர்ப்போய், தத்துவங்களான வரைப்புகளைக் கடந்து போய், மணம் கமழும் சுனை நீரைக் காட்ட, வெயிலால் வெப்பம் அடைந்தவரைப் போல, அந்த நீரைக் குடித்துத் தாகம் தணிந்த பின்பு "மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய மென்மையான இயல்புடையவளே! உடலை வருத்தும் நீக்குவதற்கரிய பசியைப் போக்கினாய்; தெளிந்த நீர் வேட்கையையும் போக்கினாய்;இவ்வாறு நீ செய்தும் எனக்கு உண்டான தளர்ச்சி இன்னும் நீங்கவில்லை! வினையை மேற்கொண்ட எனதுமோகத்தைத் தணிப்பாயானால் என் மனக்குறை முடிந்தது ஆகும்!" என்று அப்பெருமான் மொழிந்தார். மிகவும் முதியவரான முருகப்பெருமான் இரங்கித் தனது குறையை எடுத்துச் சொல்லி இரத்தலைச் செய்து அறிவு மயங்கிக் கும்பிட்டு நின்றார். அச்சமயத்தில், மணம் கமழ்கின்ற மலரணிந்த கூந்தலையுடைய வள்ளி நாயகியார் "மேன்மையுடையதவத்தவரின் வேடத்தைக் கொண்டு, இப்போது அந்த வேடத்துக்குப் பொருத்தமில்லாதவற்றை உரைத்தீர்! உம் இயல்பு எவர் பார்வைக்கும் பாலாகக் காணப்பட்டு, பால் என்று நினைத்துக்குடித்தவரின் உயிரைப் பறிக்கும், வெள்ளை நிறமான ஆலகால நஞ்சின் தன்மை கொண்டதாக உள்ளது. குற்றம் இல்லாத சிறந்த தவத்தை உடையவரே! கொய்யப்படும் தினைப்புனங்காவல் செய்பவளான என்னை, உடலைத் தழுவ நினைத்து, கூறக் கூடாததைக் கூறிக் கும்பிட்டு நிற்பது முறையாகாது! வேடர்கள் இந்தத்தகாத செய்கையை அறிவாராயின் அது தீமையாக முடியும். நாவன்மையுடையவரே! காவல் செய்பவளாக யான் காத்திருக்கும் தினைப் புனத்தில் பறவைகளுடன் விலங்குகளும் சேர்ந்து யாவும் வளர்ந்த பசிய தினைக்கதிர்களைக் கவரும். ஆதலால் நான் காலம் தாழ்த்தாது உமக்கு முன்னம் அங்குச் செல்வேன்!" எனச் சொல்லி, வள்ளி நாயகியார் முன்னால் சென்றார்.

திருமகள் போன்ற வள்ளி நாயகி முன்னால் செல்வதை பார்த்து, எம் இறைவனான முருகன், 'இனி என்ன செய்வது?' என்று அவர்பால் இரங்கி, தமக்கு ஒப்பில்லாத யானை முகத்தையுடைய விநாயகப் பெருமானை "மூலப்பொருளாய் உள்ளவரே! முனைப்பு அடங்காது முன்னே செல்லும் இந்த மங்கைக்கு முன் வழிகாட்டியருளுக!" என்று தியானம் செய்ய வள்ளி நாயகியாரின் வேகத்தைக் கெடுத்து ஆண்டருள வேண்டிய சமயத்தில், ஆறுமுகங்களையுடைய குமரனின் வேண்டுகோளுக்கு இணங்கி இரங்கி

முன்னால் செல்லும் அந்த அம்மையாரின் எதிரே, யானை முகக்கடவுளான ஒப்பற்ற மலை போன்ற யானை திரைமடிகின்ற கடல் போல முழக்கம் செய்து கொண்டு வந்தது.

அப்போது வள்ளிநாயகி, அச்சத்துடன் மீண்டு, தம் தவ வேடம் காரணமாகப் பொய்மைகளைப் போக்கும் பொருட்டுப் பொய் வேடம் பூண்ட மேலோரான முருகப்பெருமானின் பக்கத்தை அடைந்து "என் அடிகளே! ஏழையேனுக்கு இரங்கி, இங்கு எழுந்தருளிய இந்த வேழத்தினின்று என்னைக் காத்தருள்க. தங்கள் சொற்படி செய்வேன்" என்று அவரது பின் பக்கத்தில் போய்த் தழுவிக் கொண்டார். அப்போது ஆறுமுகக் கடவுள், ஒருபுறமான முன் பக்கத்தில் முதிய பிரணவமான ஆண் யானையின் கொம்பு வந்து ஒற்ற, அதே நேரத்தில் மற்றொரு பக்கமான பின்புறத்தில் வள்ளி என்ற பெண் யானையின் தனங்களான கொம்புகள் பொருந்தி ஊன்ற, இவற்றுக்கு நடுவில் வன்மையான வச்சிரத்தால் ஆன தூண் போல நின்றார்.

முருகப்பெருமான், விநாயகரான ஆண் யானையை வழிபாடு செய்து துதித்துத் "தாங்கள் வெளிப்பட்டமையால் என் அறிவு மயக்கம் தீரப் பெற்றேன். அங்ஙனமே வள்ளிநாயகியும் தானே வந்து சேர்தலைப் பெற்றாள். எம் பெருமானே மீண்டும் தங்கள் இடத்துக்கு எழுந்தருளுக!" என வேண்டிக் கொண்டார். என வழிபாடு செய்த நேரத்தில், மூத்தவரான யானை முகக்கடவுள் 'நன்று' என்று சென்றருளினார். ஆறுமுகக் கடவுள், ஒரு மணம் பொருந்திய சோலையில் கன்னியான வள்ளிநாயகியை இரண்டறக்கலந்து நிறைந்த கருணை செய்து, தம் பழைய வடிவத்தை அப்பெருமாட்டிக்கு காட்டியருளினார்.

பன்னிரண்டு திருத்தோள்களும், நிகரற்ற ஆறுமுகங்களும், பெருமையுடைய கூரான வேலும், வச்சிராயுதமும், மற்றப் படைகளும், பொன் ஒளி சூழ்ந்த பலவான மரகத மணிகளைக் கொண்ட பச்சை மயில் வாகனமும் தம்மிடம் அமைய, தினைப்புனம் காவல் செய்கின்ற குறமகளான வள்ளிநாயகியின் கண்கள் கண்டுகளிக்குமாறு ஆற்றல் உடைய முருகப்பெருமான் வெளிப்பட்டு காட்சி தந்தார். கூர்மை பொருந்திய நீண்ட வேலையுடைய முருகனின் திருக்கோலத்தைத் தரிசித்து வணங்கித் துதித்து, வியப்படைந்து, நடுநடுங்கி கைகளைக் குவித்து, மெய் வியர்த்து, இவ்வற்றால் தெவிட்டாது அன்புமிக்க வள்ளியம்மையார் "மின்னல் போல ஞானச் சுடரை வெளிப்படுத்தும் வேலைத் தாங்கியவரே! இந்தப் பெருங்கோலத்தை

முன்னே எனக்குக் காட்டி என்னைச் சேராமல் இத்தனைக் காலமும் வீணே கழித்தீர்! அவ்வாறு செய்தது பரிபக்குவம் அற்ற அடியேன் செய்த குற்றத்தாலேயோ? இத்தகைய தவக்குறைவுகள் அனைத்தையும் இப்போதே போக்கி அடியேனை ஆட்கொள்ளும்!" என வேண்டிக் கொண்டார்.

"முற்பிறப்பில் நீ பூவுலகத்தை உண்ட திருமாலின் மகள். நீ என்னை அடைய எண்ணி நல்ல தவத்தை அந்தப் பிறவியில் செய்தாய். அந்தத் தவத்தின் சிறப்பாலே இப்பிறப்பில் உன்னை அணைந்தோம்" என்று சொல்லி, எம் தலைவியான வள்ளியம்மையாரைத் தழுவி முருகன் அருள் செய்து இறைவியான வள்ளி நாயகியை நோக்கி, "நன்மை பொருந்திய தலைவியே! உங்கள் தினைப் புனத்தில் முன் போல் காவல் செய்ய முதலில் செல்வாயாக! யாமும் அங்கு வருவோம்," என்று கூறியருளினார். இறைவியார் அப்பெருமானின் அடிகளை வணங்கி விடைபெற்று, அத் தினைப் புனத்துக்குச் சென்றார்.

வளைந்த வில்போன்ற புருவத்தை உடைய வள்ளியம்மையார், பொலிவான கதிர்களையுடைய தினைப் புனத்துக்குச் சென்று, அங்குக் காவல் செய்பவர் போல இருந்தார். அப்போது அயலில் உள்ள தினைப் புனத்தில் காவல் செய்து கொண்டிருந்த தோழியானவள் வள்ளி நாயகி இருந்த இடத்துக்கு வந்து, அவரது திருவடிகளை வணங்கிப் பக்கத்தில் இருந்தாள்.

இயற்கையாய் அமைந்த மணமும், தோற்றமும், உலகம் புகழும் ஒழுக்கமும், சொல்லும், செயலும், நினைவும், எஞ்சிய பயில்வும் என்ற ஏழும் வள்ளிநாயகியாரிடம் வேறுபட்டிருத்தலையும், வேறுபட்டிருத்தற்குக் காரணமான நிகழ்வையும் பார்த்து இதற்குக் காரணம் யாா? என்று சிந்தித்து தெளிவு பிறப்பதற்குக் காரணமாக அப்போது அவள் பின்வரும் இவற்றை வினவினாள். "இந்தத் தினைப் புனம் காவல் செய்பவர் இல்லாமல் அழிந்தது. காவல் செய்ய வேண்டிய நீ எங்குச் சென்றாய்? சொல்!" என்று இவ்வாறு அந்தத் தோழியானவள் வினவ, வள்ளி நாயகி வெட்கம் அடைந்து, "வெப்பம் உடைய வேனிற் பருவத்தால், அது நீங்குவதற்காக அப்பால் உள்ள மென்னையான சுனையில் நீராட நான் சென்றேன்!" என்று இயம்பினார்.

"கரிய கண்கள் சிவப்பு அடையவும், சிவப்பான வாய் வெளுக்கவும், உடல் வியர்வை அடையவும், கொங்கைகள் பெருக்கவும், கைவளையல்

சோரவும் செய்கின்ற குளிர்ந்த சுனை எங்கே உள்ளது? எனக்குக் காட்டு வாயாக!" என்று அந்தத் தோழி வினவி தன்னை இகழ்ந்து பேசும் அந்தத் தோழியை வள்ளியம்மையார் சினந்து பார்த்து, "உன்னைத் தக்கஉயிர்த் துணையாக மனத்தில் கொண்டு, நான் இந்த இடத்தில் தனியாக இருந்தேன். இத்தகைய என் மீதும் பக்கத்தில் இருந்து வந்து குற்றத்தைச் சுமத்தினாய். ஆதலால் நீ கொடியவள்" என்று வள்ளி நாயகி பொய்க்கோபம் கொண்டாள்.

அப்போது முருகப்பெருமான் வளைக்கப்பட்ட வில்லையுடையவராய், இலக்கை நாடும் அம்பை உடையவராய், தீட்டப்பட்ட கூரிய உடையவாள் செறித்த இருப்புக்கச்சினராய், வேட்டைத் தொழில் பயில்கின்ற ஒருவனைப் போல, இரண்டு அடிகளும் சிவக்கத்தனியாய் அங்குச் சென்று "செங்காந்தள் மலர் போன்ற கைகளையுடைய மங்கையரே! நான் தொடுத்த அம்பால் பெருகி வழியும் இரத்தமும் பெரும் முழக்கம் இடும் வாயும், இளைத்த புண்பட்ட உடலும் உடையதாய் ஒரு யானை இங்க வந்ததுண்டா?" என வினவினார். ஊழி முதல்வரான முருகப்பெருமான் விடைவேண்டி நிற்க அப்போது "உம் ஆண்தகைமையான வன்மையைப் பெரு வீரரான உமக்கு ஒப்பவர் உள்ளவர்க்கு கூறுதலன்றி, எளியவரான எம் போன்ற மங்கையர்க்கு உரைப்பதால் என்ன பயன்?" என்று விடை சொன்னாள், வள்ளிநாயகியுடன் பேசிக் கொண்டிருந்த தோழி.

மீண்டும் அத்தோழியானவள், "இந்த இடத்துக்கு இம்மலைக்குரிய வேடர்கள் வருவர். அவர்கள் மிகவும் கொடியவர்கள். அவர்கள் எதையும் ஆராய்ந்து அறியும் பொறுமை இல்லாதவர். என்னுடன் நீங்கள் பேசுவதைக் காண்பாராயின் எம் உயிரை வருத்துவர். அதனால் இங்கிருந்து செல்லுங்கள்" என்று சொன்னாள்.

"காதணியான தோட்டின் மீது செல்லும் விழியுடைய தோழியே! மயில் போன்ற தலைவியுடன் என்னைக் கூட்டாது போனால், அப்போது அத்தலைவியின் உருவத்தை ஒரு துணியில் எழுதிக் கொண்டு பனைமடலால் செய்த குதிரையில் ஏறி உம் ஊர்த் தெருவில் ஊர்வேன். இது நாளைக்கே நிகழும்!" என்று சொன்னார். ஆதியான எம் இறைவரின் சொல்லைக் கேட்டுப் 'பழி உண்டாகுமே' என்று தோழி அஞ்சிக் "குளிர்ந்த பனைமடலால் ஆன மடல்மா ஏறுதல் உங்கட்கு நீதியாகாது. நீர் இந்தக் குருக்கத்தி மரநிழலில் மறைந்து இருப்பீராக! என் அன்புக்குரிய தலைவியைக் கொணர்ந்து உம்மிடம் ஒப்படைப்பேன்!" என்று கூறி விரைந்து போனாள்.

தோழி தினைப் புனத்தில் விரைந்து சென்று, வள்ளியின் அடிக வணங்கிப், பெருமை பொருந்திய வேற்பிள்ளையான தலைவரின் காதலையும் ஆற்றாமை பொருமை முதலியவற்றையும் எடுத்துச் சொல்லி உள்ளத்தை தேற்றி உடம்படச் செய்தாள். தோழி தினை விளையும் புனத்தைக் கடந்து அளவற்ற மயில்கள் ஆடுகின்ற குளிர்ந்த குருக்கத்திச் சோலையில், இளமையுடைய வள்ளி நாயகியை மெல்ல அழைத்துச் சென்றாள்.

திரண்ட வளையலை அணிந்த தோழி, தன் குறிப்பு மொழிகளால் இவற்றைச் சொல்லி, அகன்று சென்றாள். அங்கு வள்ளிநாயகியார் தனித்து நின்றனர். பெருமை பொருந்திய ஆறுமுகக் கடவுள், பெரிதும் மகிழ்ந்து எதிர்ப்பட்டு முன்போலக் காட்சியளித்தார். மாம்பிஞ்சின் பிளவை ஒத்த இருவிழிகளையுடைய வள்ளிநாயகியார் எம்பெருமானான முருகப்பெருமானின் அடிகளை வணங்கினார். வணங்கவும், அப்பெருமான் வள்ளி நாயகியாரைத் தம் அழகிய கைகளால் எடுத்துத் தழுவி, அவர் பேரின்பம் அடையத் தாம் இன்பமடைந்து, பின் “ஒளிபொருந்திய வளையலை அணிந்தவளே, உன் தந்தையும் மற்றவரும் வந்து உன்னைத் தினைப் புனத்தில் தேடுவர். செந்தினை விளைகின்ற புனத்தைக் காவல் செய்வதற்குப் பசுமையான வளையல் அணிந்த தோழியுடன் செல்வாயாக!” என்று இறைவர் சொல்லி மறைந்தார்.

குறிஞ்சி யாழின் இசைதான் என்று சொல்லுமாறு பேசுகின்ற இனிய சொற்களையுடையவரான வள்ளி நாயகியார், மேற்கூறியவாறு தம்மை வழிபடுகின்ற தோழியுடன், கொய்யும் பருவம் அடைந்த தினைப் புனத்தை அடைந்து தினையைக் காவல் செய்து மனவாட்டம் கொண்டவராய் அங்கு இருந்து வந்தார். வளமையுடைய தினைப் புனத்தில் வள்ளியம்மை பிரிவாற்றாது தளர்ந்திருக்கும் போது, அந்த வள்ளி நாயகியார் காக்கும் இளமையான தினைப் பயிர்கள் கதிர்களை ஈன்று மணி முற்றி விளைந்தன. அதைக் கண்டு வேடுவர் விரைந்து வந்து கூடினர்.

அம்மலையில் வாழ்பவர் யாவரும் வள்ளி நாயகியாரைப் பார்த்து, “தாயே! தினைகள் விளைந்தன. வேங்கை மரங்களும் பூப்பதால் அதைக் கூறின. நீ இதுவரை தினைப் புனத்தைக் காத்து வருந்தினாய். இனி உன் இல்லத்துக்குச் செல்வாயாக!” என்று உரைத்தனர். வேடர்கள் மேற்கண்டவாறு கூறியவை செவியில் நுழைந்த அப்போதே, மாற்றாரால் எறியப்படும் வேல்

உண்டாக்கிய புண்ணில் தீ நுழைந்தது போல கலங்கும் மனத்தை உடையவராய், அவ்விடத்தை விட்டு நீங்கி, நல்ல தோழியும் தாமுமாய் தம் சிறிய இல்லத்துக்குச் செல்லலானார்.

நாகணவாய்ப் பறவையின் மொழி போன்ற சொல்லையுடைய வள்ளிநாயகியார் சிற்றூரைப் போயடைந்து, நம்பி அரசனின் இல்லமான குடிலுள் புகுந்து, கொள்கைவேறாகி, மரப்பாவை, ஒள்ளிய கழற்காய் என்றஇவை கொண்டு ஆடும் ஆட்டங்களை ஆடாதவராய் முன்னர்ப் பேசுவது போல மங்கையர் எவரோடும் பேசாதவராய் தனித்து இருந்தார்.

அப்போது, (வள்ளியம்மையாரை வளர்த்த) செவிலித்தாயும் நற்றாயும் மகளை உற்றுப் பார்த்து "உனக்கு மேனியானது வேறுபட்டுள்ளது! அதற்குக் காரணமான குற்றம் வந்த வகையாது?" என்று வன் சொற்களை மிகுதியாகச் சொல்லி, சினம் கொண்டு, அவரை வெளியே விடாது வீட்டினுள் இருத்தி வைத்தனர். ஒரு செயலுமின்றித் தீட்டிய ஓவியத்தைப் போன்ற தன்மை கொண்ட வள்ளிநாயகியார் வேலை ஏந்திய முருகப்பெருமானைக் கூடிப் பிரிந்தமையால், உடல் மெலிந்து உள்ளம் வெதும்பி உயிரை இழந்தவரைப் போல் பரவசமாய் அங்குச் சோர்ந்து வீழ, வேட்டுவ மகளிர் அவரை எடுத்துத் தழுவித் துன்பம் அடைந்து சிந்திப்பாரானார்.

அழகுடைய திருமேனியானது துவளும் தன்மையையும், முன்கை வளையல்கள் கழலும் தன்மையையும் கூர்மையைக் கொண்ட கண்கள் நீர் துளிர்க்கும் தன்மையையும், குணங்கள் மாறுபட்ட தன்மையையும், உடலில் பசலை பரவும் தன்மையையும் உற்றுப் பார்த்து, "நம் மகளை மலைச்சாரலில் உள்ள பேய் தீண்டியது போலும்!" என்று, சூரனுக்குப் பகைவனான முருகப்பெருமான் தீண்டியதை அறியாத வேடுவர் உரைத்தனர்.

தந்தையான நம்பியரசனும், வேடர்களும், உறவினரும், மற்றவரும் நெருங்கிக் கூடி, வள்ளிநாயகியாரின் தன்மையைப் பார்த்து, உள்ளத்தில் தளர்ச்சி அடைந்து, பழைய முறைப்படி, முதியவளான தேவராட்டியுடன் தேவராளனான வெறியாட்டயர்வானை அழைத்து கொடிய வன்மை படைத்த வேற்படையையுடைய முருகப்பெருமானுக்கு வெறியாட்டு விழாவைச் செய்தனர்.

வெறியாடலைச் செய்யும் சமயத்தில் அந்நிலத் தெய்வமும், குலத் தெய்வமுமான முருகப்பெருமான், வெறியாடுபவன் மீது ஆவேசித்து,

"தனியாக இருந்த தினைப்புனத்தில் இம்மங்கையை யாம் தீண்டினோம். இவளது வேறுபாடு வேறு ஒரு காரணத்தால் உண்டாவதன்று. எம் உள்ளம் மகிழும் சிறப்பைச் செய்தால் இந்தக் குறை நீங்கும்!" என்று குறிப்புப் பொருள் தோன்றக் கூறினார். நீண்ட வேலினையுடைய முருகன் குறிப்பால் கூறிய சொற்கள் காதுகளின் மூலத்தில் குற்றம் இல்லாமல் விழுந்த அளவில், வள்ளியம்மையார் அவகம் நீங்கப் பெற்று எழும் முறையால் எழுந்திருக்க, அதைக் கண்ட செவிலித்தாய் அப்போதே, "முருகப்பெருமானைத் துதித்துச் சிறப்பான பூசையைச் செய்வோம்" என்று உறுதி கொண்டு வணங்கினாள்.

இவ்வாறாக வள்ளியம்மையார் இல்லத்தில் இருக்க, வேடர்கள் முற்றிய பருவத்தையுடைய தினைக்கதிர்களைக் கொய்து கொண்டு தம் சிறிய ஊரை அடைந்தனர். முருகப்பெருமான் இதைப்பார்த்து தாம் ஆட்கொண்டருளும் செயலை மேலும் தொடர்ந்து செய்பவராய், தினைத் தாளையுடைய தினைப் புனத்தில் போய், வள்ளியம்மையாரை அங்குக் காணாமல் வருந்தலானார். வள்ளியம்மையாரைத் தேடுபவரைப் போல், முருகன் அழகான தினைக் கொல்லை எங்கும் திரிந்து வாட்டம் அடைந்து, இப்படிப்பகற்பொழுது முழுவதையும் கழித்து, நள்ளிரவு நிகழும்போது, வேடர் வாழும் சிறிய ஊர்க்குச் சென்று, குறவர்களுடன் கூடிய நம்பியரசனின் குடிலுக்குப் பக்கத்தில் போய் நின்றார்.

வள்ளி நாயகியாரின் தோழியானவள், முருகப்பெருமானைக் கண்டு, வணங்கி "நீங்கள் இரவுக் காலத்தில் இங்கு வருதல் பலவகையாலும் தகுதியுடையதாகாது. எம் தலைவியான அவளும் தங்களைப் பிரியின் உயிர் வாழமாட்டாள். நீங்கள் இருவரும் இங்குக் கூடுவதற்கு ஏற்றதான இடமும் இல்லை. ஆகவே, ஐயனே, அவளை உடன் அழைத்துக் கொண்டு செல்வீராக!" என்று வேண்டினாள். என்று இவற்றைத் தோழி கூறி, முருகப் பெருமானை அங்கே நிற்குமாறு செய்து விட்டுத் தான் மட்டும் சென்று, தனக்குத் தனித்துணையாக இருக்கும் வள்ளியினைக் கண்டு, "நம் தலைவர் உன்னைக் கவர்ந்து கொண்டு செல்லும் பொருட்டு மனத்தில் துணிவு கொண்டு வந்துள்ளார். (காலம் தாழ்த்தாது வருவாயாக! என்று சொன்னாள்.) நாயகியார் "இது நல்லது!" என்று உடன் போக்குக்கு உடன்பட்டார்.

அத்தோழியானவள், நற்றாய் செவிலித்தாய் ஆகியவரின் உறக்கத்தை அறிந்து, தம் உறவினரின் உறக்கத்தையும் அறிந்து, பெரிதும் துயிலாத நாய்

உறக்கத்தையும் அறிந்து, அந்த ஊரில் உள்ளவர் உறக்கத்தையும் அறிந்து, கொடிய பேய்களும் உறங்கும் நடுயாமம் ஆனபோது, அவ்வீட்டின் வாயிற்கதவை மெல்லத் திறந்து, வளளி நாயகியை அழைத்துக் கொண்டு போய்த் தலைவரிடம் சேர்ப்பித்தாள்.

தோழி, முத்துப் போன்ற பற்களையுடைய வள்ளி நாயகியாரை, ஆறு முகங்களையுடைய முருகப்பெருமானின் திருக்கைகளில் ஒப்படைத்துக் கைகூப்பி வணங்கி நின்றாள். நிற்க, அப்பெருமான் மெய்ம்மை விளங்கும் அருளை அத்தோழிக்குச் செய்து, "விளங்கு அணிகளை அணிந்தவளே, நீ எம்மிடம் வைத்த அன்பை ஒரு போதும் மறக்க மாட்டோம்!" என்று உரைத்தார்.

தோழியானவள் விடைபெற்றுத் திரும்பிய பின்பு, வேலையுடைய முருகப் பெருமான், அன்னம் போன்ற நடையையுடைய வள்ளி நாயகியாருடன், நடுயாமமான இரவில் போய், சிற்றூரில் அமைந்த தலைவாயிலையும் நீங்கி, அப்பால் உள்ள ஓரிடத்தில், மன்மதனின் படைகள் அனைத்தையும் தன்னிடத்தே கொண்டு விளங்கும் ஒரு பசுமரச் சோலைக்கள் புகுநதார். நல்ல ஒளிக் கதிரையுடைய வேலையுடைய முருகப்பெருமான் வஞ்சிக் கொடி போன்ற வள்ளி நாயகியாருடன் செழுமையான மலர்களை யுடையசோலையுள் புகந்தபோது, வைகரையான விடியற்காலம்வர, குறைவில்லாத அந்தச் சிற்றூரில், நம்பியரசனின் மனைவி கொடிச்சி என்பவள், உறக்கம் நீங்கி, நடுக்கம் அடைந்து, விரைவாக எழுந்தாள்.

தாயான அவள், சங்கு வளையல்கள் பொருந்திய செம்மையான கைகளையுடைய நிகரில்லாத தன் மகளைக் காணாதவளாய் எங்கும் தேடி பின் வள்ளிநாயகியின் தோழியிடம் வந்து கேட்ப, "தாயே! நேற்று இரவில் நானும் அவளும் ஒன்றாகக் கண்மூடி உறங்கியதுண்டு. உறங்கியயின், அவள் செய்த செயலை நான் அறியேன்!" என்று அத்தோழி உரைத்தாள். தன் மகளைக் காணாத வகையினை நற்றாய் வந்து தன்னிடம் சொல்ல, பகை முனைக்கு ஒருவனான நம்பி கேட்டு, புத்தி சுழன்று, சினந்து கிளர்ந்து, ''நம் மனையில் உள்ள காவலைக் கடந்து நல்ல நெறியையுடைய என் மகளை எவனோ ஒருவன் களவில் கொண்டு போனான்'' என்றுசினந்தான்.

வேடர் பலரும் ஒன்றாகத் திரண்டு அம்பும் வில்லும் வாளும் கைவேலும் மழுவும் எறியும் ஈட்டியும் என்ற இவற்றை எடுத்துக் கொண்டு அவர்கள் இருந்த சோலைக்கு அருகில் வந்து விட்டதை உணர்ந்த வள்ளிநாயகி, "என் உள்ளம் நடுக்கம் கொண்டுள்ளது. இனி என் செயல் ஏதுமில்லை. வேண்டியதைத் தாங்களே அறிவீர். நான் அறியேன். சொல்லக் கூடியது இருந்தால் சொல்லியருளுக!" என்று உரைத்தார். உடனே எம்பெருமானான முருகப்பெருமான், "மங்கையே, வருந்தாதே! முன்பு பெரிய கிரவுஞ்ச மலையுடன் சூரபன்மன் மார்பைப் பிளந்த வடிவேல் இருக்கின்றது. உம்முடையவர் விரைந்து போர் செய்ய வருவாரானால் அவரை அழிப்போம். அதைப் பார்த்துக் கொண்டு எம் பின்பக்கத்திலே இருப்பாயாக!" என்று வள்ளியம்மைக்கு உரைத்தார்.

வேடரின் மன்னனான நம்பியும் கொடுந்தொழிலையுடைய வேடரும், அலை மடிந்து விழும் கடலைப் போல ஆரவாரம் செய்து, நீண்ட வில்லை முழுவதும் வளைத்து, ஒளிக்கதிர் வீசும் கதிரவனை மேகங்கள் மழைபெய்து மறைத்தது போல, ஒவ்வொருவரும் ஒருவர் பின் ஒருவாக அம்பு மழையைப் பொழிந்து முருகனை வளைத்துக் கொண்டனர். முருகப்பெருமானின் செயலில் விருப்பம் வைப்பதற்குரிய வேடர்கள், அறியாமையால் பகைவராய், அந்தச் சோலையைச் சூழ்ந்து போரிட்டுச் செலுத்திய அம்புகள் எல்லாம் மிக்க அழகுடைய செம்மையான வேலையுடைய கருணைக் கடலான முருகப்பெருமான் மீது, மென்மையான மலரின் தன்மையை அடைந்து மெல்லெனப்பட்டன. அவ்வாறு படலால், அதற்கும் பசிய வளையல் அணிந்த கையையுடைய வள்ளி நாயகியார் துடித்துச் சொல்லலானார்.

"சிங்கமானது கொலைத் தொழிலை எண்ணாது சாதுத் தன்மையை மேற்கொள்ளுமானால், மரையும் மானும் பன்றியும் யானையும் ஆகியவை நெருங்கி உறவு கொண்டாடும் அன்றோ? ஆதலால் நீண்ட இலைவடிவமான அம்பைத் தங்கள் மீது பாயுமாறு செலுத்தும் கீழான வேடர்கள்மீது ஒளியுடைய நீண்ட வேலைச் செலுத்திட வேண்டும். என்று வள்ளி நாயகியார் சொல்ல, எம் இறைவன் முருகன் அருளால், அயலில் கொடியாக அமைந்துள்ள ஒப்பற்ற பெருமையுடைய சேவலானது, எழுந்து நிமிர்ந்து ஆரவாரம் செய்தது; அவ்வளவில் வேடரின் மன்னனான நம்பியும் அவனுடைய மைந்தரும் உறவினரும் யாரும் நிலையழிந்து இறந்து விரைவாகப் பூமியில் விழுந்தனர்.

## 6. ப்ரம்மசாரி சுப்ரமணியர்

த்விநேத்ரம் த்வி புஜம் சைவ பாலஸுர்யதாம் ப்ரபும்

தக்ஷபாகே தண்ட ஹஸ்தம் வஜ் ரவாமோருஹஸ்தகம்

சவ்ய அபசவ்ய பாதம் துஸ் தீதம் வா குஞ்சிதம் து வா

சிகா யஞ்ஞோபவீ தாட்யம் மௌஞ்சி கௌபீன சம்யு தம்

மேகலோபரி வட்யாணம் ரக்தபத்மோபரி ஸ் தீதம்

திவ்யரூபதரம் தேவம் ப்ரம்மசாரிணம் ஆச்ரயே

ரக்தவர்ண:

உதய ரவியின் ஒளியுள்ள ப்ரபு, இரு கண்கள், இரு கரங்கள், வலக்கையில் தண்டம், இடது கையில் வஜ்ரம், வலது பாதம் ஊன்றியும், இடது பாதம் சற்று வளைந்தும், குடுமி, பூணூல், மான்தோல், கோவணம், இடுப்பில் ஒட்டியாணம், சிவந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மசாரி.

தன்னுடைய தந்தை, தம்பியும் குலமுதல்வரான மற்றவரும், இறந்து பூமியில் விழுந்த தன்மையை, பசிய வளையலை அணிந்த வள்ளி நாயகியார் பார்த்துப் பழைய தொடர்பால் பதை பதைத்துத் தளர்ந்தார்; அப்போது, முருகப்பெருமான் தன்தந்தை முதலான வேடரைக் கொல்ல வேண்டும் என்று வற்புறுத்திய அத்துணைவியான வள்ளி நாயகியின் தலையாய அன்பை உலகத்தவர்க்குக் காட்டும் பொருட்டுத் தாம் அவரைச் சோதனை செய்பவராய், அந்த மணம் கமழும் சோலையை நீங்கி, (உள்ளத்தில் இறந்தவரிடமும் அருள் கொண்டவராய்ச்) செல்ல, அந்த வள்ளிநாயகியாரும் தொடர்ந்து அவர் பின் சென்றார்.

அங்ஙனம் வள்ளி நாயகியார் பின்னால் தொடர்ந்து வர முருகப் பெருமான் முன்னால் செல்ல, நாரதர் என்ற பெயர் கொண்ட சிறப்புடைய முனிவர் எதிரே வந்து, வள்ளிநாயகியையும் முருகப்பெருமானையும் வணங்கி, "உம் அருட்செய்கைகளை யெல்லாம் சொல்வீராக!" என்று வேண்டிக் கொண்டார். அப்போது முருகப்பெருமான், வள்ளிநாயகியைத் தினைப் புனப் பரண் மீது கண்டது தொடங்கி, இடையில் எண்ணால் மிக்க வேட்டுவரை அழித்து வள்ளிநாயகியார் உடன் வந்தவரை, அனைத்தையும் கூறினார். "வள்ளியைத் தவத்தால் பெற்று வளர்த்த தந்தையையும் மற்ற உறவினரையும் சினத்துடன் அழித்து அவர்களிடமிருந்து அவ்வள்ளி நாயகியாரைப் பிரித்து அவர்களுக்குச் சிறந்த நல்ல அருள் செய்யாது, உடன் அழைத்துக் கொண்டு போவது, அருட்கடலான தங்கட்குத்தகுதியோ?" என்று நாரத முனிவர் கூற, அருள் வள்ளலான முருகனும், "நாரத நீ கூறியது முறையே யாகும்!" என்று அவர் கருத்துக்கு உடன்பட்டார்.

சிறந்த அந்தச் சோலையில் விசாகரான முருகப்பெருமான் திரும்பி வந்து, தம்மிடம் முழு அன்பையுடைய வள்ளி நாயகியைப் பார்த்து "நம் மீது பழியை உண்டாக்கும் கொடிய போரைத் தொடுத்து, இறந்துவிட்ட உம் சுற்றத்தாரையெல்லாம் எழுப்புவாயாக!" என்று வேண்டவும் "தங்களது அருள் இனிது" என்று கூறிவணங்கி "எழுவீராக!" என்றார். "சிறந்த உயிர்களை இழந்து இறந்து விழுந்த நம்மவர்களே! நீவீர் எல்லாரும் எழுவீராக!" என்று வள்ளிநாயகியார் உரைக்கவும், பெரிய நிலத்தில் உறங்குபவர்கள், உறங்குவதற்கு முன்னம் இருந்த பழைய நல்ல உணர்ச்சி உண்டாகத் துடித்து எழுவதைப் போல, வேட்டுவ மன்னனான நம்பி கூட்டமான தம் சுற்றத்துடன் எழுந்தான்.

அவர்கள் உயிர் பெற்று எழுகின்றபோது, எம்பிரானான முருகனின் அருள் வெள்ளத்தைப் பொழிகின்ற ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு கைகளும், வேலும், மற்ற வேடர்க்குக் காட்ட அவர்கள் அனைவரும் அடியற்ற மரம் போல நிலத்தில் விழுந்து வணங்கித் துதித்து "எம்குல தெய்வத்தின் செயல் இதுவோ?" என்று வியந்தவராய், "வெல்கின்ற வன்மை படைத்த வேடர்களின் சிற்றூரைப் பாதுகாத்த தாங்களே எம் கண்மணியான மகளை, களவில் கவர்ந்து, தொன்று தொட்டுவரும் இக்குலமரபின் வரம்பை அழித்து என்றும் தீராத பெரும் பழிஒன்றை நிலை நிறுத்தினீர்! மைந்தர் உட்கொள்ளும்படி நஞ்சைத் தாயானவள் ஊட்டினால், அதை விலக்குபவர் யார்? எம்பெருமானே! எங்கள் மகளைக் காதல் மிகுதியால் கவர்ந்து களவியலைக் காணவல்ல நாங்களும் அறியாத வண்ணம், எம் பெரிய காவலைக்கடந்து இந்த இடத்துக்கு இந்த வள்ளி நாயகியாரைக் கொண்டு வந்தீர்! நிகழ்ந்தது போக இனி எம் சிற்றூருக்கு மீண்டு வந்து, நல்ல அக்கினி சான்றாகத் திருமணம் செய்து உம் ஊருக்குச் செல்லும்!" என்று வேண்டினர்.

முருகப்பெருமான் மாமனான நம்பி முதலியவர் வேண்டிக் கேட்டுக் கொண்டதற்கு இசைந்து, அவர்க்கு மேன்மையான அருளைச் செய்து, மென்மையான இயல்புடைய வள்ளிநாயகியாரையும் சம்மதிக்கச் செய்து, குற்றம் சிறிதும் இல்லாத நாரத முனிவரோடும் குளிர்ந்த மலர்ச்சோலையை விட்டு நீங்கிப் 'பாதத் தாமரைகள் வருந்துமே' என்று அன்பர் வருந்த வள்ளிமலையில் உள்ள சிற்றூர்க்குச் சென்றருளினார். தந்தையான நம்பியும் மற்றச் சுற்றத்தவரும் சண்முகப் பெருமானுக்குப் பக்கத்தில் போய் மன மகிழ்ச்சியுடன், துன்பம் அடைந்திருந்த் சிற்றூரில் உள்ளவரைப் பார்த்து, "எம் குல தெய்வமான முருகனே நம் மகளைக்களவால் கவர்ந்து ஆண்டருள் செய்தார்; அவ்வாறு ஆட்கொண்டருளி, நம் வேண்டுதலால் திருமணச் சடங்கு நிகழ்த்தவும் சம்மதித்து இங்கு வந்துள்ளார்'' என்று கூறினர்.

சிவபெருமானின் மகனே வள்ளிநாயகியைக் களவால் கவர்ந்தருளினார் என்றும், மங்கலமான திருமணம் செய்ய ஈண்டு எழுந்தருளினார என்றும், தங்கள் சுற்றத்தவர் நிகழ்ந்த நிகழ்ச்சியை எடுத்துச் சொல்ல, அந்தச் சிற்றூரில் வாழும் வேடர்கள் கிளர்ச்சி பெற்று எழும் சினமும் அதை அடக்குகின்ற நாணமும் திருமண மகிழ்ச்சியும் முறையே ஒன்றை ஒன்று மிஞ்ச பெருமிதம் உடையவராய் வரவேற்று நின்றனர்.

வேடரின் மன்னனான நம்பி, அந்த சிற்றூரில் சிறந்த தன் திருமனையில் சரவணபவனான முருகப்பெருமானை இயற்கை மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய வள்ளி நாயகியுடன் தம் குல மரபின்படி எழுந்தருளச் செய்து, அழகு விளங்கும் புலித்தோல் ஆசனத்தின் மீது, அந்த ஆசனமும் அங்கே உள்ளவரின் அகமும்புறமும் பொலிவுண்டாக வீற்றிருக்குமாறு செய்தான். அச்சமயத்தில் அறுமுகக் கடவுளான முருகன் தன் பக்கத்தில் இருந்த வள்ளிநாயகியைப் பார்க்க, அப்பெருமாட்டிக்குக் குறவர் மகளிர் செய்த மணக்கோலம் மறைய முன்னமே உள்ள கடவுள் கோலம் முழுதும் ஒருங்கு வெளிப்பட்டது.

அப்போது அன்புடைய வேட்டுவ மன்னனான நம்பி என்பவன், முருகப் பெருமானின் திருக் கையில் கன்னியான வள்ளி நாயகியாரின் கையை வைத்து, "எம்தவத்தால் எம்மிடம் வளர்ந்த எம் மகளை விருப்புடன் இப்போது தங்கட்குத் தந்தேன். ஏற்றுக்கொள்க" என்று வேண்டி நீர் கொண்டு தாரை வார்த்தலான கன்னிகா தானத்தைச் செய்தான்.

கன்னிகா தானம் செய்து தந்த அப்போது, நல்ல தவத்தைச் செய்பவரான பழஞ்சிறப்புடைய நாரதமுனிவர், வெற்றியுடைய வேலை எந்திய முருகப்பெருமானின் திருக்குறிப்பால், ஓமாக்கினியோடு, அக்கினிச் செயலுக்கு வேண்டுவனவான பொருள்களைக் கொணர்ந்து, திருமணச் சடங்கைச் சிந்தித்துப் பிழை வாராதபடி அரிய மறை விதியின்படி செய்தார். அவ்வாறு திருமணம் நிகழ்ந்த போது திருமாலும், நான்முகனும், இந்திரனுடன் தேவர் முதலான மற்றவரும் வணங்க, மாதேவரான சிவபெருமான் இமவானின் மகளான உமையுடன் வந்து, வானில் இருந்து, செவ்வேளான முருகன் குறவர் பெண்ணான வள்ளிநாயகியாரைத் திருமணம் செய்யும் திருமண நிகழ்ச்சி முழுவதையும் கண்டருள் செய்தார்.

நெற்றிக் கண்ணையுடைய ஒப்பற்றவனான சிவபெருமானும் உமையம்மையாரும் திருமணத்தைக் கண்ணால் பார்த்துக் கருணையைச் செய்தருள, அதனைக் கண்ட துளசி முடியையுடைய திருமால் முதலான தேவர்கள் மகிழ்ச்சி மிக குளிர்ந்த பூமழையைப் பொழிந்து, திருமுருகப் பெருமானை வணங்கித் துதித்துக் கை குவித்துக் கும்பிட்டு ஆனந்த மிகுதியால் ஆரவாரம் செய்தனர்.

ஆறு முகங்களையுடைய முருகப்பெருமான் தந்தை தாய் வானில் எழுந்தருளியதையும் மற்றவர் மலர் மழை பெய்ததையும் ஆகிய நிகழ்ச்சியைப் பார்த்து, அந்த வூரில் உள்ளவர் அந்த நிகழ்ச்சியையும் தம் செயலையும் சிறிதும் அறியாதபடி, இமய மலையில் அவதரித்த உமையம்மையாரையும் கை கூப்பி வணங்கி, தம்மை வழிபட்ட மற்றவர்க்கு, மகிழ்வுடன் முழுக்கருணை செய்தார்.

குறவர் பெண்ணான வள்ளி நாயகியும் மேலான பரம் பொருளான முருகப்பெருமானும் ஒருமை அடைந்து வேடர்கள் அளித்த உணவு வகைகளை உண்டருளினர். அவ்வாறு உண்டதால் உண்டாகும் பயன் திருமால் முதலிய தேவர்களிலும் முனிவர்களிலும் மற்றச் சராசரங்களிலும் எல்லா இடங்களிலும் பொருந்தியது. அத்தகைய சமயத்தில் அந்தத் திருமண மண்டபத்தில் முருகப்பெருமான் எழுந்து நின்று வளைந்த வில்லையுடைய குறவர் மன்னனான நம்பியைப் பார்த்து, "யாம் மணமகளான வள்ளியுடன் இவ்விடம் விட்டு நீங்கிப் போர்த்தணிகையான திருத்தணிகை மலையில் இனிதே வீற்றிருப்போம்!" என்று கூறியருளினார். நம்பியரசன் 'நன்று' என்று தன் உடன்பாட்டைத் தெரிவித்தான்.

வள்ளியை ஆட்கொண்டதன் சின்னமாக வெட்சி மாலையை அணிந்த சடையுடைய முருகப்பெருமான் திருத்தணிகை மலையிலே, தெய்வத் தச்சனான விசுவகன்மன் முன்னரே இயற்றி வைத்த ஒப்பற்ற திருக்கோயிலுக்குள் எழுந்தருளி இந்த வுலகத்தில் உள்ள உயிர்கள் யாவும் உய்யப்போக மூர்த்தியாய் வீற்றிருந்தார்.

அப்போது வள்ளி நாயகியார், கூர்மையான வேலையுடைய முருகப்பெருமானின் பாதங்களை வணங்கிக் கைகூப்பி, "ஐயா! இந்தப் பெருமையுடைய மலையின் இயல்புகளைத் தெரிவிப்பீராக!" என வேண்டினாள். உள்ளத்தில் உயிர்கள் உய்ய வேண்டும் என்ற பேரருள் உடைமையால் ஆறுமுகக் கடவுள் பின் வருவனவற்றைச் சொல்லத் தொடங்கினார். "சிவந்த கண்ணையுடைய கொடிய சூரபன்மனுடன் செய்த போர்த்தொழிலிலும், வில்லையுடைய வேடர் செய்த போர்த் தொழிலிலும், அவர்களுக்கு உண்டான ஆத்ம வேகத்தைத் தணியும்படி தணித்து, இங்கு வந்து யாம் சாந்த மூர்த்தியாய் இருத்தலால், போர்த்தணிமலை (செருத்தணி வரை) என்று ஒரு மங்கலமான சிறப்புப் பெயரை இந்தத் தணிகை மலை பெற்றுள்ளது''.

"நீலகண்டரான சிவபெருமான், மந்தாரமலையைக்காட்டிலும், மேருவான பெரிய மலையைக் காட்டிலும் கயிலாய மலையையே பெரிதும் விரும்புவது போலப் பழைமையான இந்தப் பூமியில், அழகான மலைகள் பல உள்ளவாயினும் இந்தத் தணிகையான மலையிலேதான் எனக்கு மிகவும் விருப்பம். வானத்தை அளாவி விளங்குகின்றமலைகள் பலவற்றுள் மிக்க விருப்பத்துடன் இந்த மலையில் என்றும் யாம் இருப்போம். அவ்வாறு ஆவதற்குச் சான்று, இந்திரன் நாள்தோறம் மூன்று பொழுதும் எமக்குச் சாந்தி வழிபடுவதற்காக, மூன்று நீலோற்பலக் கொடிகளை, இம்மலையில் உள்ள நீர்ச்சுனையில் முன்பே வைத்துள்ளான். கதிரவன் உதய காலத்தில் ஒரு மலரும் அக்கதிரவன் ஒளி முதிரும் உச்சிக்காலத்தில் ஒரு மலரும், மாலைக்காலத்தில் ஒரு மலரும், என்று இப்படி இத்தணிகைமலைமீது மூன்று போதும் மலரும்''.

"இந்தத் திருத்தணிகை மலையைத் தொழுதவர் பாவங்கள் யாவும் நீங்கும். உள்ளத்தில் அன்புடன் இந்த மலையில் வந்து, முறபட இருந்த இந்த நீர்ச்சுனையில் விதித்த முறையால் முழுகி, நம் சந்நிதிக்கு வந்து நம்மை வணங்கியவர் நம் கந்த பதவியை அடைவர். இந்தத் திருத்தணிகை மலையில் ஐந்து நாட்கள் வாழ்ந்து, 'எம் அடிகளையே அடைக்கலம்' என்று உள்ளத்தில் எண்ணி, வழிபடும் தவத்தவர், தம் உள்ளத்தில் எண்ணிய இன்பங்களை அனுபவித்து முடித்துக் குறைவில்லாத வீடு பேற்றையும் அடைந்து இனிது வாழ்வர்" என்று முருகப்பெருமான் சொல்லியருள, குறமகளான வள்ளி நாயகியார் கேட்டு, உயிர்களுக்கு நன்மை பயப்பது என்று மகிழ்ந்து, 'இப்பூமியில் உள்ள மலைகளக்குள்ளே சிறநத பெருமை பொருந்திய இந்த மலையினது இயல்பைத் தங்கள் திருவருளினால் அறிந்து, தங்களையே யல்லாது ஆதரவற்ற தமியேன் உய்ந்தேன்' என்று உரைத்தார்.

இத்தணிகை மலையின் ஒரு பக்கத்தில் பன்னிரு தோள்களையுடைய முருகப்பெருமான், மை பூசிய விழியையுடைய வள்ளி நாயகியாருடன் நான்முகனும் திருமாலும் ஆகியவரால் அறியப்படாத ஐவகை உருவங்களுள் ஒன்றை (பீடமும் இலிங்கமுமான கன்மசாதாக்கிய வடிவத்தை) ஆகம விதிப்படி மெய் வழிபாடான பூசையைச் செய்து, வேண்டியவாறு நிறைந்த அருளையும் பெற்றார்.

***

# சிவனின் ஐவகை உ

(1) சிவ சாதாக்கியம் (2) அமூர்த்தி சாதாக்கியம், (3) மூர்த்தி சாதாக்கியம், (4) சர்த்திருசாதாக்கியம், (5) கன்ம சாதாக்கியம். நிகர் இல்லாத நீண்டவேலையுடைய முருகப்பெருமான் மணம் பொருந்திய மாலைகள் பொருந்திய கூந்தலையுடைய வள்ளி நாயகியும், தாமும், உள்ளத்தில் சிவ பூசையால் உண்டான மகிழ்ச்சியும், அன்பும், விருப்புமதம்மை மேலும் தூண்ட, மூன்று கண்களையுடைய சிவபெருமானை வணங்கித் துதித்துச் செருத்தணிவாகிய திருத்தணிகை மலையில் சில நாட்கள் வீற்றிருந்தார்.

ஒருநாள் ஒளியுடைய கொத்தான கடப்பமலர் மாலையை அணிந்தமுருகப்பெருமான், வள்ளிநாயகியும் தாமுமாகத்தள்ளுதற்கரிய விருப்பத்தைப் பெருக்கும் தணிகைமலையினின்றும் நீங்கி, விமானம் ஒன்றில் ஏறி, அழகிய கயிலாய மலையின் பக்கத்தில் பொருந்திய கந்த மலையில் உலகம் எல்லாம் வணங்கச் சென்றார். வள்ளல் முருகப்பெருமான் வள்ளி நாயகியும் தாமும், கந்த மலையில் போய் விரைவாகச் செல்லும் விமானத்தினின்று இழிந்து, அளவற்ற பூத கணங்கள் காக்கின்ற அழகிய பொன்னால் ஆன ஆலயத்துக்குள் சென்று, இந்திரனின் மகளான தெய்வயானை அம்மையார் இனிதாய் வாழ்ந்து வரும் கோயிலுள் புகுந்தார்.

அப்போது அங்கு வள்ளி நாயகியார், தேவர்க்கு அரசனான இந்திரனின் மகளான தெய்வநாயகியின் மலரடிகளை வணக்கம் செய்தார். உடனே ஒருகணமும் தாமதிக்காமல், விரைந்து எடுத்து வள்ளி நாயகியாரைத் தழுவிக் கொண்டு, "இன்பக் கடலான இங்குத் தனியாய் இருந்த எனக்கு இன்று என்னைப் போல் முருக இன்பக்கடலில் இன்புறுத்தற்கு உரிய ஒருத்தி வந்திருப்பது நன்று!" என்று அன்பு மிகக் கொண்டு ஆனந்தம் அடைந்தார்.

கரிய கடலில் தோன்றும் பவளம் போன்ற சிவந்த வண்ணத்தையுடைய திருமால், பாற்கடலில் பொருந்திய பாம்பணையின் மீது, சீதேவி, 'பூதேவி' என்ற இருவரும் பக்கத்தில் இருந்து அருளுடன் அமருமாறுபோல், அச்சம் தரும் கடல் வற்ற அதன் நீரைப் பருகிய வேலையுடைய முருகப்பெருமான், போர் செய்வதில் வன்மையுடைய சிங்கங்கள் தாங்கும் பொன்மணி ஆசனத்தின் மீது தெய்வயானை, வள்ளிநாயகி என்ற இருதேவியரோடும் ஆன்மாக்கள் மேல் கொண்ட அருளோடு வீற்றிருந்தார்.

வடவைத் தீப்போல, அலைகடலை வற்றச் செய்யும் வேலையுடைய முருகப்பெருமான், அந்தக் கந்தமலையில் உள்ள கோயிலில் அழகிய அரியணை மீது, தம் இரு தேவியரோடும் வீற்றிருக்கும்போது, தெய்வயானை அம்மையார், அப்பெருமானை நோக்கி, "ஐயா! இங்கு இந்த வள்ளிநாயகி வந்த வரலாற்றைச் சொல்லியருள வேண்டும்" என்று வேண்டினார். "இங்கு என்னிடம் ஒன்றுபட்டிருக்கும் நீங்கள் இருவரும் நீண்ட வடிவத்தையுடைய அழகிய சக்கரத்தைக் கொண்ட செல்வரான திருமாலிடத்து முன் தோன்றினீர்; அங்ஙனம் தோன்றிய நீவிர், வயது பன்னிரண்டு வரையும் எம்மைச் சேர விரும்பி, இளமை தொட்டுத் தவம் செய்தீர். தவம் செய்து கொண்டிருந்து உங்களை நாம் அடைந்து, 'உங்கள் தவத்துக்குப் பெரிதும் மகிழ்ந்து உங்களை அன்புடன் சேர்வோம். விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் தனித்தனிப் போய்த் தோன்றுங்கள்' என்று முன்பு உங்களுக்குச் சொன்னோம்''.

"இருவருள் முதலில் தோன்றியவளான நீ யாம் உரைத்த முறைப்படி மேக வாகனத்தையுடைய இந்திரனுக்குப் பெருமை பொருந்திய மகளாய்த் தோன்றி வளர்ந்தனை! அங்ஙனம் வளரும்போது யாம் அன்புடன் உன்னை மணம் செய்து கொண்டோம். பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய தெய்வ நாயகியே, உன் தங்கையாகத் தோன்றிய இவள், நாம் உரைத்தலால் உண்டாகும் பயனை எண்ணிப் பெருமையுடைய தீயில் மூழ்கித் தெய்வ வளம் படைத்த பண்டைய வடிவத்தை நீக்கினாள். இவள் தூலவுடல் விரைவாக அழிய, அதன் உள்ளே இருந்த சூக்குமஉடம்புடனே எழுந்து, வள்ளி மலையில் மரங்கள் அடர்ந்த ஒரு சோலையில் போய்த் தெளிந்த நிலையில் தவம் செய்து வேடர் குலத்தலைவன் நம்பிராசன் மகளாகப் பிறந்து நம் அன்புக் குரியவளானாள். நாமும் முன்பு அருளியபடி அவளை ஏற்றோம் என்றார்.

"முன்காலத்தில் திருமாலிடத்தில் தோன்றிய இவளும், நானும் அளவற்ற காலம் பிரிந்திருந்தோம். அவ்வாறு, இருந்த எம்மை, விரைவில் இங்குக் கூட்டித்தங்களுடன் ஒன்றாக இருக்கச் செய்த தங்கள் வல்லமைக்குயானும் இவளும் செய்யத்தக்க பிரதி உபகாரம் யாதும் இல்லை"! என்று சொன்னார். மேன்மையுடைய குறவர் மகளான வள்ளிநாயகியார் தேவலோகத்தையுடைய தெய்வ நாயகியார் உரைத்ததைக் கேட்டு, முன்பிறவியில் நான் உனக்கு உடன் பிறந்த தங்கையாகும். இந்த ஒரு

காரணத்தாலே அன்றி, இப்பிறப்பிலும் வேறொரு முறையால் தங்கையாய் ஆனேன். ஆதலால் உம்மைச் சரண் அடைந்து உய்ந்தேன், தங்கையான என்னைக் காத்தருளுக" என்று வேண்டினார்.

## 1. ஆறு திருமுகங்கள்

ஆதி சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி, பரா சக்தி, ஞான சக்தி, குடிலா சக்தி என்றும்; அ,உ,ம், நாதம், விந்து, சக்தி என்றும்; சிவபிரானுடைய ஆறு திருமுகங்களாம் என்றும்; ஈசன் திருமுகங்கள் ஐந்துடன் தேவி திருமுகம் ஒன்றும் சேர்ந்து ஆறு ஆயின என்றும்; ஐசுவரியம், வீரியம்,புகழ்,திரு,ஞானம்,வைராக்கியம் என்னும் ஆறு குணங்களாம் என்றும் பலவகையாகக் கூறுவர்.

## 2. முருகவேள் பூமியை வலம் வந்தது

ஒருமுறை சிவபிரானும் தேவியும் விநாயகரையும் முருகவேளையும் நோக்கி 'இவ்வுலகினை முதலில் வலம்வருபவர்க்கு இம் மாதுளங்கனியை (மாம்பழம் எனவுங் கூறுவர்) தருவேன்' என, முருகவேள் மயில்மீதேறி உலகை ஒரு நொடியில் வலம் வந்தார். அங்ஙனம் அவர் வருவதற்குள், விநாயகர் உலகெலாம் தம் பெற்றோருள் அடக்கம் என அறிந்து தாய்தந்தையாரை வலம் வந்து அவர்களிடம் பழத்தைப் பெற்று நின்றார்; இதைக் கண்ட முருகவேள் கோபங்கொண்டு பூமியில் திருவாவினன்குடிக்கு வர, இறைவனும் தேவியும் அங்கு வந்து "பழம் நீயே ஆதலின் உனக்கு வேறு பழமும் வேண்டுமோ?" என அவருக்கு ஆறுதல் கூறினார்,-"பழம் நீ" என்பது"பழநி" ஆயிற்று (திருப்புகழ் 117, 1210 பார்க்க), (திருப்புகழ் ஆராய்ச்சி மூன்றாம் பாகம்-தலைப்பு 17,68 பார்க்க). இதன் விரிவைப் பழநிப் புராணத்திலும், வலம்வந்து இறைவன் எங்கும் உள்ளான் என முருகவேள் காட்டிய உண்மைப் பொருளைச் சுப்பிரமணிய பராக்ரமத்திலும் காண்க.

## 3. முருகவேள் (பூமிக்கு) வந்த வரலாறு

பழநி - சிவகிரி என்பது அகத்தியர் தம்மை வணங்கிய இடும்பாசுரனை நோக்கி வடக்கே திருக்கேதாரத்துக்கு அருகே இருந்த சிவகிரி, சத்திகிரி என்னும் இரண்டு மலைகளையும் கொண்டு வரும்படி கட்டளை யிட்டனர். இடும்பன் அப்படியே வடக்கே சென்றான். அகத்தியர் உணர்த்திய மந்திர

சக்தியால் பிரமதண்டம் தோளுக்குத் தடியாகவும் அஷ்ட நாகங்களும் கயிறாகவும் இடும்பன் முன்னிலையில் தோன்ற அவன் அகத்தியர் குறித்த அந்த இரண்டு மலைகளையும் காவடிபோலக் கட்டித் தூக்கித் தெற்கு நோக்கி வந்தான். வரும்போது ஆவினன் குடியில் அவன் அந்த மலை இரண்டையும் இறக்கி இளைப்பாறினான். பின்னர் எடுக்க முயன்றபோது அவனால் எடுக்க முடியவில்லை; ஏனென்று அவன் பார்த்தபோது சிவகிரியின்மீது அழகு பொலியும் ஒரு சிறுவன் இருக்கக் கண்டான்; இடும்பன் அவனை அம்மலையை விட்டுப் போகச் சொன்னான். சிறுவன் (முருகவேள்) இஃது எமது இருக்கை; யாம் போகோம் என மறுத்தனன்; இடும்பன் கோபித்து அந்தச் சிறுவன்மேற் பாய்ந்தான்: பாய்ந்தவன் தடால் என விழுந்து மூர்ச்சையானான்.

இந்நிகழ்ச்சியை அறிந்த அகத்தியர் வந்து ஆண்டவனை வணங்கினர். ஆண்டவன் இடும்பனை எழுப்பினர். அவனுக்குக் காட்சி அளித்தார். தன்னைப்போலக் காவடி கொண்டுவரும் அடியவர்களுக்கு அவர்கள் வேண்டிய வரங்களை அளித்தருள வேண்டும் என இடும்பன் இறைவனிடம் விண்ணப்பிததான் 'அங்ஙனே ஆகுக' என அண்ணல் அருள்புரிந்தார். பழநிமலையில் இடும்பன் சந்நிதி உளது. இதுவே காவடியின் வரலாறு; (விரிவைப் பழநிப் புராணத்திலும் சுப்பிரமணிய பராக்ரமத்திலும் காண்க)

## 4. சிவபிரான் நிற்க முருகவேள் வீற்றிருத்தல்

இந்த உபதேச நிலையில் மாத்திரம் அல்ல; பின்பு ஒரு கால் சங்கப் புலவர்கள் (நக்கீர ராதியோர்) முன்பு சிவபிரான் தன் கவிக்குக் குற்றம் கூறினவர்யார் என்று வினவி நின்று பேச வேண்டி வந்தது. முருகவேளோ சங்கப் புலவர்கள் நிற்கத் தாம் சாரதா பீடத் தமர்ந்து அவர்கள் கலகத்தைத் தீர்த்தருளினார் - அதனால் "மூவர்கட்கரியான் நிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடு போற்றி", "முருகன் சங்கத் திருப்பவன் நம் முக்கட் கடவுள் நிற்பவன்" எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் போற்றுகின்றது. சிவ பிரான் ஒரு (க்ஷணநேரம்) தியானத்திருக்க முருகவேள் அவருக்குப் பிரணவப் பொருளைத் திருத்தணிகையில் உபதேசித்தனரென்றும் அதனால் தணிகைக்கு "க்ஷணிகாசலம்" எனப் பெயர் போந்ததென்றும் தணிகைப் புராணம் கூறும்.

## 5. திருத்தணிகை

முருகக்கடவுள் வள்ளியம்மை பொருட்டு வேடரோடு செய்த கலாங் காரணமான கோபமும், முன்னஞ் சூரனொடு செய்த போர்க் காரணமான போபமுந் தணிந்து, ஸ்ரீவள்ளி தெய்வயானை சமேதராய் வீற்றிருக்குந் திருப்பதி யாதலின் இது தணிகை, செருத்தணி எனப் பெயர்பெறும்; மலையின் கண் நீலோற்பலச் சுனை யிருப்பதால் இதனை உற்பலகிரி, கல்லாரகிரி யெனவுங் கூறுவர். புறம்பயத்துத் தேவாரத்தில் அப்பர் சுவாமிகள் "கன்மலிந்த கழுநீர்க்குன்றம்" என்றது கவனிக்கற்பாலது.

மிகவும் உயரிய நடையிற் கச்சியப்ப முனிவர் பாடியருளிய தல புராணமும், தணிகை ஆற்றுப்படையும், ஸ்ரீ கந்தப்பதேசிகர் பாடிய தணிகாசல புராணமும்" தணிகைச் சந்நிதி முறையும்" அச்சேறி உள்ளன.

திருத்தணிகையில் (1) சிவன் முருகரைத் தியானித்து உபதேசம் பெற்றனர்... ; அவரது ஆலயம் (வீராட்ட காசர் ஆலயம்,) தணிகையில நந்தியாற்றுக்கு வட கரையில் உள்ளது. அபராசிதவர்மன் (திருத்தணி கோயில்;above 890 AD) கோயிலைக் கட்டினவன் - நம்பி அப்பி, "திருந்து திருத்தணியிற் செஞ்சடையீசற்குக" கருங்கல்லாற் கற்றளியா நிற்க, விரும்பியே நற்கலைகளெல்லாம் நவின்றசீர், நம்பியப்பி பொற்பமையச் செய்தான் புரிந்து" உபதேசித்த சாமிநாதர் ஆலயம் (ஆறுமுக சுவாமி கோயில் என வழங்கும் ஆலயம்) நந்தியாற்றுக்குத் தென்கரையில் உள்ளது (2) திருமால் முருகரை வழிபட்டுத் தாரகா சுரனாற் கவரப்பட்ட தமது சக்கரம், சங்கு முதலியவற்றைப் பெற்றார். விட்டுணு தீர்த்தம் மலைமேல் கோயிலுக்கு மேற்கே குருக்கள்மார் வீடுகளின் எதிரில் உள்ளது (3) பிரமன் முருகரை வழிபட்டு சிருட்டித்தொழில் செய்யும் ஆற்றலைப் பெற்றனன். மலைமேல் ஏறிப்போகும் வழீயில் பாதி தூரத்திற் பிரமகனையும் பிரமேசர் ஆலயமும் உள்ளன.

தணிகையிற் சிவபிரானுக்குக் குருநாதனாய் முருகவேள் யோக நிலையில் இருந்து உபதேசித்தனராதலின் முருகவேள் தட்சிணாமூர்த்தியாயினர்: சிவனே முருகவேள் ஆதலின் தனக்குத் தானே குருமூர்த்தியாயினர்.

"ஆறுமுகம் ஆறுமுகம்" என ஆறு முறை கூறும் 161 ஆம் பாடல் பழநிக்கு உரியதாயிருத்தலால் பழநியில் ஆறுமுக" தரிசனம் இவருக்குக் கிடைக்கப்

பெற்றுப் 'பழநியில் ஆறுமுக' என்றும், திருச்செந்தூரில் தேவசேனாபதியாய் விளங்கின ராதலின் செந்தில் காவல என்றும், தணிகையில் அழகராய் விளங்குகின்றாராதலின் 'தணிகையில் இணையிலி' என்றும் முருகனை அழைக்கின்றார் போலும்;

செந்தில், பழனி, தணிகை, இம் மூன்றுமே முருகன் தலங்களுள் பிரபலமாய் அருணகிரியார் காலத்திலும் விளங்கின போலும். இம் மூன்று தலங்கள் கந்தரலங்காரத்திலும் பாராட்டப்படவே, (திருப்புகழ்ப் பாடல்கள் 439,540,844,845 பார்க்க) மனம், வாக்கு, காயம் மூன்றாலும் முருகனைப் பணிவதற்கு மனத்தால் திருச்செந்தூரையும் 'செந்தூர் கருது'8 (கந்தரந்தாதி-33), செந்திலை உணர்ந் துணர்ந்துணர்வுற (திருப்புகழ் 47) வாக்கால் பழநியையும் படிக்கின்றலை பழநித் திருநாமம் (கந்தரலங்காரம் - 75) , காயத்தால் தணிகையையும் 'தணிகைக் கமர! நின் தண்டையந்தாள் சூடாத சென்னியும், நாடாத கண்ணும், தொழாதலையும், பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே' (கந்தரலங்காரம்-76) வணங்குதல் நன்றெனஉபதேசித்துள்ளார். 'தணிகையில் வாசகியும் பூசித்ததாகத் தணிகைத் தலபுராணங்கள் கூறுகின்றன:-

திருப்பாற்கடல் கடைந்த போது மத்தாக இருந்த மந்தர மலையில் இருந்த பிளப்பினில் கயிறாக இருந்த ஆதிசேடன் சிக்கக், கடைந்த வேகத்தில், ஆதிசேடனுடைய தோல் சுரசுரப்பை அடைந்தது. திருமால் உரைத்த உபதேசப்படி, ஆதிசேடன் திருத்தணிகையை அடைந்து தவம்புரிய, முருகவேள் எதிர்தோன்றி ஆதிசேடனுடைய உடம்பைத் தமது கரத்தினால் தடவ சேடன் சருக்கரை (சொர சொரப்பு) நீங்கிப் பழைய வலிய தேகத்தைப் பெற்றான். (இது தணிகாசல புராணம்)

இங்ஙனம் இடர் உற்றுப் பூசித்துப் பேறு பெற்றது வாசுகி என்னும் நாகம் என்று தணிகைப் புராணம் கூறகின்றது.

### 6. கல்வி கரைகண்ட வரலாறு

ஒரு காலத்தில் கலைப்புலவர்களும், தேவர்களும், முனிவர்களும் கூடியிருந்த சபையில் யார் முதன்மைப் புலமை உடையார், அவருக்கு வித்வ தாம்பூலம் கொடுக்க வேண்டும் என்ற ஆராய்ச்சி நிகழ்ந்தது; கலைமகளின் அம்சமான ஔவையாரே இத்தாம்பூலத்துக்கு உரியவர் என்று தீர்மானித்து அந்த அம்மையாரிடம் யாவரும் சென்று நிகழ்ந்ததைக் கூற, ஔவையார்

இதைப் பெறத் தக்கவள் நான் அன்று; புலவர்கள் எனப்படும் தேவர்களுக்கு அதிபன்; 'ஐந்திர வியாகரணம்' என்னும் அருமையான இலக்கண நூலை இயற்றினவன் இந்திரன்; அவனிடம் செல்லுங்கள், என்றனர்; அங்ஙனமே, இந்திரனிடம் அவர்கள் போய்க் கூற இந்திரன் மிக அஞ்சி "அந்தோ! ஒரு இலக்கண நூல் இயற்றி ஒருவன் சகல கலா வல்லவன் ஆய்விடுவானா! முருகவேளிடம் தமிழ் கற்ற அகத்திய முனிவரே இத் தாம்பூலத்தை வாங்குவதற்கு உரியவர்" என்றான். இதைக் கேட்டு யாவரும் அகத்தியரிடம் செல்ல, அவர் 'சகல கலா வல்லி', 'கலைமகள்' என்றே பெயர் கொண்ட சரசுவதி தான் இத்தாம்பூலத்தை வாங்கும் தகுதி உடையாள்" என, யாவரும் கலைமகளிடம் சென்று, வந்த செய்தியைக் கூற, கலைமகள் 'யான் கற்றது கைம் மண்ணளவு கல்லா துலகளவு' வாகீசுரி, ராஜ ராஜேசுரி எனப்படும் பார்வதிதேவியே இப்பரிசுக்கு ஏற்றவள், என்று கூற, யாவரும் தேவியிடம் போய் விண்ணப்பித்தனர். தேவி புன்னகை புரிந்து நான் வாழைப்பழத்தின் தோல் போன்றவள்; எனக்குள் இருந்த கனி, முத்து, முத்துக்குமரனே இப்பரிசுக்கு உரியவன் எனக் கூறி விடுத்தனள். பின்யாவரும் கந்தபுரம் சென்று நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறி இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என முருகவேளிடம் தாம்பூலத்தை நீட்ட, "நன்று, நாம் எற்றுக் கொள்வோம்" எனத் தடையின்றிக் கூறி அந்தப் பரிசை அவர் ஏற்றுக்கொண்டார். இங்ஙனம் 'சகல கலா வல்லவன் நான் என்று மார் தட்டும் பெருமாள்' ஆயினர் நமது முருகவேள்; மலைமங்கை வரைக்கும் போய் அந்த அம்மையார் கல்விகரை கண்டவன் எம்புதல்வனே எனக் குறித்தபடியால் "கல்லசல மங்கை எல்லையில் விரிந்த கல்விகரை கண்ட புலவன்" ஆயினர் கந்தவேள். இதன் விரிவை 'சுப்பிரமணிய பராக்ரமம்' என்னும் புத்தகத்திற் 'சகலகலா வல்லப மூர்த்தி' சரித்திரத்தைப் பார்க்க.

'ஓம்' என்னும் ஓரெழுத்தினின்றே 'ஓம் நம சிவாய' என்னும் ஆறெழுத்து விரியும் எனக் காட்டி விளக்கினர் முருகவேள்.

ஓரெழுத்தாகிய ஓம் என்பதே அ,உ,ம் என்னும் மூன்றெழுத்தாய், அம் மூன்றுங்கூடி ஓம் என்று எழுதும் போது விந்துவாயும் ஓம் என்று உச்சரிக்கும் போது நாதமாயும் விரிதலால், அ,உ,ம என்னும் மூன்றெழுத்தும், விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலி வடிவுங்கூடி ஐந்தெழுத்தாயிற்று; ஆகவே பிரணவமே (ஓம் என்பதே) பஞ்சாக்கரமாம். "ஓங்காரமாம் ஐந்தெழுத்தாற் உண்டுபண்ணி தாயுமானவர் ஓம் என்னும் இவ்வோரெழுத்தே 'ஓம் சிவாய'

**என்னும் பஞ்சாக்கரம் கூட. ஆறெழுத்து விரியும் என்ப. ஓம் என்னும் ஓரெழுத்தின் விரிவு மேற் கூறியவாறு ஆக சிவாய நாமமும் ஐந்தெழுத்தும் பின்வருமாறு விரியும். சிகாரம் சிவத்தையும், வகாரம் அருட்சத்தியையும், யகாரம் ஆன்மாவையும், நகாரம் திரோதானத்தையும், மகாரம் ஆணவ மலத்தையும் உணர்த்துவனவாம் - சிகார வகாரங்கள் பதியையும், யகாரம் பசுவையும், நகார மகாரங்கள் பாசத்தையும் விளக்குவனவாம்**

ஆகவே ஓரெழுத்தை ('ஓம்' என்பதை) விளக்கி, அதன் விரிவாக 'ஓம் நமசிவாய' என்னும் ஆறெழுத்தையும் சிவபிராற்கு விளக்கினர் முருகவேள். முழுதுணர்ந்தும் உணர்வரியதொன்றை ஓம்மொழியில்விண்ட சிறுபிள்ளை" முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்.

## *7. அகத்தியர் முருகவேளைக் குன்றக்குடியில் வழிபட்டது*

மலைகளுள் குன்றக்குடி எவ்வாறு உயர்ந்ததென அகத்தியர் சிவபிரானிடம் விண்ணப்பிக்கச், சிவபிரான் - 'கந்தபிரான் தாம் ஏறிய மயிலினை முன்னொருகால் 'மலையாகுக' எனக் கோபத்திற் சபித்தனர்; மயிலும் கந்தபிரானை வணங்கி 'யான் உய்வதெப்படி' எனக் கேட்டது. கந்தபிரான் - 'நீ செல்க; யானும் அங்கு வருவேன்' என்றார். சபித்த படியே மயில் மலை உருவமாயிற்று. அந்த மலையில் குமாரக் கடவுள் வந்து வீற்றிருந்தார். குமாரக் கடவுள் அங்கு வந்து வீற்றிருப்பதால் மயூரகிரி தனிச் சிறப்புற்றது - என விளக்கினர். இவ்வரலாற்றை அறிந்தவுடன் அகத்தியர் மயூரகிரிக்கு வந்து, சரவணதடத்தில் முழுகி, மலைவலம் செய்து, பூசனை புரிந்தனர்.

முருகா! உனது திருவடியை யான் அடைதல் வேண்டும். அந்த அருளைப் பாலித்தருள்க என வேண்டினர்; தாம் விரும்பிய வரத்தைப் பெற்றனர். இவ்வாறு, தணிகை, பழநி, குன்றக்குடி என்னும் தலங்களில் வழிபட்ட, அகத்தியர் முருகவேளின் முதற்றனி அடியாராயினர்.

## *8. முசுகுந்தர்*

கயிலையில் சிவபிரானும் தேவியும் வீற்றிருந்த சோலையில் ஒரு முசு (ஆண் குரங்கு) வில்வ இலைகளை நிரம்பப் பறித்து அவர்கள் மீது சொரிந்தது. அது நம்மை வழிபடுகின்றது என இறைவன் கூறத், தேவி அந்த முசுவுக்கு ஞானத்தை நல்கினள். முசு கீழே இறங்கி வந்து அடியனேன் பிழையைப் பொறுத்தருள்க என வேண்டிற்று; நீ எம்மை வில்வஇலைகளால் வழிபாடு

புரிந்தனை. மானுடனாகப் பிறந்து முழுதுலகையாளுக நீ என இறைவர் திருவாய்மலர்ந்தார். முசு, " பெருமானே! நித்தம் உங்களைத் தரிசித்திருந்த நான் உங்களைப் பிரிந்து எங்ஙனம் இருப்பேன்; செல்வத்தில் மயங்கி நான் உய்யும் வழியை இழத்தல் கூடுமே" எனத் துக்கிக்க, இறைவன், நீ பூமியிற் சிலகாலம் வாழ்ந்து பின்னர் இங்கு மீளு என்றனர். முசு, இந்த முசு முகத்துடனே நான் மண் மீது பிறக்க அருளுக; அப்போதுதான் ஆணவம் என்னைப் பீடிக்காது' என்றது. 'நன்று' என்றனர் இறைவர்; முசுவும் உலகை ஆண்டு வந்த அரிச்சந்திரன் என்பவனுக்கு மருமானாக உலகில் உதித்து முசுகுந்தன் எனப் பெயர் பெற்றது. கருவூர் தமது ராஜதானியாக முசுகுந்தர் உலகை ஆண்டனர். இவர் சூரனுடைய அரசாட்சிக் காலத்தில் இருந்தவர். திருப்பரங்குன்றத்துக்கு வரவழைக்கப் பட்டனர் முசுகுந்தர். ஆறுமுகப் பெருமானது அடித் தாமரை மறவாத அன்பராதலால் முசுகுந்தர் முரகவேளுக்குத் திருமணம் எனக் கேட்டதும் அளவிடற்கரிய மகிழ்ச்சி எய்தி அழைக்க வந்த தூதரை நோக்கி -

'ஈண்டை மாநிதி யாவும் நல்குகோ
காண்ட குங்குடை கவரி நல்குகோ
ஆண்டி ருந்தஎன் அரசு நல்குகோ
வேண்டு கின்றதென் விளம்புவீர்' என்றார்

-கந்தபுராணம் 5-2-55.

திருமணத்தை தரிசித்து முசுகுந்தர் கருவூருக்கு மீண்டனர். பின்னர், முசுகுந்தர் வசிட்ட முனிவர் உபதேசித்தபடி வெள்ளி நாள் விரதம் (சுக்ரவார விரதம்), கார்த்திகை நாள் (கிருத்திகை விரதம்), கநத ஷஷ்டி விரதம் ஆகிய விரதங்களை அநுட்டித்தார். முருகவேள் மகிழ்ந்து எதிர் தோன்றி எந்த நல்வரம் வேண்டுகின்றாய் என வினவினர். முசுகுநதர் 'முருகா! என் அரசாட்சி உலகெலாம் நன்று நடைபெற வேண்டி உம்மிடம் உள்ள வீரவாகு ஆகிய வீரர்களை எனக்குத் துணைபுரிய அருளுதி' என்றனர். முருகவேளும் நன்றெனக் கூறி வீரவாகு முதலியோரை நோக்கி - "முசுகுந்தன உங்களைக் காட்டிலும் என்பால் அதிக அன்புள்ளவன்; நீங்கள் அவனுக்குத் துணைவராய்ப் போய் இருத்திர்" என்றனர். அப்போது வீரவாகு முதலானோர் சூரர் குலத்துடன் மாறுபட்டழித்த நாங்கள் ஒரு மாநுட அரசனிடம் தொழில்புரிய மாட்டோம் எனப் பதில் கூறினர். அறுமுகவேள் "நம் உரை மறுத்தீர்; ஆதலால் நீங்கள் மாநுடராய் அதே முசுகுந்தனுக்குச் சேனை வீரர்களாகக் கடவீர்; பின்னர் பற்பகல் கழிந்த பின் நோற்று எம் பக்கலில்

வருவீர்களாக" எனக் கட்டளையிட்டனர். வீரவாகு முதலானோர் தமது பிழையை நினைத்து "பொய்யரேம் பிழைபொறுத்தருடியால்" என்று முருகனது பொன்னடி பணிந்தார். அங்ஙனமே முசுகுந்தருக்குச் சேனைகளாக வந்து சேர்ந்தனர் வீரவாகு முதலானோர். மாநுடனாக வந்த வீரவாகு புட்பகந்தி என்பவளை வேட்டு, தனது மகள் சித்ரவல்லி என்பவளை முசுகுந்தற்குத் திருமணம் புரிவித்தார். சித்ரவல்லிக்குப் பிறந்த குமரன் அங்கிவன்மன். முசுகுந்தர் இந்திரனுக்குத் துணையாகச் சென்று அவுணர்களை அட்டார். இந்திரன் பூசித்திருந்த தியாகராஜ மூர்த்தியை இறை அருள் துணைசெய்ய முசுகுந்தர் பெற்றுத் திருவாரூரில் தாபித்து வழிபட்டார். பின்னர் அங்கிவன்மனுக்கு முடிசூட்டி நோற்றிருந்து கயிலையை அடைந்தார். வீரவாகு தேவரும் தம்பியர் எண்மரும் இலக்கருடன் தங்கள் குழந்தைகளை அங்கிவன்மன்பால் இருத்தித் தாங்கள் அரியதவம் ஆற்றி மாநுடத்தன்மை நீங்கி அனைவர்களும் கந்தகிரியை அடைந்தார்கள்.

## 9. நல்லியக்கோடன்

நல்லியக்கோடன் ஒரு சிற்றரசன். இவன், ஒய்மானாட்டு நல்லியக்கோடன் எனவும் வழங்கப்படுவன். பத்துப் பாட்டினுள் மூன்றாவதாகிய சிறுபாணாற்றுப்படைத் தலைவன். இவன் ஓவியர் குடியிற் பிறந்தவன். ஈகையில் மழைபோன்ற பெரிய கையினை உடையவன். பேகன், பாரி, காரி, ஆய், அதியமான், நள்ளி, ஓரி, இவ் வேழு வள்ளல்களின் கொடைத் திறத்தினன். இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்னும் சங்கப்புலவரால் சிறுபாணாற்றுப் படை என்னும் நூலிற் சிறப்பிக்கப்பட்டவன். இவனுடைய ஊர் திண்டிவனத்தைச் சார்ந்த கிடங்கில். இவனுடைய பிற ஊர்கள் வேலூர், (இது உப்புவேலூர்) மாவிலங்கை என்பன. இவன் தன் பகைமிகுதிக்கு அஞ்சி முருகக்கடவுளை வழிபட, அக் கடவுள் இவன் கனவில் தோன்றி கேணியில் பூத்த பூவைப் பறித்துப் பகைவர்பால் விடுக எனக் கட்டளையிட்டனர்; இவன் அவ்வாறே அந்தப்பூவை விட, அது வேலாகச் சென்று, பகைவரை அட்டு இவனுக்கு வெற்றி தந்தது. வேல் வென்ற இடம் - வேலூர் ஆயிற்று.

குதிரை முகத்தை மாற்றின சரித்திரம்; கலிங்க தேசத்தரசன் மகளாகிய கனகசுந்தரி தாமிர் பருணி நதி மூலத்தில் ஸ்நாநஞ் செய்ய வந்தபோது அங்கே தவஞ்செய்து கொண்டிருந்த குதிரை முகமுடைய அயக்கிரீவு முனிவரைக் கண்டு அவமதித்து நகைத்தாள். அதுகண்ட முநிவர் "நீ மறு பிறப்பிற் குதிரை

## 7. தேசிக சுப்ரமணியர்

*ஷட்புஜம் ச ஏகவதனம் கரண்ட மகுடாந்விதம்*

*சக்தி ஹஸ்த த்வயம் ச ஏவ ஜப மாலாதரம் சுபம்,*

*மயூரவாஹனாரூடம் வர அபய காராம்புஜம்*

*இத்யேவம் விதிவத் த்யாயேத் சிவதேவச்ய தேசிகம்*

*ரக்தவர்ண:*

*ஆறு திருக்கரங்கள், ஒரு திருமுகம், பூக்கூடை கவிழ்த்தது போன்ற அடர்ந்த கிரீடம் தாமரைத் திருக்கரங்களில் சக்தி வேல், ருத்ராக்ஷ மாலை, வரதம், அபயம்.*

தேசிக சுப்ரமணியர்



முகத்துடன் பிறக்கக் கடவை" எனக் கனகசுந்தரியைச் சபிக்க, அவளும் மனம் வருந்தி 'சுவாமி! இச்சாபம் என்று தீரும்' என வேண்ட, அவர், திருச்செந்தூரில் ஷண்முக நாதன் சந்நிதிக்கு நேராகவுள்ள வதனாரம்ப தீர்த்தம் எனப்படும் சமுத்திரத்தில் ஸ்நாநம் செய்யத்தீரும் எனக் கூறினார். மறுபிறப்பிற் கனக சுந்தரி உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டிய ராஜன் மகளாகப் பிறந்தனள். முகமாதிரம் குதிரை குகம். அங்கங்கள் யாவும் வெகு அழகு. அது கண்டு மனம் வருந்தின பாண்டியன் தன் மகளுக்கு அங்க சுந்தரி எனப் பெயரிட்டு குதிரை முகம் எங்ஙனம் தொலையும் என ஏக்கமுற்றிருக்க, புண்ணிய தீர்த்தத்தில் முழுக வேண்டும் என ஒரு அசரீரி கேட்டது. பாண்டியனும் தன் மகளை அவ்வாறே தீர்த்த ஸ்நாநத்துக்கு அனுப்ப அவளும் கங்கை முதலிய தீர்த்தங்களில் ஆடி, ஈற்றில் திருச்செந்தூரில் சமுத்திர ஸ்நாநஞ் செய்ய, குதிரைமுகம் மாறி சுந்தரமான நன்முகம் பெற்றனள்; இறைவன் ஒன்பது வர்க்கத்தில் நின்று தொழில் புரிவன்; அவை தாம் சிவம், சக்தி, நாதம், விந்து ஆகிய அருவத்திருமேனி நான்கு; மகேசன், உருத்திரன், மால், அயன் ஆகிய உருவத்திருமேனி நான்கு; சதாசிவமாகிய அருவுருவத் திருமேனி ஒன்று;

> "சிவம் சக்தி நாதம் விந்து சதாசிவன் நிகழும் ஈசன்
> உவந்தரு ளுருத்திரன்தான் மாலயன் ஒன்றி னொன்றாய்
> தவத் தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்"

சிவஞான சித்தி 2-16-4.

சதாசிவ கோத்திரன் அருள் பாலா - என்றதனால் முருகவேளும் தாதையே போல அருவுருவத் திருமேனியான் என்பது பெறப்படும்.

ஏழேழு பேர்கள் கூற வரு பொருளதிகாரம் "ஊமர் விதிசெய்தது. அகப் பொருள் இலக்கணம் இல்லையே என்று பாண்டியன் வருந்தச் சொக்கலிங்க மூர்த்தியே 60 சூத்திரங்கள் கொண்ட நூலை எழுதி அளித்தார். இந் நூல் 'இறையனார் அகப்பொருள்' எனப் பெயர் பெறும்; இந்நூலுககு நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களும் உரை கண்டு, தத்தம் உரையே சிறந்ததென வாதாடினர். "ஆலவாய் அண்ணலே! நீதான் எங்கள் கலகத்தைத் தீர்க்க வேண்டும்" என்று இறைவன் முன் முறையிட்டனர். இறைவன் ஒரு புலவர் போல வந்து 'இவ்வூரில் வணிகன், உப்பூர் கிழாரின் மகன், ஊமை பாலன், சரவண குகனே வந்துள்ளான்; அவன் ஒப்பிலாஞானி; அவன் பெயர் உருத்திர சன்மன்; அவன் முன் உங்கள் உரையைச் சொல்லுங்கள்; எவருடைய

உரையை அவன் கொள்கின்றானோ அதுவே உண்மை உரை; இதற்கு ஐயமில்லை, கவலை வேண்டாம்" என்றனர். ஊமை எங்ஙனம் பேசுவான் எனப் புலவர்கள் கேட்க, அந்தச் செந்தமிழ் தேர்செட்டிக்கு எவருடைய உரையைக் கேட்டால் உடலில் புளகமும் கண்ணில் (ஆனந்த) நீரும் தோன்றுகின்றனவோ அந்த உரையே உரை; மற்றவை உரையல்ல எனக் கூறி மறைந்தனர். புலவர்கள் வியந்து அங்ஙனமே அந்த ஊமைப் பிள்ளையைப் பத்தியுடன் வரவழைத்து, சிறப்புடன் சிங்காசனத்தில் அமர்த்தி, தூப தீபம் தந்து, தத்தம் உரையை உரைத்தனர். வளமுறு கீரன் (நக்கீரன்), தரைபுகழ் கபிலன், மாசறு பரணன் இம் மூவர் உரையைக் கேட்ட போது ஊமை பெரு வியப்பைக் காட்டிப் புளகிதமும், துளிபடு கண்ணுமாய் பொருந்தினன்; அதுகண்ட புலவர்கள் அதிசயித்து இம்மூவர் உரைத்த பொருளே உண்மைப் பொருள் எனக் கண்டு தங்கள் கலகம் தீர்ந்தனர். "அருந்தமிழ்ச் செட்டியாம் செட்டி இலகிய மயின் மீது அறு முகத்தோடும்,இனிய பன்னிருகரத்தோடும், புலவர் கண்டிறைஞ்ச அருளினால் விளங்கிப் போயினான்" - இது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தி 19- 'ஊமை தமிழறிந்த திருவிளையாடல்' ஆகும்.

### *10. வேல் வகுப்பின் சுருக்க உரை*

திருத்தணிகை முருகன் வேலானது -(1) வள்ளியின் விழிக்கு ஒப்பாகும். (2) இந்திரனது கால்விலங்கை முறித்தெறியும், (3) நக்கீரனை மலைக்குகையினின்று மீள்விக்கும், (4) பேய்கள் களிக்க மாமிச ஊண் அளிக்கும், (5) தேவர்கள், முனிவர்கள், இந்திரன், பிரமன், திருமால், மனிதர்கள் - ஆகிய யாவருடைய துன்பங்களையும், வினைகளையும் ஒழிக்கும. (6) சூரியனுடைய ஒளி, சந்திரனுடைய ஒளி, வடவாமுகாக்கினியின் ஒளி இவைகளை அடக்கிடும்படியான பேரொளியை வீசும், (7) அடியார்க்குக் கெடுதல் நினைப்பவர்களின் குலத்தையே நாசமாக்கும் - எனக்குத் துணையாய் நிற்கும், (8) திருப்புகழை உரைப்பவர்களின் பகையை அறுத்தெறியும், அறத்தை நிலை நிறுத்தும், (9) யமன் வரும்போது சிவனார் திருவடிக்கு ஒப்பாக நடக்கும்போது எப்புறத்திலும் நின்று எனக்கு இரவும் பகலும் துணைபுரியும், (10) அரக்கர்களின் குடலைச் சிவந்த பூமாலை போலச் சூடிக்கொள்ளும், (11) கடலை உடைத்து எறியும்; நீரைப் பருகும், உடைப்பை அடைக்கும், அடைத்து அசுரரத்தத்தை நிரப்பி அதில் விளையாடும்; (14) சிறகைப் பெற்ற மலை

பறப்பதுபோல வேகமாய்ப் பறக்கும், (15) குறைத்தலைகள் பற் கடிக்க, விழி விழிக்க, அவுணர்களைப் போர்க்களத்தில் மோதும்.

### 11. முருகன் திருவடியின் பெருமை

'முருகன் திருவடி எல்லாப் பொருள்களிலும் ஒன்றுபட்டும் நிற்கும்; வேறாகவும் நிற்கும்; சகல சத்திகளும் அஷ்ட சித்திகளும் எளிதாம்படிப் பெருவெட்ட வெளியில் விளங்கி நிற்கும். சிவபிரானும் போற்றித் தியானித்துத் தொழ நிற்கும். சிதாகாச வெட்ட வெளியில் ஞான நிருத்தம் புரிந்து நிற்கும்; சமய கோடிகளும், அரி, அயன், முதலிய தேவர் கூட்டமும் 'அறிய அறிய அறியாத' தன்மையில் நிற்கும். நமது ஊராகவும், நம்மைப் பெற்ற தாயாகவும், நமது சுற்றத்தாராகவும் அருகிருந்து துணை புரிந்து நிற்கும்' - என்றெல்லாம் விளக்கியும், 'அரிய மோன வழிதிறந்த நளின பாதம்' பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை யிருசரணம்!' நாவேறு பாமணத்த பாதாரம், 'ரக்ஷைதரு சிற்றடி', பரமர் வந்திக்கத் தக்க பத(ம்) "முத்தமிழ்வாணரோது சித்திர ஞான பாதம்", 'ஞானபாத பத்மம்' என்றெல்லாம் சிறப்பித்தும் மகிழ்கின்றார் அருணகிரியார்.

### 12. முருகவேளின் ஆபரணங்கள்

அரைவடம், மணிவடம், பொன் நாண், ஆரம், ஆழி (மோதிரம்), உடைமணி, கழல், கிண்கிணி, ரத்னக் குதம்பை, கடகம், குழை, கொலுசு, சலங்கை, முத்துச் சதங்கை, சிலம்பு, செம்பொன்நூல், சுட்டி, (கணக) தண்டை, நூபுரம், பதக்கம், முத்துமாலை, வீரகண்டை, வெண்டையம், மணிக்கிரீடம் - முதலிய கூறப்பட்டுள்ள முருகவேளின் சதங்கை ஒலியும், நூபுர ஒலியும் வேத ஒலிகளாம், 'மறைவிதங்கள் கொஞ்சிய சிறு சதங்கை', சதகோடிமறை ஒலமிடு நூபுரம் - என்பர். அவரது தண்டை பலவித சந்த பேதங்களை விளக்கிக் காட்டுவதாம். 'சந்தபேதம் ஒலித்திடும் தண்டை' என்கின்றார். அவரது கிண்கிணியும் சிலம்பும் இனிய நாத கீதங்களை வெளியிடுகின்றனவாம்; நாதந்த கிண்கிணி இனிய நாத சிலம்பு என ஓதியுள்ளார்.

### 13. முருகவேளின் படைகள்

வேல், கட்கம் (வாள்), கவசம், குலிச சத்தி, கோதண்டம், சிறுவாள், சீரா (உடைவாள்) சூலம், தண்டு கூறப்பட்டுள.

## 14. முருகவேளுக்கு உரிய மாலையும் மலர்களும்

பாமாலை, கடம்பு (நீபம்), வெட்சி, குரா, கூதளம், அடம்பு, அறுகு, கரந்தை, கொன்றை, கோங்கு, கோடல் (காந்தள்), சண்பகம், செங்கழுநீர், செவ்வந்தி, தாமரை, தும்பை, துளசி, நீலோற்பலம், பிச்சி, மகிழம்பூ முல்லை, விளா (வெள்ளில், வில்வம்)

## 15. முருகவேளின் திருவிளையாடல்களும் பராக்கிரமங்களும்

சிவனுக்கு உபதேசம்; பிரமன், மால், இந்திரனுக்கு உபதேசம்; அகத்தியர்க்கு உபதேசம்; பழம் பெற வேண்டி உலகெலாம் வலம் வந்து, சிவபிரான் தன்னைத் தேடிவரச் செய்தது, திருவேங்கடத்திற்குகைவழி வந்தது; சப்த முனிவர்களுக்கு இருக்கு மந்திரம் உபதேசித்தது; சநகாதி நால்வர்க்கு அருளியது, 'ஈறிலாது இலகுவது', மறைகள் 'குமரகுரு' என ஒலிடுதல்; 'ஓம்' என்னும் பிரணவத்துக்கு உயிர்ப்பாக விளங்குவது; கலவி கரைகண்டது; வராகத்தை அடக்கியது; எழுகிரியை யட்டது; வேல்கொண்டு தீர்த்தங்கண்டது; ருத்ர ஜன்மராய்த் தமிழ் ஆய்ந்தது; கடலை அட்டது;மேருவைச் செண்டாலடித்தது; நக்கீரருக்கு இலக்கணம் ஓதி "உலகம் உவப்ப" என்று அடி எடுத்துக் கொடுத்தது; நக்கீரரைப் பூதத்தினின்றுங் காத்தது; முட்டைப் பெயர் செப்பி (பொய்யா மொழிப் புலவரிடம்) கவி பெற்றது; சம்பந்தமூர்த்தியாய் விளையாடியது; தில்லையம்பலத்தில் திருநடம் ஆடியது - முதலியன கூறப்பட்டுள.

## 16. முருகன் திரு அவதாரம்

அவர் கங்கா புத்திரரானது; அறுவர் முலையுண்டது; அறுசிறுவர் ஒருடலினரானது; உமைமுலைப்பாலுண்டது; குழந்தைத் திருவிளையாடல்கள்; இந்திரனை அச்சுறுத்தியது; ஆட்டு வாகனங் கொண்டது; பிரமனைப் பொருள் வினவித் தண்டித்தது; சிருஷ்டித் தொழில் செய்தது; சூரன் வரம் பெற்றது; சூராதியர் கொடுமை; இந்திரன் மூங்கிலாயமைந்து தவங்கிடந்தது; முருகருக்குத் தேவி வேல் அளித்தது; முருகருக்குச் சிவபிரான் படையீந்தது; தாரகாசுர சம்ஹாரம்; கிரௌஞ்சம் பிளந்தது; வீரவாகு தேவர் தூது அனைவரும் சிரித்தெரித்தது; சிங்கமுகாசுர சம்ஹாரம்; சூர்மாவை அட்டது; சூரனை அட்டுத் துடிக்கூத்தாடியது; சூரன் இருபிளவாய்ச் சேவலு மயிலுமானது; தேவர் சிறைமீட்டுப் பொன்னுலகம்

புரந்தது; தேவசேனை திருமணம்; வள்ளியொடு லீலைகளும், திருமணமும்; -ஆகிய யாவும் சொல்லப்பட்டுள்ளன.

### 17. முருகவேளின் தன்மை

அடியார்க்கெளியர், யாகரக்ஷகர், இசைப்ரியர், கிரிப்ரியர், தமிழ்ப்ரியர், சந்தக் கவிப்ரியர்.

### 18. முருகவேளின் தெய்வ உறவினர்

சிவகுமாரர், பார்வதிபாலர், விநாயகரது தம்பி, மால் மருகன், திருமருகன், பிரமன் மைத்துனர், சாரதி (சரஸ்வதி) துணைவர் (சகோதரர்), காமவேள் மைத்துனர்.

### 19. முருகவேளைத் தொழுவோர்

சிவன், மால், பிரமன், இந்திரனாதிய தேவர்கள், முனிவர்கள்.

### 20. முருகவேள் உறையும் இடம்

அடியார் இ[illegible]பம்; அடியார் கூட்டம்; பணிபவர் சித்தம்; குகனென்பவர் மனது; குற்றமற[illegible]வர் உளம்; ஞானிகள் சித்தம்; பாவாணர் நா; மாதவர் இதயம்; வேதசிரோமுடி; விநாயகரை எப்போதும் சிந்திப்போரது சிந்தை.

### 21. மு[illegible]நகவேள் திருநாமங்களுள் அருமையான ஒருசில

அடிய[illegible] காவற்காரப் பெருமாள்; அடியார்க்கு நல்ல பெருமாள்; ஆகம சார சொருப[illegible]; ஆயிரங்கலை கந்தன், ஆறாதாரன் உண்டநெஞ்சறி தேன்; ஊமைத்[illegible]தவர்கள் தம்பிரான்; என்றும் இளையோன்; கடவுட் சக்கரவர்த்தி; கல்வி க[illegible]ரைகண்ட புலவோன்; கவிஞ ருசாத்துணைப் பெருமாள்; கவிராஜப் பெருமாள்; குழந்தைக் குருநாதன்; குறத்தி கிங்கரன்; சகலகலாதரன்; சத்யவாக்யப் பெருமாள்; செந்தமிழ்ப்பெருமாள்; ஞானபண்டிதசாமி; தகப்பன்சாமி; நாரதகீத விநோதன்; பிள்ளைப் பெருமான்; முத்தமிழ் வினோதன்; முத்திக்கொரு வித்து; முருகச் சிம்புள்; முழுச் சேவகன்; வள்ளி வேளைக்காரன். முருகன் திருநாமங்களுள் (1) சிறியன ;- சேய், வேள், குகன் என்பன; (2) பெரியது; "வீரசேவகவுத்தண்ட தேவகுமார ஆறிருபொற்சொல்

முருகவேள் வள்ளி மூலமாகப் பெற்ற *சீதனப்* பொருள்களைத் "திண்ணெனன் தடக்கை வெஞ்சிலை வேடர் குடிகொண்ட *சீறூரும்*,

ஊருர்தொறும், செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்; சீதனக் காணிபெற்றத் தண்ணெனன் குறிஞ்சித் தலந்தலையாளிப்பவன் சப்பாணி கொட்டியருளே" எனவரும் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலும் 'வரைதரு பெண்ணை வேட்டு வரையெலாம் காணி கொண்ட விரைதரு கடப்பந் தண்டார் வேலவற் கன்பு செய்வாம்' - எனவரும் மண்ணிப் படிக் கரைப் புராணத்தும் காண்க; தேவசேனையின் சீதனப் பொருளை - 'இடியு முனைமலி குலிசமும் இலகிடு கவள தவள விகடதட கனகட இபமும், இரணிய தரணியும் உடையதொர் தனியானைக் கிறைவ" எனவரும் திருப்புகழில் காண்க; வள்ளியாற் பெற்ற சீதனப் பொருள்கள் ஐந்து (1) ஊதுகொம்பு, (2) சேவற்கொடி, (3) வேலாயுதம், (4) மயில்மாகளம், (5) மலையாட்சி, தேவசேனையாற் கிட்டியவை நான்கு - (1) இடி, (2) குலிசம் (3) ஐராவதம், (4) பொன்னுலகு.

### 22. வேலின் அலங்காரமும் அழகும்

குஞ்சம், மணி முதலிய் பொருந்தி அழகுடன் பொலியும் வேல் என்பது 'குஞ்சங் கட்டிய வேல்' , 'மணிவேல்', 'மணிக்கதிர் வேல்', கோமளகசத்தி, சிங்கார அயில் வேல், 'சித்ர வடிவேல்' என வருவனவற்றால் தெரிகின்றது.

### 23. வேலின் உக்ரம்

சினவடிவு- தங்கியவேல், உக்ரவடிவேல், இடி முழங்கிய வேற்படை, கால பாதுசத்தி அண்டவிக்ரம வேல் என வருவனற்றால் வேலின் உக்கிரம் புலப்படுகின்றது.

### 24. வேலின் உருவம்

வேலின் உருவம் இன்னதென்பதை 'நெட்டிலைவேல்', தாமரை (கூர்மை) வேல், நெடுவேல், நீள் வேல் என வருவனவற்றால் அறிகின்றோம்.

### 25. வேலின் குணம்

வஞ்சர்க்கு வஞ்சனை செய்யும்; அடியார்க்கு உதவும்:

### 26. வேல் -மந்திரம்

தியானத்துக்குச் சிறந்தது 'வேல் மந்திரம்'; வேல், வேல் எனப் பெரியோர் பலர் தியானித்துப் பல சித்திகளை அடைந்திருக்கிறார்கள். இதனால் 'மந்த்ர

வேல்' சித்திமன்னு செய்ய சத்தி: மெய்ஞ்ஞான அயில், 'சிவமஞ்செழுத்து' - என்றெல்லாம் வேல் சிறப்பிக்கப்பட்டுளது.

## *27. வேலின் பஞ்ச கிருத்தியம்*

'கண்ணாடியில் தடம் கண்ட வேல்' ஆதலின் தோற்றமும், வீரவாகு தேவரையும், நக்கீரரையும் காத்துஅளித்த காரணத்தால் திதியும், சூர சங்காரம் செய்ததால் சங்காரமும், அடியாரிடத்து வெம்மையை மறைத்துத் தண்ணருள் காட்டியும், பகைவரிடத்துத் தண்மையை மறைத்து வெம்மையைக் காட்டியும் ஒழுகுதலால் திரோ பவமும், அருணகிரியார் நாவிலும், குமரகுருபரர் நாவிலும் பொறித்து நலந் தந்த காரணத்தால் அனுக்கிரகமும் - ஆகப் பஞ்ச கிருத்திய சத்தி வேலிடத்து உண்டு என்பது விளக்கமாகின்றது.

## *28. வேலின் பெருமை*

'சிவமஞ்செழுத்து' என்று வேலைக் குறித்ததால் பஞ்சாக்ஷரத்துக்கு உள்ள பெருமை யெல்லாம் வேலுக்கு உண்டு; 'மறச்சிறுமி விழிக்கு நிகராகும்' (வேல் வகுப்பு) - என்றதால் வள்ளியம்மையின் திருக்கண் நோக்கத்தால் வரும் பேறுகள் அனைத்தையும் வேல் தரவல்லது; 'இறை கழற்கு நிகராகும்' (வேல் வகுப்பு) - என்றதால் சிவன் சேவடிக்கு உள்ள பெருமையெல்லாம் வேலுக்கு உண்டு என்னும் அரிய பெரிய உண்மைகளை அருணகிரியார் வெளியிட்டுள்ளார்.

## *29. வேலைத் தியானிப்பதும், அதனால் வரும் பயனும்*

அருணகிரியார் தாம் அனுட்டித்ததும் உலகோர்க்கு உபதேசித்ததுமான ஒரு விரதம் வேலின் தியானமே.

"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்"
"காமக்கள்ளை மொண்டுண் டயர்கினும் வேல்மறவேன்"

'வேல் பாடாதே... நாயேன் வாணாள் வீணே போகத் தகுமோ தான்' பின்னும், வேலாயுதம் பிறவிக்கு வித்தாகிய ஆசையை ஒழிக்கும்; யமனது கொடுமையைத் துடைத்துவிடும்; பிறப்பு இறப்பை நீக்கும் என்றும் விளக்கியுள்ளார்.

## 30. வள்ளியின் அருமைத் திருநாமங்கள்

அமுத சொரூபி, அமுதாசனத்தி, இன்பரச சத்தி, எயினர் குலோத்தமை, கலைக்கொம்பு, காவற்பாவை, கிராத குலதிலக மான், கிராதலஷ்மி, சந்தானமாது, சுசிஞானரம்பை, சோதிப் பிரகாசச் செயலாள், ஞானாதனத்தி, பட்டாள், பெண்கள்நாயகம், மிருகக்கரும்பு, மாயக்குறமாது, முத்தமிழ் மான், மூலஞான மங்கை, வேடபதிவ்ரு தை, வேதச் சொரூபி.

## 31. மயிலின் அலங்காரம்

அங்கவடி, மணி, சேணம் பூட்டிய குதிரைபோல அலங்காரங் கொண்டது: நாகப்பூண் பூண்டது: காலில் முத்து, பவளம் கோத்துக் கட்டிய அலங்காரம் பூண்டது.

## 32. மயிலின் ஒளி - கலாபத்தின் ஒளி

பொன்மலை போலவும், வெள்ளிமலை போலவும், மரகத மலை போலவும், கங்கை -யமுனை போலவும், ஒளிகளை வீசம் கலாபம்; அக் கலாபத்தை எட்டாத வெளிமட்டும் விரிக்கும் மயிலின் இறகு பல நிறங்களைக் கொண்டது.

## 33. மயிலின் ஆற்றலும் வேகமும்

(1) விநாயகரொடு பந்தயமிட்டு முருகர் உலகெலாம் மயிலின்மீது வலம்வந்தபோது, மயிலின் வேகத்தின் ஆற்றலைக்கண்டு விநாயகக் களிறு (அஞ்சிப்) பிளிறியதாம்.

(2) பீலியின் கொத்து அசைவதால் உண்டாகும் காற்றின் வேகத்தால் மேருமலையும் அசைந்தது; மயில் அடியிட்டுச் செல்லத் திசைகளில் உள்ள மலைகள் எல்லாம் பொடிபட்டுத் தூளாயின; அத்தூளினால் கடல் நீர் வறண்டு திட்டு (மேடு) உண்டாயிற்று; கந்அலங். பிரமலோகம் - கன கோளம் - கடற்கப்புறம் திசைக்கப்புறம் எல்லாம் மயில் திரியும், மயிலின் வேகத்தில் எட்டுத் திசையில் உள்ள நாகங்கள் அஞ்சி வீழும் ; மயில் ஆலித்து ஆதிசேடனது பணாமகுடங்களைத் தாக்க அந்நாகத்தின் மாணிக்கக் குவைகளும், நாகத்தின்மீது பள்ளிகொண்டிருந்த திருமாலும் அவரது சக்ராயுதமும் சங்கும் உருண்டு புரண்டு மயிலின் காலின் கீழ்க் கிடப்பன வாகும்.

(3)வாசுகியை வாயடக்கி ஆலும்; சேடனையும் வாசுகியையும் எடுத்து உதறும்;

## 34. மயிலின் உருவம்

திரிவிக்ரம அவதாரங்கொண்ட திருமால்போல ஆகாயம் வரையும் எட்டும்படியான பேருருவங்கொண்டது; இந்திரனது ஆயிரங் கண்களைப்போலத் தோகையிற் கண்கள் பல கொண்ட; ஆடலின் போது விரிந்த கலாப மயில் மந்த்ர ரூப நிலை கொண்டது.

## 35. உருவ வேறுபாடுகள்

(ஸ்ரீ தத்வநிதியில் கூறியுள்ளபடி)

### 1. ஞானசக்தி ஸுப்ரமணியர்

ஏகவக்த்ரம் த்விநேத்ரம் சஜடாமகுட ஸம்யுதம்
ச்வேதார்க்க புஷ்பமாலம்ச ஹேமரத்ன கிரீடினம்
சதுர்புஜைர் வஜ்ரசக்தி குக்குடா அபய தாரிணம்
திவ்வகந்தா நு லிப்தாங்கம் சுக்ல யஞ்ஞோப வீதினம்
சிவசக்தி ஞானபோகம் ஞானசக்தி ஸ்வரூபகம் ச்வேதவர்ண;

ஒருதிருமுகம், இரு கண்கள், ஜடை, வெள்ளெருக்குமாலை; ரத்நங்களிழைத்த பொன் கிரீடம், நான்கு திருக்கரங்களில் முறையே வேல், வஜ்ரம், கோழிக்கொடி, அபயம், வெண்மை நிறம்.

### 2. ஸ்கந்த சுப்ரமணியர்

சதுர்புஜம் த்விநேத்ரம் ச ச்வேத பத்மாஸனஸ்திதம்
குக்குட அபய வஜ்ராணி தததம் வரதம் கரே
கிஞ்சித் கேசா சிகாபத்த புஷ்பமாலாபி ராவ்ருதம்
மேகலாம்பர சம்வீதம் ரத்ன பூஷண பூஷிதம்
தூம்ரவர்ண ப்ரபம் ஸ்கந்தம் ப்ரபாமண்டல மண்டிதம்
ஸ்கந்தரூபம் இதம் ப்ரோக்தம்....தூம்ரவர்ணம்;

· இருகண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே கோழிக் கொடி, அபயம், வரதம், வஜ்ரம்; வெண்தாமரை ஆஸனத்தில் வீற்றிருத்தல்; தலைமயிரைச் சற்று தவழும் பூமாலை; அறையில் மான்தோல் அரைஞாண், ரத்ன ஆபரணம். புகைநிறம், ப்ரபைமுழுவதும் சூர்ய ஒளி வட்டம். புகை - சாம்பல் நிறம்.

## 3. தேவ ஸேநாபதி

எகவக்ரம் த்விநயனம் சங்க சக்ர வரா அபயாந்
சர்வாபரண சம்யுக்தம் திவ்யகந்தா நு லேபனம்
ச்யாம வர்ணம் ப்ரபும் சைவ சுக்லயஞோ பவீதினம்
சுச்மிதம் சாருவதனம் தேவ சேநாபதிம் பஜே
ச்யாமவர்ணம்

ஒரு திருமுகம், இருகண், நான்கு திருக்கரங்களில் சங்கு, சக்ரம், வரதம், அபயம், ஸர்வாபரணபூஷிதர், மணமுள்ள சந்தனப் பூச்சு, சாம்பல் நிறம், வெள்ளைப் பூணூல், அழகிய புன்னகை தவழும் முகம்.

## 4. சரவணபவர்

ஷட்புஜம் ச ஏகவதனம் பாலசூர்ய சமப்ரபம்
சர்வாபரண சம்யுக்தம் ஸிம்ஹநதம் ததம் பஜே
த்ரிநேத்ரம் பஸிதோத்தூலம் புஷ்பபாண இக்ஷுகார்முகம்
கட்கம் கேடம் ச வஜ்ரம் ச குக்குடத்வஜ தாரிணம்
சரஜன்ம சமாக்யாதம் (ரக்தவர்ணம்)

ஒரு திருமுகம், ஆறு திருக்கரங்களில், முறையே கரும்புவில், மலர் அம்பு, கத்தி, கேடயம், வஜ்ரம், கோழிக்கொடி, உதயரவியின் ஒளி, ஸர்வ ஆபரண மணிதல், சிங்க வாஹனம், மூன்று கண், விபூதிப் பூச்ச, நாணலில் உதித்தவர், ரக்தவர்ணம்.

## 5. கார்த்திகேயர்

த்ரிநேத்ரம் தசஹஸ்தம் ச மச்தகே பில்வதாரிணம்
சக்திம் சூலம் ததாசக்ரம் அங்குசம் அபயம் அன்யேக
வரதம் தோமரம் பாசம் சங்கம் வஜ்ரம் ச வாமகே
மயூர வாகனாருடம் சர் வாபரண பூஷிதம்
பால சூர்ய ப்ரதீகாசம் கார்த்திகேயம் சிவாத்மஜம்

ஒரு சிரத்தில் வில்வம் தரித்திருப்பது, மூன்று கண்கள், பத்து கரங்களில் முறையே வலப் பக்கத்தில் வேல், சூலம், சக்ரம், அங்குசம், அபயம், இடது பக்கத்தில் வரதம், தோமரம் எனும் ஆயுதம் (ஈட்டிபோல), பாசம், சங்கு, வஜ்ரம்; மயில் வாகனம், சகல ஆபரணங்கள், உதயரவியின் ஒளி, ரக்தவர்ணம்.

6. குமார :

சதுர்புஜம் ச ஏகவக்த்ரம் கரண்ட மகுடாந்விதம்
சக்திம் ச அபயதம் தக்ஷே சவ்யே வரத வஜ்ரகே
பத்மபுஷ்பம் தரம் கண்டே தேவம் பாலஸ்வரூபகம்
(ரக்தவர்ணம்)

ஒரு திருமுகம், அழகிய பூக்கூடை போன்ற கிரீடம், நான்கு திருக்கரங்களில் இடது பக்கத்தில் சக்திவேல், அபயம், வலது கரங்களில் வரதம், வஜ்ரம்; கழுத்தில் தாமரைப்பூ மாலை, குழந்தை உருவம்.

7. ஷண்முக

சக்திம் சரம் ச கட்கம் ச சக்ரம் பாச அபயௌ ததா
குக்குடம் ச தநு; கேடம் சங்கம் தத்தே ஹலம் வரம்
மயூர வாஹனோபேதம் சர்வலக்ஷண சம்யுதம்
ஜயாச விஜயாசைவ வாம தக்ஷண பார்சவயோ;
சர்வாலங்கார சம்யுக்தம் சர்வாபரண பூஷிதம்
ஷண்முகம் ச இதி விக்யாதம்
ரக்தவர்ணம்

ஆறு திருமுகம், பன்னிரு கைகளில் மறையே வேல், அம்பு, கத்தி, சக்ரம், பாசம், அபயம், சேவல், வில், கேடகம், சங்கு, கலப்பை, வரதம், ஸர்வ லக்ஷணராய், வலத்திலும் இடத்திலும் ஜயை விஜயை என்னம் இரு பத்நிமாருடன் மயில் வாஹனத்தமர்ந்து திவ்யாபரணாலங்க்ருதராய் வீற்றிருக்கும் கோலம்.

8. தாரகாரி

ஏக வக்த்ரம் த்ரிநயனம் கஜப்ருஷ்டோபரி ச்திதம்
ஷட்புஜம் ச அபயம் கட்கம் சக்திம் வாமதரே ததம்
கேடகம் ச அக்ஷமாலம் ச குக்கடம் வாமஹ்சதகே ரக்தவர்ண;
தாரகாரிம் பஜே க்யாதம்

ஒரு திருமுகம், மூன்று கண்கள், யானை முதுகில் அமர்ந்திருத்தல், வலது மூன்று கைகளில் அபயம், கத்தி, சத்திவேல், இடது மூன்று கைகளில் கேடயம், ருத்ராக்ஷமாலை, கோழிக் கொடி.

## 9. க்ரௌஞ்சபேத்தா

சதுர்புஜம் த்ரிநேத்ரம் ச ஸ்திதம் ஸிம்யாஸனோபரி
வரத அபய ஸம்யுக்த புஷ்பபாண இக்ஷு கார்முகம்
மயூரவாகனாரூடம் நமஸ்யே ரக்ஷண உன்முகம்
க்ரௌஞ்சபேத கரத்வந்த்வம் கிரௌஞ்ச பேதிச்வரூபகம

நான்கு திருக்கரங்களில் முறையே வரதம், அபயம், மலர்ப் பாணம், கரும்பு வில்; மூன்று கண்கள், மயில் வாஹனத்தில் ஸிம்ஹாசனத்தில் வீற்றிருத்தல், ரசக்ஷித்தலே நோக்கமாகக் கொண்ட திருமுகம், கிரௌஞ்சத்தைப் பிளந்த இரு கைகள், கிரௌஞ்ச பேதி சொரூபம், ரக்த வர்ணம்.

## 10. சிகிவாஹனர்

சதுர்புஜம் ச ஏகவக்தரம் த்ரிநேத்ரம் அபயம்வரம்
பாசாங்குச ததம் சைவ ஜ்வாலகேச சிகண்டகம்
இந்த்ரநீல ரதாரூடம் ரக்தோத்பல ஸமப்ரபம்
சதுர்தசாதி பி பவனம் சிகிவாஹனம் ஆசரேத் ரக்தவர்ண;

ஒரு திருமகம், மூன்று கண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே அபயம், வரதம், பாசம், அங்குசம் ஜ்வலிக்கும்; தோகையையுடைய மயில், இந்த்ரநீலரதத்தில் வீற்றிருந்து, செந்தாமரை ஒளி, பதினான்கு உலகங்களிலும் பவனி.

## 11. அக்நிஜாத ஸுப்ரமண்ய

த்விமுகம் ச அஷ்டபாஹும் சச்வேதம்வா ச்யாமகந்தரம்
ஸ்ருவா அக்ஷமாலாம் கட்கம் சஸ்வஸ்திகம் தசஷிணேகரே
குக்குடம் கேடகம் வஜ்ரம் ஆஜ்யபாத்ரம்து வாமகே
அக்நிஹோத்ரவிதிம் தேவம் அக்நிஜாதஸ்வரூபகம்
நீலவர்ண;

இரு திருமுகம், எட்டுக் கைகள், வலது நான்கு கைகளில் முறையே ஹோமம் செய்யும் கரண்டி, அக்ஷ மாலை, கத்தி, ஸ்வஸ்திகம்; இடது நான்கு கரங்களில் கோழி, கேடகம், வஜ்ரம், நெய் பாத்திரம்; அக்நியிற் ஜனித்த உரு. அக்நி ஹோத்ர விதியின் தேவர்.

## 12. சௌரபேய சுப்ரமணியர்

சதுர்வக்த்ர அஷ்டநயனம் புஜாஷ்ட கமலாஸனம்
குஞ்சிதம் வாமபாதம் ச ஸுஸ்திதம் தக்ஷிணம் பதம்
சக்த்யுத்பலே புஷ்பபாணம் அபயம் தக்ஷிணே கரே
வஜ்ரம் ச இக்ஷுதநு: சூலம் வரதம் வாமகே ததம்
பத்ம புஷ்ப நிபம் சைவ ஸௌரபேய ஸ்வரூபகம்
பாடலவர்ணம்

நான்கு திரு முகம், எட்டு கண்கள், தாமரையில் வீற்றிருத்தல், இடது கால் சற்று வளைவாகவும், வலக்கால் ஊன்றியும், வலது நான்கு கரங்களில் சக்தி, தாமரை, மலர்ப்பாணம், அபயம்; இடது நான்கு கரங்களில் வஜ்ரம், கரும்பு வில், சூலம், வரதம்; பாதிரிப்பூ வர்ணம்.

## 13. காங்கேய சுப்ரமணியர்

ஏகவக்த்ரம் த்ரிநயனம் தாடிமீ குஸுமப்ரபம்
கரண்ட மகுடோபேதம் குக்குடத்வஜ தாரிணம்
நீலோத்பலதரம் வந்தே மகராரூட மவ்யயம்
பரசும் பூர்ணகும்பம்ச ஸவ்யஹஸ்தேது தாரிணம்
அரணிம் குக்குடம் வாமே காங்கேய ஸமரூபகம்
பாடலவர்ணம்

ஒரு திரு முகம் மூன்று கண்கள், மாதுளம்பூ நிகர் ஒளி, அடர்ந்த மகுடம், கோழிக்கொடி தரித்தல், நீலோற்பலம் தரித்தல், அழிவில்லாதல்; வலது இரு கரங்களில் கோடலி, பூர்ணகும்பம், இடது கரங்களில் அரணிக் கட்டை, கோழி; பொன்மய உரு (பாதிரிப் பூவர்ணம்).

## 14. குஹசுப்ரமண்யர்

சதுர்புஜம் த்ரிநேத்ரம் ச ஹேமரத்ந கிரீடினம்
சூலம் வஜ்ரம் தரம் ஹவ்யே வரம் அபயகம் அன்யகே
ச்வேதவஸ்த்ரதரம் தேவம் ஸர்வேஷாம் ரக்ஷண உன்முகம்
ஜாயயா வாம பார்ச்வேது கல்யாணோத்ஸவ விக்ரஹம்
பாதாம்புஜம் ஹ்ருதி த்யாத்வா குஹரூபம் ஸமாச்ரயே

இரத்னங்களிழைத்த பொன் கிரீடம், மூன்று கண்கள், நான்கு திருக்கரங்கள், வலது இரு கைகளில் சூலம், வஜ்ரம்; இடது கரங்களில் வரம், அபயம், வெள்ளை வஸ்த்ரம், அனைத்தையும் ரக்ஷித்தலையே நோக்காகக் கொண்டுள்ளவர், பத்நி இடது பக்கத்தில், கல்யாண உற்சவ விக்ரஹர், ச்யாம (சாம்பல்) நிறம்.

## 15. ப்ரம்மசாரி சுப்ரமணியர்

த்விநேத்ரம் த்வி புஜம் சைவ பாலஸூர்யதரம் ப்ரபும்
தக்ஷபாகே தண்டஹஸ்தம் வஜ்ரவாமோருஹஸ்தகம்
சவ்ய அபசவ்ய பாதம் துஸ்திதம் வா குஞ்சிதம் துவா
சிகாய ஞ்ஞோபவீ தாட்யம் மௌஞ்சீ கௌ பீன சம்யுதம்
மேகலோபரி வட்யாணம் ரக்தபத்மோ பரி ஸ்திதம்
திவ்யரூபதரம் தேவம் ப்ரம்மசாரிணம் ஆச்ரயே
ரக்தவர்ண;

உதய ரவியின் ஒளியுள்ள ப்ரபு, இரு கண்கள், இரு கரங்கள், வலக்கையில தண்டம், இடது கையில் வஜ்ரம், வலது பாதம் ஊன்றியும், இடது பாதம் சற்று வளைந்தும், குடுமி, பூணூல், மான்தோல், கோவணம், இடுப்பில் ஒட்டியாணம், சிவந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மசாரி.

## 16. தேசிய சுப்ரமணியர்

ஷட்புஜம் ச ஏகவதனம் கரண்ட மகுடாந்விதம்
சக்திஹஸ்த த்வயம் ச ஏவ ஜப மாலாதரம் சுபம்
மயூரவாஹனாரூடம் வர அபய காராம்புஜம்
இத்யேவம் விதிவத் த்யாயேத் சிவதேவச்ய தேசிகம்
ரக்தவர்ண;

ஆறு திருக்கரங்கள், ஒரு திருமுகம், பூக்கூடை கவிழ்த்தது போன்ற அடர்ந்த கிரீடம், தாமரைத் திருக்கரங்களில் சக்தி வேல், ருத்ராக்ஷ மாலை, வரதம்,அபயம்.

*****

**முருகவேளின் உருவவழிபாடுகள் பதினாறு வகையன:**

(1) **ஞான சத்திதர மூர்த்தி:** ஒருமுகம், இரண்டு திருக்கரம், வலது திருக்கரத்தில் சத்திவேல் - இச்சை, ஞானம், கிரியை எனும் மூன்று இலைகொண்ட வேல்; பகைவரை அழிக்கும் இடது கை தொடையில் அமைந்திருக்கும். இதுவே திருத்தணிகை முருகன் மூலவர் திருவுருவம்.

(2) **ஸ்கந்த மூர்த்தி ஒரு திருமுகம்:** இரண்டு திருக்கரம். மழுப்படை போன்ற கோவணத் தண்டு வலக் கரத்தில்; இடுப்பில் இடது கரம் அமைந்திருக்கும். இது பழநித் தண்டாயுதபாணியின் திருக்கோலம் போலும்.

(3) **ஆறுமுக தேவ சேனா பதி:** ஆறு திருமுகம், பன்னிரண்டு திருக்கரங்கள், ஒருகை வலதுதொடையில் - தேவ சேனையைத் தழுவி மார்பை அணைப்பதுபோல; ஒருகை அபயத்திருக்கை. ஏனைய பத்துத் திருக்கரங்களில் கேடயம், வாள், சூலம், குலிசம், வேல், வில், கதை, சேவல்,தாமரை, அம்பு.

(4) **சுப்பிரமண்ய மூர்த்தி** : ஒரு திருமுகம், இரண்டு திருக்கரம். இடதுகை இடுப்பில்; வலதுகை அபயம். இது திருவிடைக்கழி முருகன் திருவுருவம் போலும்.

(5) **களிற்றூர்திப் பெருமான்:** (கஜாரூடமூர்த்தி). ஒரு திருமுகம்; இரு விழிகள்; நான்கு திருக்கரங்கள்; இடப்பக்கம் - வரதம் ஒரு திருக்கரம், சேவல் ஒரு திருக் கரத்தில்; வலது புறத்தில் - வேல் ஒரு திருக்கரத்தில், வாள் ஒரு திருக்கரத்தில்.

(6) **சரவணபவ மூர்த்தி:** திருமுகம் ஆறு; திருக்கரங்கள் பன்னிரண்டு, திருக்கரங்களில் விளங்குவன; வேல், கேடயம், கண்டாமணி, தாமரை, கோழிக்கொடி, கதை, உளி, அம்பு, வாள், வரதம், அபயம், வில்.

(7) **கார்த்திகேய மூர்த்தி:** திருமுகம் ஆறு; திருக் கரங்கள் ஆறு; இடது திருக்கரங்களில் - குலிசம், கேடகம், வரதம்; வலது திருக்கரங்களில் - வேல், வாள் அபயம், இம் மூர்த்தி பயம் (பிறவிப்) பிணி இவைகளை நீக்குவர்.

(8) **குமாரசுவாமி:** ஒரு திருமுகம்; நான்கு திருக்கரம். வலதுபுறத்தில் வேலும் வாளும்; இடது புறத்தில் சேவற் கொடியும், கேடயமும், நகைமுக வள்ளி சமேதர்.

**(9) ஆறுமுக சுவாமி**: ஆறு திருமுகங்கள்; பன்னிரண்டு திருக்கரங்கள், மயில்வாகனம், தேவசேனை - வள்ளி சமேதர். வலது திருக்கரங்கள் ஆறில் - வேல், அம்பு, வாள், திகிரி, (சக்கரம்) பாசம், அபயம்; இடது திருக்கரங்கள் ஆறில் - குலிசம், வில், கேடயம், சேவல், அங்குசம், வரதம்.

**(10) தாரகாந்தக மூர்த்தி**: ஆறு திருமுகம். பன்னிரண்டு திருக்கரங்கள்; வரதம், சேவற்கொடி, கேடகம், அங்குசம், பாசம், குலிசம் அபயம், வாள், சூலம், சக்கரம், தண்டம், வேல் திருக்கரங்களில் விளங்கம்.

**(11) சேனாபதி மூர்த்தி** ஆறு திருமுகம், பன்னிரு திருக்கரம், அபயம், முசலம், வாள், சூலம், வேல், அங்குசம் - வலது திருக்கரங்களில்; வரதம், குலிசம், வில்,தாமரை, தண்டம், (கதை) (பாசம்) (அம்பு) - இடது திருக்கரங்களில்

**(12)பிரம சாத்த மூர்த்தி** ஒரு திருமுகம்; நான்கு திருக்கரம், வரதம், குண்டிகை (கமண்டலம்) - இடது கரங்கள் இரண்டில்; அபயம். ருத்ராக்ஷமாலை (அக்கவடம்) வலது திருக்கரங்கள் இரண்டில்.

**(13) வல்லி கல்யாண மூர்த்தி**: ஒரு திருமுகம்; நான்கு திருக்கரம்; வல்லி வலது பாகத்தில்; வலக் கரங்கள் - அபயம், (அக்கவடம்) ருத்ராக்ஷமாலை; இடக்கரங்கள் ஒன்றில் (ரத்னகும்பம்); ஒருகரம் (கடியில்) இடப்பில், திருமால் நீர் வார்த்துத் தத்தம் செய்வது.

**(14) பால சுப்பிரமணிய மூர்த்தி**: ஒரு திருமுகம்; இரண்டு திருக்கரம். இடது கை இடுப்பில் அமைந்திருக்கும்; வலது கையில் தாமரை மலர்; திருவடியிற் கிண்கிணி; பாலஉருவம்.

**(15) கிரவுஞ்ச பேத மூர்த்தி** : ஆறு திருமுகம்; எட்டு திருக்கரங்கள். வலது நாலு கரங்களில் வேல், வாள், அம்பு, அபயம்; இடது நாலு திருக்கரங்களில் குலிசம், கேடகம், வரதம் வில்.

(16) **மயில் வாகன மூர்த்தி** : ஒரு திருமுகம்; நான்கு திருக்கரங்கள். வலது இரண்டு திருக்கரங்கள் - வேலும் அபயமும்; இடது இரண்டு திருக்கரங்கள் - வரதம், குலிசம்; மயில் ஊர்தி.

